॥ श्रीगुरुभ्यो नमः ॥

# தேன் மொழிகள்

ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு

## ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகளவர்கள்

அருளியது.


தொகுத்தவர் :

திருநெல்வேலி

R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் M. A., B. L.



ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்

ஸ்ரீரங்கம்

1958

ரூ. 3/-

॥ श्रीगुरुभ्यो नमः ॥

तत्तादृक्प्रथितमहामहिमभूमिभिः मूर्तिमन्मेधाप्रतिभाभिः विद्वद्-बृन्दविस्मापकपाण्डित्यवैखरीविराजमानैः शिष्टजनसंस्तूयमानसत्कर्म-सदाचारपरायणैः श्रीशृङ्गगिरिव्याख्यानभद्रपीठाधिपैः आचार्यप्राचार्यैः छात्रलोकानुजिघृक्षया समादृतदेशाटनसमये, तत्र तत्र समागतान् विनेयवरान् अभ्युदयनिःश्रेयसपात्रमाधातुकामैः उपदिष्टान् परमार्थान् यथामति सङ्गृह्य, माधुकरवृत्त्या तान् एकत्र संयोज्य, 'एकः स्वादु न भुञ्जीत' इत्यभियुक्तोक्तिमनुसृत्य तिरस्कृतसुधामाधुर्यगर्वां श्रीमदाचार्यमुखारविन्दविनिस्सृतां वाङ्मरन्दझरीं, भगवता महा-विष्णुना संसाधितसुधास्वादनमिवामरबृन्दस्य परानप्यास्तिकसहोदरान् भोजयितुकामैः शालिवाटीपुरमधिवसद्भिः श्रीमत्कृष्णस्वामिशर्मभिः सुललितं सुसन्दर्भं सुगमं च गुरुशिष्यसंवादरूपेण सङ्ग्रथ्य संप्रेषितः प्रबन्धः मामतितरामानन्दयति स्म ॥

आजानसिद्धविनयविवेकादिगुणशालिभिः विशेषतो गुरुप्रसाद-लब्धवैदिकश्रद्धासाधनैः ब्रह्मश्रिया विराजितैः कृष्णस्वामिशर्मभिः साक्षादाचार्यमुखावाप्ततत्त्वार्थान् यथावत् संधार्य चित्ते, अनुचिन्त्य वारं वारं, कृत्वा च यथासंभवमात्मनोपयोगिनः, परोपकारबुद्ध्या

ग्रन्थस्यास्य लेखनप्रयत्नः योऽयमाचरितः, स तु सर्वजनश्लाघ्यतायाः परां कोटिमारोहतीत्यत्र न संदेहलेशोऽपीत्यावेदयति ॥

| | |
|---|---|
| युववत्सरीयश्रावण- | श्रीमदाचार्यकृपापात्रं तदनुगृहीत- |
| कृष्णसप्तम्याम्, | सदाचारप्रवर्तनप्रवीणपदलाञ्छनः |
| नञ्जनगूडुपुरीतः | श्रीकण्ठशास्त्री |

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# முகவுரை.

ஸ்ரீ சிருங்கேரி வியாக்யான பீடத்தையலங்கரித்திருப்பவர்களும், ஒருவராலும் வர்ணித்துக்கூறவியலாத ப்ரஸித்தமான மிகுந்த மஹிமை வாய்ந்தவர்களும், மேதையும் ப்ரதிபையும் உருவெடுத்து வந்தவர்களும், வித்வான்களும் ஆச்சர்யப்படத்தக்க பாண்டித்யமுள்ளவர்களும், சிஷ்டர்களும் கொண்டாடும்படியாக ஸத்கர்மாவையும், ஸதாசாரத்தையும் அநுஷ்டித்துக் காட்டுகிறவர்களும், ஆசார்யர்களுக்கும் ஆசார்யர்களுமான ஸ்ரீ மஹாஸ்வாமிகள் (ஸ்ரீ சந்திரசேகரபாரதீஸ்வாமிகள்) சிஷ்ய ஜனங்களை அநுக்ரஹிப்பதற்காக யாத்திரை செய்யும் ஸந்தர்ப்பத்தில், ஆங்காங்கு தன்னிடம் வந்த சிஷ்யர்களுக்கு அப்யுதயமும் நிச்ரேயஸமும் ஏற்படுவதற்காக அநேக விஷயங்களை உபதேசித்தார்கள். தேனீக்கள் ஒவ்வொரு புஷ்பமாக உட்கார்ந்து மகரந்தத்தையெடுத்து ஓரிடத்தில் ஒன்று சேர்த்து தேனை ஆக்குவதுபோல, அந்த உபதேசங்களையெல்லாம் ஒன்று சேர்த்து, "ரஸமான பொருளைத்தான் ஒருவனை உட்கொள்ளக்கூடாது" என்ற உலக ந்யாயத்தை ஒட்டி, மஹாவிஷ்ணு மோஹினி உருவமெடுத்து தேவர்களுக்கு அமிருதத்தைப் புகட்டினதுபோல, ஆசார்யாளுடைய முகார

விந்தத்திலிருந்து வெளிவந்த வசனுமிருதத்தை எல்லா ஆஸ்திகர்களும் பருகுவதற்காக, திருநெல்வேலியில் வஸிக்கும் ஸ்ரீமான் R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள் நன்கு புரியும்படி குரு சிஷ்யஸம்வாதரூபமாக எளிய நடையில் கோர்வையாகத் தொகுத்திருக்கிற இந்நூலைப் பார்த்து மிகவும் ஆனந்தமடைந்தேன்.

இயற்கையாகவே விவேகம், விநயம் முதலான நற்குணங்கள் அமைந்தவரும், ஸ்ரீ ஸத்குருவின் அருளுக்குப் பாத்திரமானவரும், மிகுந்த சிரத்தையுடன் வைதிக ஸாதனங்களையநுஷ்டித்துவருபவருமான ப்ரஹ்மஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள் ஸ்ரீமதாசார்யாளுடைய முகத்திலிருந்து தான் நேராகவே கேட்ட உபதேசங்களைத் தன் மனதில் தரித்து, அடிக்கடி அதைச் சிந்தித்து தன் வாழ்க்கையிலும் அதைக் கடைப்பிடித்து, மற்றவர்களுக்கும் உபகாரமாகும்படி கிரந்த ரூபமாக வெளியிட்ட இம்முயற்சியை எல்லோரும் மிகவும் கொண்டாடுவார்களென்பதில் கொஞ்சமேனும் ஸந்தேஹமில்லை.

யுவ-ஸ்ரீ சிராவண
கிருஷ்ணஸப்தமி
நஞ்சன்கூடு.

ஸ்ரீமதாசார்ய கிருபாபாத்ரம், ஸதாசார
ப்ரவர்த்தனப்ரவீண
ஸ்ரீ கண்ட சாஸ்திரி.

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# முன்னுரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸன்னிதானம் ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகளவர்கள், பல பக்தர்களுடன் பல ஸமயங்களில் பல விஷயங்களைப்பற்றி ஸல்லாபம் செய்யும்போது, சில ஸந்தர்ப்பங்களில் நானும் கூடவிருந்து அனுபவிக்கும் மஹத்தான பாக்கியம் பூர்வஜன்ம புண்யத்தினால் கிடைத்தது. அவர்களின் திவ்ய முகாரவிந்தத்திலிருந்து வெளிவந்த அபூர்வமான தத்வங்களை, எல்லாரும் தெரிந்துகொண்டு கிருதார்த்தர்களாக வேண்டுமென்ற அவாவின்பேரில், அவைகளில் சிலவற்றை விஷயவாரியாகப் பிரித்துத் தொகுத்து எழுதிவைத்தேன். சில நண்பர்கள், நான் எழுதினதைப் பார்த்து தங்கள் தங்கள் உபயோகத்திற்காக கைப்பிரதியாக எழுதிக்கொண்டார்கள். இன்னம் சில நண்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, கும்பகோணத்தில் பிரசுரமாகும் 'ஆர்யதர்மம்' என்ற பத்ரிகையில் பிரதிவாரமும் கொஞ்சம் கொஞ்சமாக பிரசுரித்துவந்தேன். அவைகளை ஒருங்கே சேர்த்து புஸ்தகரூபமாக வெளியிடுவதற்கு, பலவித காரணங்களினால் தாமஸம் ஏற்பட்டுவிட்டது. ஆனாலும், இதன் ஆங்கில பிரதி, சென்னை லா ஜர்னல் பிரஸ்

மூலமாய் 1935ல் "From the Master's Lips" என்ற பெயராலும், இப்பால் 1956ல் பம்பாய் சேதனா கம்பெனியாரால் "Dialogues with the Guru" என்ற பெயராலும், பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது. இப்பொழுதும் இந்த தமிழ் பிரதி வெளியாவதற்கு முக்கிய காரணம் என் பரம நண்பரும், மேல்மங்கலம் ஆஸ்திக ஸமாஜ ஸபா கார்யதர்சியுமான ப்ரஹ்மஸ்ரீ சிவராமகணபதி கனபாடிகளவர்களின் விசேஷ ஊக்கமும் த்ருடமான ஸங்கல்பமும்தான் என்று சொல்லவேண்டும்.

முன் 1935ல் வெளியிட்ட இதன் ஆங்கில பதிப்பிற்கு ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸம்ஸ்தானம் ஸர்வாதிகாரியாயிருந்த ஸதாசாரப்ரவர்த்தனப்ரவீண குருஸேவாப்ரவீண ப்ரஹ்மஸ்ரீ ஸ்ரீகண்டசாஸ்திரிகள் அவர்கள் ஸம்ஸ்கிருதத்தில் அனுக்ரஹித்த அநுமோதனப் பத்திரிகையையும் அதன் தமிழ்மொழி பெயர்ப்பையும் இதன் முகவுரையாக அமைக்கப்பட்டிருக்கிறது.

இதை அச்சுக்கு லாயக்காகச் செய்து அவசியம் போல் திருத்தி சரிபார்த்துக்கொடுத்த ஸ்ரீரங்கம் ஸ்ரீ சங்கரகுருகுலம் வித்வான் ப்ரஹ்மஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகளுக்கும் இவ்வளவு நேர்த்தியாக மிகச்சிரத்தையுடன் அச்சடித்துக்கொடுத்த ஸ்ரீ ரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சுக்கூடத்தாருக்கும் என் கிருதக்ஞதையை தெரிவித்துக் கொள்கிறேன்.

R. கிருஷ்ணஸ்வாமி அய்யர்.

# விஷய அட்டவணை.

உ

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# தேன் மொழிகள்.

## அத்யாயம் 1

## ஹிந்து மதம்

### 1. ஸநாதந தர்மம்

ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்கள் தென்னிந்தியாவில் விஜயம் செய்துவந்த ஸந்தர்ப்பத்தில் ஒரு கிராமத்தில் தங்கியிருந்த ஸமயம் அவர்களுடைய அநுக்ரஹத்தைப்பெறக் கருதி ஓர் ஐரோப்பிய கனவான் அவர்களை தர்சிக்க வந்து சேர்ந்தார். அவர் வேதாந்த விஷயமாக சில ஸாமான்ய கிரந்தங்களை வாசித்தவராகவும் அவைகளில் சொல்லப்படும் விஷயங்களில் மனது ஈடுபட்டவர்போலும் தெரிந்தது. அப்பொழுது சில நிமிஷம் பொதுயோகக்ஷேமங்களைப்பற்றி ஸம்பாஷணை நடந்த பிறகு அக்கனவான் வினவினார்:—

**கனவான்:** தங்கள் ஹிந்து மதத்தில் வெகு தத்துவங்கள் இருப்பதாக நானும் சில நண்பர்களும் நன்கு தெரிந்துகொண்டிருக்கிறோம். தங்களை ஹிந்துக்கள் என்று சொல்லிக்கொள்ள வேண்டும் என்ற அவாவும் எங்களுக்கு உண்டு. அவ்விதம் சேர விரும்புகிறவர்களை உங்கள் மதத்தினருடன் சேர்த்துக்கொள்ள தாங்கள் அனுமதிப்பீர்களா?

ஸ்ரீ மஹாத்மாஜீ: ஹிந்து மதம் அறிவுள்ள யாரையும் சேரக்கூடியதே. ஆனால் புதிதாய்ச் சேர்த்துக்கொள்வதென்பது கிடையாது.

நி: ஏன் அப்படி? தங்கள் மதம் ஒப்பற்றதென்பதும் எல்லா மனிதர்களுக்குமே உபயோகப்படக்கூடியதென்பதும் தங்கள் கொள்கையாயிருந்தால் சேர விரும்பும் மற்ற மதத்தினரைச் சேர்த்துக்கொள்வது நியாயமல்லவா?

ம: அது அவசியமில்லை. ஒருவனை ஒரு மதத்தில் சேர்க்கிறதென்றால் அவன் அந்த மதத்தில் முன்னமே இல்லாதவனாக இருந்தால்தான் சேர்க்கிறதென்பது முடியும் சேர்க்க அவசியமும் ஏற்படும்.

நி: எனக்குத் தெளிவாக அர்த்தமாகவில்லை. ஹிந்துவாகவேண்டும் என்ற எண்ணத்தினாலேயே அவன் ஹிந்துவாகி விடுகிறான், ஹிந்துவாவதற்கென்று வேறு சடங்குகள் தேவையில்லை, என்பது தங்கள் அபிப்பிராயமா?

ம: அப்படியல்ல. எல்லாருமே, அவர்கள் எண்ணம் எப்படியிருந்தாலும், ஹிந்துக்களாகவே யிருக்கிறார்கள்.

நி: அதெப்படி?

ம: ஹிந்து மதம் என்ற பெயர் கொஞ்சநாளாக எங்கள் மதத்திற்கு வழங்கப்பட்டுவந்தபோதிலும், அதற்கு ஸநாதனதர்மம் என்பதுதான் உரித்தான

பெயர். அது ஒரு குறிப்பிட்ட நாளில் ஆரம்பிக்கப் பட்டதில்லை. ஒரு குறிப்பிட்ட பெரியோரால் ஏற்படுத் தப்பட்டதுமில்லை. ஸநாதநமானதினால் எல்லா விடங்களுக்கும் பொதுவானது. அதற்கு தேசத்தினால் வரம்பு கிடையாது. ஜன்மம் எடுக்கிற யாரும் அதைச் சேர்ந்தவர்களே. தம்மை அம்மதத்தில் சேர்ந்தவர் களாகக் கருதினாலும், கருதாவிட்டாலும், அதுவே அவர்களின் மதம். நெருப்பின் ஸ்வபாவம் சுடுவது என்பது. இது வாஸ்தவமென்பதற்கு நம்முடைய ஸம்மதத்தை அபேக்ஷிக்கிறதில்லை. இதை வாஸ்தவ மென்று நம்பி நாம் நடந்து கொண்டால் நமக்கு க்ஷேமம், இல்லையேல் நஷ்டம் நம்முடையதே. எப்படி யும் அந்த ஸ்வபாவத்திற்கு மாறுதலாவது ஹானி யாவது கிடையாது. அது எப்பொழுதும் எங்கேயும் உண்மையே. இவ்விதமேதான் எங்கள் ஸநாதந தர்மமும்.

க: தாங்கள் சொல்கிறபடி எல்லா மனிதர் களுமே ஹிந்துவென்றால், பலவித நிர்ப்பந்தம் செய்யும் ஜாதிக்கட்டுப்பாட்டுக்கு என்ன நியாயம்?

ம: எல்லாரும் ஹிந்துக்கள் என்றும் எல்லாருக் குமே நன்னடத்தையை போதிக்க ஹிந்துமதம் தயா ரென்றும் சொன்னேனே தவிர, அந்த போதனுக்ரமம் எல்லாருக்கும் ஒரே ரீதியாக இருக்குமென்று நான் சொல்லவில்லை ஸ்வபாவத்தினாலும், வளர்ப்பினா லும், ஸந்தர்ப்பங்களினாலும், பரம்பரையினாலும், பூர்வ ஜன்ம வாஸனையினாலும், மற்றும் பலவித

காரணங்களாலும் மனிதர்களுடைய தன்மை வேறு பட்டுக் கிடப்பதால் எல்லாருக்குமே ஒரே விதமான நடத்தையைப் போதிப்பது உசிதமாகாது. இந்தத் தத்வத்தை வைத்தே, தர்மத்தை ஸாமான்ய தர்மம் என்றும் விசேஷ தர்மம் என்றும் இரண்டு விதமாகப் பிரித்திருக்கிறார்கள். எல்லா மனிதர்களும் அனுஷ்டிக்க வேண்டியது ஸாமான்ய தர்மம். இதுவும் விசேஷ தர்மமும் சேர்ந்து ஜாதிக்குள்ளடங்கினவர் களால் அனுஷ்டிக்கப்பட வேண்டும்.

க: ஜாதி தர்மங்களும் ஆத்மசுத்தியைக் கொடுக் குமென்று இருந்தால், அந்த நன்மையை ஜாதியில் சேராதவர்களும் அடைந்தால் என்ன ?

ம: தாஹமுள்ளவனுக்கு ஜலம் ஸுகத்தைத் தரும் என்பதற்காக, கடுமையான ஜ்வரத்தினால் நாக்கு உலர்ந்து போகிறவனுக்கு ஜலத்தைக் கொடுத்து விடலாமா ?

க: தங்கள் திருஷ்டாந்தம் சரியாகத் தோன்ற வில்லை. ஒரு ஜாதிக்குச் சொல்லப்பட்டிருக்கிற ஒரு தர்மமானது மற்றொரு ஜாதியாராலாவது ஜாதியில்லா தவராலாவது அனுஷ்டிக்கப்பட்டால் கெடுதலை உண்டு பண்ணும் என்று எப்படிச் சொல்வது ?

ம: இப்படி நினைக்க வேண்டும். அதாவது, ஒரு ஜாதிக்குச் சொல்லப்பட்டிருக்கிற ஒரு தர்மம் மற்றவர் களுக்கும் அனுகூலம்தான் என்று எப்படிச் சொல்வது என்று நினைக்க வேண்டும். ஒரு ஜாதிக்கு அந்த

தர்மத்தை விதித்திருப்பதிலிருந்தே அது மற்ற ஜாதிக்கு ஏற்படாத விசேஷ தர்மம் என்று தெரிந்து கொள்ளவேண்டும். ஒரு தர்மமானது ஹிதத்தைக் கொடுக்கும் என்பதை நமக்கு சாஸ்திரங்களே போதிக்கிறபடியால், அந்த தர்மம் யாருக்கு ஹிதத்தைக் கொடுக்கும் என்று சொல்கிற அம்சத்தில் மாத்திரம் அதே சாஸ்திரங்களை உதறி விடுவது உசிதமாகாது. எங்கள் மதமும், நன்னடத்தையை போதிக்க முன் வரும் எந்த மதமும், யோக்கியதை அதாவது அதிகாரம் என்பதைத் தீர்மானித்துக் கொண்டுதான் ஒருவனுக்கு போதிக்க முடியும். ஜாதிக்கட்டுக்கு உட்பட்டவர்கள் விசேஷ தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டியவர்கள். இதரர்கள் ஸாமான்ய தர்மத்தை மாத்திரம் அனுஷ்டிக்க வேண்டியவர்கள். மேலும் தர்மத்தை அனுஷ்டானம் செய்யும் விஷயத்தில், அதிகார ஸம்பந்தான யோக்கியதை யாது என்பதையும் அந்த தர்மத்தை விதிக்கும் சாஸ்திரங்கள்தான் சொல்ல வேண்டும்.

க: தாங்கள் சொல்லுகிறபடி ஹிந்து சாஸ்திரங்கள் எல்லா மனிதர்களுக்காகவுமே ஏற்பட்டவைகளென்றும், எல்லா மனிதர்களுமே தங்கள் மதத்தில் சேர்ந்தவர்களாகவே பிறக்கிறார்களென்றும் வைத்துக்கொண்டால், இதர மதங்கள் இருப்பதற்கு என்ன ஸமாதானம்?

ம: தாங்களும் ஹிந்து மதத்தில் உள்ளடங்கினவர்களே என்று அவர்கள் தெரிந்துகொள்ளாதது

தான் அவர்களின் தோஷம். இதர மதங்களிலுள்ள எல்லாவித மேலான தத்வங்களும் ஹிந்து மதத்தில் இருக்கின்றன. அதிலும் ஸாமான்ய தர்மத்திலேயே அடங்கிவிடுகின்றன.

க: எப்படியும் நீங்கள் மதத்திற்கு தாங்கள் கொடுத்துக்கொள்ளும் ஸ்தானம் மிக உயர்ந்ததாகத் தோன்றவில்லையா? இதர மதஸ்தர்கள் இதை ஒப்புக் கொள்வார்களா?

ம: இதரர்கள் ஒப்புக்கொள்வார்களா என்பதைக்கொண்டு நிர்மாணிக்கும் விஷயமல்ல இது. ஒரு பதார்த்தத்தின் பெருமை அப்பதார்த்தத்தைச் சேர்ந்ததை தவிற மதிப்பிடுகிறவர்களால் ஏற்படுவதல்ல. நான் ஹிந்து மதத்திற்குக் கொடுக்கிற ஸ்தானம் மிகவும் மேலானதென்று கருதுகிறீர்கள். வாஸ்தவத்தில் அதைக் குறைப்பது ஸாத்தியமில்லை என்பதை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

க: எப்படி?

ம: திருஷ்டாந்தத்திற்காக கிருஸ்துவமதத்தை எடுத்துக்கொள்வோம். கிருஸ்துவினிடம் விசுவாஸம் இருந்தால்தான் ஸத்கதி கிடைக்கும் என்பது வாஸ்தவமாயிருந்தால் அவர் பிறப்பதற்கு முன் பிறந்து இறந்து போன அனந்தகோடி ஜனங்களுக்கும் ஸத்கதியில்லையென்று ஒப்புக்கொள்ளவேண்டிவரும். இது அவர்கள் குற்றமா? தங்களுக்கு முன் கிருஸ்து பிறக்காததற்கு அவர்கள் எப்படி ஜவாப்தாரியாவார்கள்? அப்படியே,

கிருஸ்து இருந்த காலத்திலும் அதற்குப் பிறகும் கிருஸ்து என்று ஒருவர் உண்டென்று காதால்கூட கேட்காதவர்களுக்கெல்லாம் ஸத்கதி கிடையாதென்று சொல்லவேண்டும். தவிரவும், ஸத்கதிக்கு அவசிய ஸாதனமாயிருக்கிற ஒரு அம்சத்தை பகவான் வெகு நாள் வெளியிடாமல் வைத்திருந்து, திடீரென்று ஒரு நாள் வெளியிட்டாரேயானால், அது நியாயமாகுமா? அந்தத் தேதிக்கு முன் பிறந்தவர்களிலும் ஸத்கதியை யடையக்கூடிய ஆத்மாக்கள் இருப்பார்களென்பதை பகவான் மறந்து விட்டாரா? மறக்கவில்லையானால், அவர்களுக்கும் ஸத்கதி ஸாதனம் அமைத்துக்கொடுத்தாரா? அப்படியானால், அந்த ஸாதனத்தில் கிருஸ்துவினிடம் விசுவாஸம் என்ற அம்சம் சேர்ந்திருக்க நியாயமில்லையே! ஆகையால் முதல் மனிதனை ஸ்ருஷ்டி பண்ணின காலமொன்று உண்டு என்று வைத்துக் கொண்டால் அந்த முதல் மனிதனுக்கும் ஸத்கதி ஸாதனம் தேவையாயிருந்திருக்குமாதலால், இதை அவனுக்குத் தெரிவிக்க வேறுயாரும் இல்லாததால், அக் காலத்தில் இருந்த மற்றொருவரான பகவான் தான் அவனுக்கு அந்தக் காலத்தில் உபதேசித்திருக்க வேண்டும் என்று ஒப்புக்கொள்வதுதான் யுக்திக்குப் பொருத்தமாகும். ஹிந்து மதத்தில் ஸ்ருஷ்டிக்கு ஆரம்பமுண்டென்பதை ஒப்புக் கொள்ளாததினால், ஸத்கதி ஸாதனத்தைப் போதிக்கும் வேதமும் உலகமும் ஸமகாலத்தில் தோன்றினவைகள் என்றும், அவ் வேதங்கள் பகவானிடமிருந்தே வெளிப்பட்டவை

என்றும் சொல்கிறோம். இப்படியல்லாமல், பின்னொரு காலத்தில், ஸ்ருஷ்டிக்கு வெகுகாலம் கழித்து, பகவானைத் தவிர வேறு ஒரு பெரியோரிடமிருந்து, ஸத்கதி ஸாதனங்கள் ஏற்பட்டதாய்ச் சொல்லும் எந்த மதமும் அநித்யமாயும் அரைகுறையாயும் தானிருக்கும்.

## 2. வேதப் பிராமாண்யம்.

க: தாங்கள் சொல்வது ஸரி. ஆனால், ஸத்கதிக்கு எது ஸாதனமென்பதை மனிதனால் தானாகவே அறிந்துகொள்ள முடியாதென்று வைத்துக்கொண்டால் மாத்திரம் தானே அதை அவனுக்கு உபதேசம் செய்ய பகவானையோ அல்லது வேறு யாரையோ தேடவேண்டும்?

ம: ஸாதனம் கண்டுபிடிக்கும் முன்னர், ஸாதிக்க வேண்டியது ஒன்று உண்டு என்று தெரியவேண்டாமா? ஒருவன் அந்த ஸாத்ய ரூபமாகவாவது, அல்லது அந்த ஸாத்யத்தை அனுபவித்தவனாகவாவது இருந்து அப்படி ஒன்று உண்டு என்று நமக்குத் தெரியப்படுத்தாமல் போனால், எப்படி அது நமக்குத் தெரியும்? இது நம் பிரத்யக்ஷத்தினால் தெரிந்து கொள்ளக்கூடியதில்லையே? தவிரவும், ஒரு தர்ம மார்க்கமானது ஸத்கதிக்குக் கொண்டுபோய் விடும் என்பது நமக்கு எப்படித் தெரிய முடியும்? அந்த மார்க்கத்தில் நடந்துபோய் லக்ஷ்யத்தை யடைந்தவன் நமக்குச் சொல்லலாம்: அந்த மார்க்கத்தில் நடக்க

அவசியமன்றியிலேயே மேல்பதவியில் நின்றபடி மார்க்கத்தையும் லக்ஷ்யத்தையும் ஸமகாலத்தில் பிரத்யக்ஷமாய் அறிந்திருக்கிற ஒருவன் சொல்லலாம்; அல்லது அந்த லக்ஷ்யமாகவே ஒருவன் இருந்துவிட்டாலும் தனக்கு ஸாதனம் என்னவென்பதைச் சொல்லலாம். இந்த மூன்று விதங்களில், முதலாவது விதத்தில், லக்ஷ்யத்தையுத்தேசித்து வழி நடக்க ஆரம்பிக்குமுன், அவ்வழி லக்ஷ்யத்தில் கொண்டுபோய் விடுமென்று அவனுக்கு எப்படித் தெரிந்தது என்ற கேள்வி மறுபடியும் எழும். இரண்டாவது விதத்தில், மார்க்கத்தையும் லக்ஷ்யத்தையும் ஸமகாலத்தில் அறியும் யோக்யதை அவனுக்கு எப்படி ஏற்பட்டதென்ற கேள்விக்கு ஸமாதானம் சொல்லவேண்டும். ஆகையால் லக்ஷ்யமாயிருக்கிற பகவானிடமிருந்தே மார்க்க விஷயமான ஞானம் வெளிவந்ததென்ற மூன்றாவது விதம்தான் யுக்திக்குப் பொருத்தமாகும்.

க: ஈசுவரன் இருக்கிறார் என்பதைத் தெரிந்துகொள்ளக்கூடவா ஓர் உபதேசம் வேண்டியிருக்கிறது? அவரை அறிந்துகொள்வது சிரமம்தான்; அவரை அறிய வழிகாட்ட ஸஹாயம் வேண்டியிருக்கலாம்; ஆனால் அவர் இருக்கிறார் என்பதை நாம் யுக்தியினாலேயே தெரிந்துகொள்ளலாமே?

ம: ஈசுவரனுடைய இருப்பு இவ்வளவு ஸுலபமாய்த் தெரிந்து கொள்ளக் கூடியதாயிருந்தால் நாஸ்திகர்களும் அனீசுவர வாதிகளும் ஜகத்தில் இருக்கக் காரணம் என்ன? அவர்களுடைய புத்திவன்மை

யும் புத்தி கௌசலமும் நம்முடையவற்றிற்குக் குறைந்தவையா? பார்க்கப்போனால், ஈசுவர தத்துவத்தைக் கண்டுபிடிக்கப் பிரயத்தினப்பட்டு, அதில் தவறியவர்கள் அதிமேதாவிகளாகவே இருந்திருக்கிறார்கள். ஈசுவரனைக்கண்டு பிடிக்க முடியாமல் போனது அவர்களுடைய புத்திக் குறைவினால் அல்ல. ஈசுவரன் புத்திக்கு எட்டாதவன் என்ற தத்துவமே அவர்களுடைய தவறுதலுக்கு வாஸ்தவமான காரணமாகும். மேலும், யுக்தியினால் ஈசுவரனைக் கண்டு பிடித்து விடலாமென்று வைத்துக் கொள்வோம். யுக்தியினால் கண்டுபிடிக்க வேண்டியவராக ஈசுவரன் என்று ஒருவர் உண்டு என்பதை உங்களுக்கு யார் சொன்னார்? இதைச் சொல்லிக் கொடுப்பதற்காவது ஒருவர் வேண்டாமா? யாரேனும் ஒருவர் உங்களுக்கு ஈசுவரன் என்று ஒருவர் உண்டென்று சொல்லி வைத்திருந்தால், அப்புறம் அவரைக் கண்டு பிடிக்கும் விஷயத்தில் உங்கள் புத்தியைச் செலுத்திப் பார்க்கலாம். இந்த ஸமாசாரமே காதில் படாமலிருந்தால், புத்தியைச் செலுத்த அவகாசமேயில்லையே?

க: புத்தியைச் செலுத்திப் பார்ப்பதற்கு முன்னால் ஈசுவரன் ஒருவன் உண்டென்று நாம் எதற்காக கேட்டிருக்கவேண்டும்? ஈசுவரன் என்ற பெயர் என் காதில் பட்டிராத போதிலும், ஸதா காலமும் மாறுதலடைந்துகொண்டு அழிந்துபோகும் தன்மையுள்ள இந்த ஜகத்திற்கு ஆதாரமாய், ஒருவித மாறுதலையும் அடையாததாக, அழிவற்ற ஒரு வஸ்து

உண்டு என்பதை யுக்தியினாலேயே தெரிந்துகொள்ளலாமல்லவா ?

ம: எப்படித் தெரிந்துகொள்வீர் ?

க: ஜகத்தில் இருட்டு வெளிச்சம், அசைவு அசைவின்மை, ஸுகம் துக்கம், பிறப்பு இறப்பு, முதலிய விருத்தாம்சங்களே நிறைந்திருப்பதாகத் தெரிவதால், ஜகத்தில் மாறுதலிருப்பதால் மாறுதல் அற்ற ஓர் அம்சமும் உண்டென்று யுக்தியினால் தீர்மானிக்கலாம். எல்லாப் பதார்த்தங்களும் பிரதிக்ஷணமும் நசித்துப் போகிறபடியால், நாசமடையாத ஓர் அம்சமும் இருக்கவேண்டும் என்று ஊஹிக்கிறேன். இவ்விதமாகவே ஊஹம் செய்து கொண்டுபோனால் ஜகத்து பலவித வேற்றுமையுள்ளதாகவும், அழியக்கூடியதாயும், மாறிக்கொண்டும், தோற்றமாகவும் இருப்பதால், இதற்கு விருத்தமாக ஒரு வஸ்து, ஏகரூபமாய், சாசுவதமாய் மாறுதலற்றதாய், ஸத்தாய் இருக்கவேண்டுமென்று ஊஹிக்கலாம்.

ம: இப்படிக் கேட்கிறேனே என்று நினைக்கக் கூடாது. "குதிரை" என்பது நம் அறிவிற்கு விஷயமான ஒரு பதார்த்தம்தானே ? இது இருப்பதினால், இதற்கும் விருத்தமான ஒரு பதார்த்தம் ஜகத்தில் உண்டென்று ஏற்படவேண்டுமே? குதிரைக்கு எதிரிடைப் பதார்த்தமென்ன ?

க: "குதிரையல்லாதது" என்று சொல்வேன்.

ம: மிகவும் ஸரி. இது ஒரு பதார்த்தமா ? அல்லது, வெறும் குதிரையின் அபாவம்தானே?

ஆ: குதிரைக்கு எதிரிடை என்று சொல்லியிருப்பதால், அதையும் ஒரு பதார்த்தமென்றே சொல்ல வேண்டும்.

ம: இப்பதார்த்தம் ஒரு மிருகமா? அல்லது, குதிரையல்லாததாயிருக்கிற ஜகத்திலுள்ள எல்லாவற்றையுமே இப்பதத்திற்கு விஷயமாக்குகிறீரா?

ஆ: ஸாதாரணமாக கல்லும் குதிரையாகாததினால் குதிரையல்லாதது என்ற ஜாப்தாவில் சேரும். அப்படியே ஜகத்திலுள்ள மற்ற எல்லா வஸ்துக்களும். ஆனால் "அல்லாதது" என்ற சப்தம் 'குதிரை" என்ற வார்த்தையுடன் அன்வயிப்பதினால் அது குதிரைத் தன்மையை மாத்திரம்தான் நிஷேதிக்கும். ஆகையால் குதிரைத் தன்மைபற்ற ஒரு மிருகம் என்றுதான் வைத்துக்கொள்ள வேண்டும்.

ம: அதாவது ஒரு வஸ்துவின் எதிரிடை என்பது அந்த வஸ்துவின் ஸமான கோஷ்டியில் சேர்ந்ததும், ஆனால் அந்த வஸ்துத் தன்மை மாத்திரம் இல்லாததுமான ஒரு வஸ்துவையே குறிக்கும். அத்தன்மை மாத்திரம் எதிரிடை வஸ்துவில் இல்லாததை வைத்துக் கொண்டு, எதிரிடை என்று வியவஹாரம் செய்கிறோமே தவிர, எல்லா அம்சங்களிலும் எதிரிடை என்பது கிடையாது. வெளிச்சத்தில் ஏற்படக் கூடிய தாரதம்யத்தை இருட்டின் தாரதம்யம் என்றும் வியவஹரிக்கலாம். அதாவது வெளிச்சம் குறையும்போது இருட்டு ஜாஸ்தி என்றும், இருட்டுக் குறையும்போது

வெளிச்சம் ஜாஸ்தி என்றும் சொல்லக்கூடியதாயிருப்பதால் இருட்டும் வெளிச்சமும் அத்யந்தம் விருத்த பதார்த்தங்கள் என்று சொல்வதற்கில்லை.

மேலும், அனுமானத்தின் தன்மையை நீங்கள் நன்கு கவனித்ததாகத் தெரியவில்லை. நான் முன் சொல்லியபடி, அனுமானிக்கவேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறதென்று தெரியாமலிருந்தால் அனுமானமே பிரவிருத்திக்காது. நெருப்பையே பார்க்காதவனும் அதைப்பற்றி கேட்காதவனுமான ஒருவன் புகையைப் பார்க்க நேரிட்டால் அவனுக்குப் புகையிலிருந்து நெருப்பு என்ற இன்னொரு பதார்த்தத்தை ஊஹிக்க வேண்டுமென்ற எண்ணமே தோன்றாது. ஒரு பதார்த்தம் நம் அறிவிற்கு விஷயமானால், அந்த அறிவை நாம் அப்படியே ஏற்றுக்கொள்வோமே தவிற அதற்குப் பின்னால் என்ன தத்வமிருக்குமென்று ஊஹிக்க அவசியமில்லை. நம் முன் தோன்றுகிற பதார்த்தம் வாஸ்தவமில்லையென்றும், அதற்கு ஆதாரமாக அதற்கு இத்தோற்றத்தைக் கொடுத்த வாஸ்தவமான வேறு ஒரு பதார்த்தமிருக்க வேண்டுமென்றும் நமக்கு முன்னமேயே தெரிந்திருந்தால் மாத்திரம் ஊஹத்திற்கு அவகாசம் உண்டு. அப்படியே ஸதாகாலமும் மாறிக்கொண்டிருக்கிற இந்த ஜகத்தை நாம் பார்த்துக்கொண்டு மாத்திரம் இருந்து, மாறுதலற்ற ஓர் தத்வமுண்டென்று நாம் கேள்விப்படாதபக்ஷத்தில், ஜகத்தைத் தோன்றுகிறபடியே தத்வமென்று ஒப்புக்கொண்டு விடுவோம். ஜகத்து

தோன்றுகிறது என்பதே தத்வமாகும். ஜகத்து மாறுகிறதென்றால் அது அதன் ஸ்வபாவம், ஆகையால் மாறுதல் அடைகிறது: மாறாமலிருந்தால் அது ஜகத்தேயில்லை, இதற்கு வேறு ஸமாதானம் தேடுவானேன் என்று இருந்துவிடுவோம். இவ்விதமில்லாமல் நிர்விகாரமாய் ஸத்தாய் ஒரு வஸ்து உண்டென்று நாம் கேள்விப்பட்டிருந்தால், ஜகத்தில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஸமாதானம் தேடத்தோன்றும்; அவ்வஸ்துவுக்கும் ஜகத்திற்கும் என்ன ஸம்பந்தம், அந்த ஸம்பந்தத்தை தீர்மானிப்பது எப்படி, என்ற விசாரங்களும் ஏற்படும். இவ்விதமான சர்ச்சையை ஏற்படுத்திக்கொடுப்பதற்கே நிர்விகார வஸ்துவை தெரிவிக்கக்கூடிய ஓர் உபதேசம் வேண்டும். இந்தச் சர்ச்சைக்கு நம் புத்தி வெகுதூரம் அனுகூலமாயிருக்கும். ஆனால் இவ்வுபதேசத்தை எதிர்பாராமல், நம் புத்தியைக் கொண்டு மாத்திரம் சர்ச்சை செய்ய ஆரம்பித்தால், இருட்டில் தடவிக்கொண்டே இருக்கவேண்டி வரும்.

தவிரவும், ஜகத்திலுள்ள எல்லாப் பதார்த்தங்களும் மாறுதல் அடைவதைப் பார்த்து, அதிலிருந்து ஓர் அனுமானம் செய்கிறதானால் "எல்லாப் பதார்த்தங்களும் மாறுதல் அடைகிறபடியால், இவைகளைத் தவிர, ஒரு பதார்த்தம் இருந்தால், அதுவும் மாறுதல் அடையக்கூடியதாகவே இருக்கும்" என்றுதான் அனுமானம் செய்யமுடியும். திருஷ்டாந்தத்திலிருந்து தெரிந்துகொள்கிற ஹேது ஸாத்ய ஸம்பந்தத்தைத் தழுவியே அனுமானம் *ப்ரவிருத்திக்குமாதலால்

அதற்கு விருத்தமாய் ஒரு அனுமானமும் ஏற்படாது. நம் அனுபவத்தில் எல்லாப் பதார்த்தங்களும் மாறு கின்றனவென்று தெரியும்போது மாறுதலடையாத ஒரு பதார்த்தம் உண்டு என்று அனுமானத்தினுல் சொல்லவியலாது. எல்லாம் மாறுகிறபடியால், வேறு பதார்த்தமிருந்தால், அதுவும் மாறுதலடையும் என்று தான் அனுமானத்தால் சொல்ல முடியும்.

எப்படியும், அனுமானத்தினுல் நிர்விகாரமாய் ஒரு பதார்த்தம் இருக்கலாம் என்று வேண்டுமானுல் ஊஹிக்கலாமே தவிர இருக்கிறது என்று நிச்சயமாய் சொல்லவாவது, அப்பதார்த்தம் எத்தன்மையுடையது என்றாவது அனுமானத்திற்குச் சொல்ல யோக்கியதை கிடையாது.

ந: உபதேசத்தின் அவசியத்தைப் பற்றி இவ் வளவு தெளிவாய் இதுவரை யாரும் எடுத்துச் சொல்லிக்கேட்டதில்லை. மிகவும் கிருதார்த்தனுனேன்.

### 3. பல மதங்கள்.

க: ஆனுல் நான் முதலில் தெரிவித்த ஸந்தேஹம் இன்னும் நிவர்த்தியாக வில்லை. பரஸ்பர விருத்தமாய் அநேக மதங்கள் ஏற்படக் காரணம் என்ன? எல்லாமே ஸத்கதிக்கு வழிகாட்டுவதாகச் சொல்லு கின்றனவே?

ம: அதிகாரம் அதாவது யோக்கியதை என்பதை வைத்தே ஜகத் ஆளப்படுகின்றதென்று நான் ஏற் கனவே சொன்னேன் அல்லவா? மனிதர்களுக்குள்

லிருக்கும் அதிகார தாரதம்யத்திற்குத் தக்கபடியே பல மதங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

க: இது எனக்கு அர்த்தமாகிறது. ஆனால் ஒரு மதமாவது, தான் இவ்வித யோக்கியதையுள்ளவர்களுக்கு மாத்திரம் ஏற்பட்டதாக ஒப்புக்கொள்ளத் தயாரில்லையே? ஒவ்வொரு மதமும், தானே மேலான மதம் என்றும், தானே வாஸ்தவமான மதமென்றும் தனித்தனியே சொல்லிக் கொள்கின்றதே?

ம: ஒரு சின்னப்பையனைப் பார்த்து ஒருவர் "விளக்கை ஏற்று" என்றும், மற்றொருவர் "திரியைத் தூண்டு' என்றும், மற்றொருவர் 'எண்ணெயை விடு" என்றும், இன்னமொருவர் 'விளக்கை அணைத்துவிடு' என்றும் நான்கு பேர்கள் ஸமகாலத்தில் கட்டளையிட்டால் அவன் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்து நிற்பான். இக்கார்யங்கள் ஸமகாலத்தில் செய்யக் கூடியவைகளாயில்லை; ஆனாலும் என் கட்டளைப்படி நடக்கவேண்டுமென்று ஒவ்வொருவரும் நிர்பந்தம் செய்கிறார்கள். பையன் என்ன செய்ய முடியும்? இந்த ஸந்தர்ப்பத்தில் ஐந்தாவதாக ஒருவர் வந்து 'கத்திரிக்கோல் கொண்டுவா' என்று இன்னும் ஒரு கட்டளையிட்டால் ஏற்கனவே நான்கு கட்டளைகளுக்குள் எந்த கட்டளைப்படி நடப்பதென்று தெரியாமல் திகைத்து நிற்கிறவனுக்கு, ஐந்து கட்டளைகளுக்குள் எந்தக் கட்டளைப்படி நடப்பதென்று நிர்மானித்துக்கொள்வதென்ற அதிகமான சிரமத்தையே கொடுத்ததாகும். ஐந்தாவது மனிதர் வந்ததினால்

இந்தப் பையனுக்கு சிரமம் ஜாஸ்தியே தவிர, குறைவு படாது. வாஸ்தவத்தில் இந்தப் பையனிடம் அவனுக்கு அபிமானமிருக்கும் விஷயத்தில், இந்தப் பையனும் அவருடைய உத்தரவிற்குக் கட்டுப்படத் தயாராயிருந்தால், "கத்திரிக்கோலைக் கொண்டு வா. மற்றக் கட்டளைகளை நீ கவனிக்க வேண்டியதில்லை" என்று சொன்னால்தான் உபயோகமாயிருக்கும். அப்படியே, ஒருவனை நன்னடத்தையில் நடத்திக்கொண்டுபோக உத்தேசிக்கும் ஓர் ஆசார்யர் 'நான் சொல்கிறபடி நட. மற்றவர்களைக் கவனிக்காதே' என்று சொல்லித்தான் தீரவேண்டும்.

க: அப்படியானால் தன்னிடம் கேட்க வருகிறவர்களுடைய யோக்கியதையையும் சக்தியையும் கவனித்தும், காலத்திற்குத்தக்கபடியுமே முன் மதாச்சார்யர்கள் தங்கள் உபதேசங்களை வெளியிட்டார்கள் என்று ஏற்படுமல்லவா? தங்களுக்கு வாஸ்தவமான உயர்ந்த தத்வம் தெரிந்திருந்தபோதிலும், ஸந்தர்ப்பத்திற்குத் தக்கபடி உபதேசித்தார்கள் என்றால், உண்மைத் தத்வத்தை உபதேசிக்கவேண்டுமென்ற பொறுப்பைவிட்டு, ஸமயோசிதமாய்ச் செய்தார்கள் என்று சொல்ல நேரிடுமல்லவா?

ம: ஜனங்களுடைய யோக்கியதையின் தாரதம்யத்தினால் அப்படிச் சொல்லும்படி ஏற்பட்டது அவர்களின் குற்றமாகாது. முன் சொல்லியபடி, தாஹமுள்ளவனுக்கு குளிர்ந்த ஜலம் ஸுகத்தைக் கொடுக்குமென்றாலும், ஜ்வரத்திலிருக்கிறவனுக்கு அது அஹித

மாகவே ஆகும். ஒருவனைக் குளிர்ந்த ஜலம் சாப்பிட அனுமதித்து, மற்றொருவனை சாப்பிடக்கூடாது என்று தடுத்தால், அது வைத்தியருக்கு பக்ஷபாதத் தன்மையைக் காட்டாது. ஒருவனுக்கு ஸௌகத்தைக் கொடுத்து, மற்றவனுக்குக் கெடுதலைச் செய்கிறதென்று ஜலமும் பக்ஷபாதியாகாது.

க: அப்படியானால், ஒரு மதாச்சார்யர் உபதேசித்திருப்பது, மேலான தத்வமா அல்லது மனிதர்களுக்குத் தக்கபடி சொன்னதா என்று எப்படிக் கண்டுபிடிக்கமுடியும்?

ம: உங்களுக்குத் தெரிந்து என்ன ஆக வேண்டும்? அம்மதாச்சார்யார்களுக்குள் யார் பெரியவர், யார் சின்னவர் என்று தீர்மானிக்கவா? அல்லது நீங்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று மாத்திரம் தெரிந்து கொள்ளவா?

க: வாஸ்தவத்தில் இரண்டும் தான். எந்த மதாச்சார்யருடைய உபதேசம் உண்மையானது என்று தெரிந்துகொண்டு, அதன்படி என் நடத்தையை ஏற்படுத்திக் கொள்ளலாமல்லவா!

ம: இரண்டுபேர்களுக்குள் இருக்கும் தாரதம்யத்தைத் தீர்மானிக்க உத்தேசிக்கிறவன், அவர்களுடைய தோஷங்களையும் நன்கு அறிய வேண்டியவனாயிருப்பதால், அவ்விருவர்களுக்கும் மேற்பட்ட யோக்யதை வாய்ந்தவனாக அவன் இருக்கவேண்டும். கிருஷ்ணு, மகம்மது, மற்றும் மதாச்சார்யர்கள் இவர்

களுடைய புத்திகளுக்குள் தாரதம்யத்தைக் கண்டு பிடித்துக்கொள்ளும்படியான அவ்வளவு புத்தி வன்மையை உங்களுக்குப் பகவான் கொடுத்திருப்ப தாக எண்ணமா? தவிரவும், இரண்டு மதங்களுக்குள் எது உயர்ந்தது, எது தாழ்ந்தது என்று தீர்மானம் செய்ய ஆரம்பிக்குமுன், அவ்விரண்டு மதங்களையும் நன்கு தெரிந்துகொள்ள வேண்டாமா? அது இருக் கட்டும்; ஒரு மதத்தையாவது நன்கு தெரிந்துகொண்டு விட்டதாகச் சொல்ல முடியுமா? ஒருமதத்தில் அடங்கி யுள்ள ஒரு விஷயத்தையாவது நன்கு பரிசிலனை செய்து அறிந்துகொள்ள நம் ஆயுட்காலம் போதுமா? இப்படி யிருக்க தத்வம் தெரிந்துகொள்வது எப்பொழுது? அதற்கப்புறம் அனுஷ்டானம் செய்வது எப்பொழுது?

## 4. சிறந்த வழிகாட்டி

க: பின்னே, என்னதான் செய்ய வேண்டு மென்று தாங்கள் உபதேசிக்கிறீர்கள்?

ம: ஈசுவரன் ஒருவன் உண்டென்று நம்புகிறீர் களா?

க: ஆமாம்.

ம: அவர் ஞான ஸம்பன்னர் என்றும் ஒப்புக் கொள்கிறீர்களா?

க: அப்படியே.

ம: இந்த ஞானம் அவருடைய ஒவ்வொரு கார் யத்திலும் நன்கு புலப்படுமல்லவா?

க: ஆமாம்.

ம: அப்படியானால், உங்களுக்கு இந்த ஜன்மா வைக் கொடுத்ததான அவருடைய இந்தக் காரியத் திலும் அவ்வறிவு துலங்கவேண்டுமல்லவா?

க: ஆமாம்.

ம: உங்களை ஜனிக்கும்படி செய்ததிலும் பகவா னுக்கு ஓர் உத்தேசம் இருந்திருக்கவேண்டும்; அதிலும் அறிவு கலந்த உத்தேசமாகவே இருக்கவேண்டு மல்லவா?

க: அப்படியே. என் ஜன்மமும் உத்தேசமற் றிராது.

ம: அப்படியானால் உங்களை ஒரு குறிப்பிட்ட மாதாபிதாக்களிடத்தில் ஜன்மம் எடுக்கும்படி செய்த திலும் பகவானுக்கு ஓர் உத்தேசமிருந்தே தீரவேண்டு மல்லவா?

க: ஆமாம். ஏதோ அகஸ்மாத்தாக ஏற்பட்டது என்று சொல்லும் வியவஹாரத்தை நான் ஏற்றுக் கொள்கிறதில்லை.

ம: அப்படியானால், கிருஸ்துவ மாதாபிதாக்க ளிடம் உங்களை ஜன்மம் எடுக்கும்படி செய்த பகவா னுக்கு, உங்கள் யோக்கியதைக்குத் தகுந்த சிரேயஸ் ஸாதனம் கிருஸ்துவமதமே என்று தோன்றிற்று, என்று வைத்துக்கொள்வதில் என்ன ஆக்ஷேபணை? நமக்கு எந்த மதம் உரியது, என்ற தீர்மானிக்கும் விஷ யத்தை ஸர்வக்ஞரான ஈசுவரனே பார்த்துக்கொள்

கிருர். நாம் நடக்கவேண்டிய வழி இன்னதென்று தீர்மானித்துக்கொள்ள வேண்டிய சக்தி, நம் அற்ப புத்திக்குக் கிடையாதென்று நன்கு அறிந்து, அவரே இப்பொறுப்பையும் வஹித்து, தேசம், காலம், மதம் எல்லாவற்றையும் தீர்மானித்து, நம்மை அதற்குத்தக்க ஜன்மம் எடுக்கச் செய்கிருர். இவ்வளவு கருணேயோடு அவர் செய்திருக்கும் உபகாரத்தைக் கவனிக்காமல், மதங்களுக்குள் தாரதம்யத்தை தீர்மானிக்க வேண்டிய அஸாத்தியமான பொறுப்பை நம் தலையில் தாங்க என்ன அவசியம்?

க: கிருஸ்துவ மதத்தை நன்கு அறிந்துகொள்ள நான் மிகவும் பிரயத்தினப்பட்டிருக்கிறேன். அதன்படி நடக்கவும் முயன்றிருக்கிறேன். ஆனல் அடிக்கடி அநேகம் ஸந்தேஹங்கள் ஏற்படுகின்றன. அவைகளே நிவர்த்திக்கக் கூடியவர்களாக நான் யாரையும் காணவில்லே. அதனுல்தான் இதர மதங்களே வாசிக்க நேரிட்டது.

ம: மத நூல்களே மாத்திரம் வாசித்திருப்பவர்களேக் கேட்டால், ஸந்தேஹம் நிவர்த்தியாகாது. பிரதிதினமும் அந்த மதத்தின்படி வழுவாமல் நடக்கிறவர்களே அணுகவேண்டும். வியாபாரத்திற்காகக் கடல்களேத் தாண்டுகிறீர்கள்! ஆகாசத்தில் செல்கிறீர்கள்! தத்வத்தை அறிய வேண்டுமானுல் மாத்ரம் ஆசார்யர் தன் வீட்டு வாசலுக்கு வந்து ஸந்தேஹத்தை நிவர்த்தி செய்து கொடுக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறீர்கள்!! மதம் என்பது ஒரு குதூஹலத்

திற்காக ஏற்பட்டது என்ற எண்ணம் போய், நம் ஆபுனே மதத்திற்காக என்ற எண்ணம் தீவிரமாக ஏற்பட்டதேயானல், சரியான ஆசார்யரை அடைய வேண்டுமென்ற அவாவுடன், உலகம் பூராவும் தேட ஆரம்பிப்பீர்கள். உங்கள் சிரத்தையைக் கண்டு அவரும் உங்கள் முன்னுல் தோன்றக் காத்திருப்பார். அவ்விதமான ஆசார்யர்கள் கிருஸ்துவ மதத்தில் இப்பொழுதில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. இந்த வியவஹார கிரஸ்தமான உலகத்தில் அவர்கள் காணப்படாமலிருக்கலாம். இவ்வுலகம் அவர்களைத் தேடாது; அவர்களுக்கும் இவ்வுலகத்தால் பிரயோஜனமில்லை. அவர்கள் இவ்வுலகத்தின் நடுவிலுமிருப்பார்கள். இவ்வுலகத்தின் வியவஹாரம் அவர்களை பாதிக்கவும் மாட்டாது; அவர்களை இவ்வுலகம் கண்டு பிடித்துக் கொள்ளவும் முடியாது. ஆகையால் வாஸ்தவமான கிறிஸ்தவப் பெரியோர்களைத் தேடியலைய வேண்டும். உங்கள் ஸந்தேஹங்களைத் தெளியவைக்கும்படி வினயத்துடன் அவர்களைப் பிரார்த்திக்க வேண்டும். ஒரு க்ஷணத்தில் அவர்கள் உங்கள் ஸந்தேஹங்களைப் போக்குவார்கள். அப்பொழுது, கிருஸ்துவ மாதா பிதாக்களுக்குப் பிறக்கும்படி செய்ததில் ஈசுவரனுக்கு இருந்த உத்தேசமும் ன்கு வெளியாகும்.

க: மிகவும் கிருதார்த்தனுனேன். நான் இங்கு வரும்போது, திரும்பிப் போகையில் முன்னைவிட ஞானஸ்தி லைக்குள்ள கிருஸ்துவனுகத் திரும்பிப்

போவேன் என்ற எண்ணமில்லாமலே வந்தேன். இப்பொழுது அவ்வெண்ணத்தைத் தாங்கள் உண்டு பண்ணியிருக்கிறீர்கள். இப்படியே ஒரு கிருஸ்துவனை நல்ல கிருஸ்துவனாகவும், ஒரு ஹிந்துவை நல்ல ஹிந்துவாகவும், அப்படியே இதர மதஸ்தர்களையும் அந்தந்த மதத்தில் ஜாஸ்தி ஊக்கமுள்ளவர்களாகவும் ஆக்குவதுதான் தங்கள் கொள்கையாயிருக்கும் பக்ஷத்தில், தங்கள் மதம் நான் நினைத்ததற்குமேல் உதாரமானதாகும். உத்திரவு வாங்கிக்கொள்கிறேன். ஆசீர்வதிப்பீர்களாக.

ம: ஆசீர்வாதம் பகவானைச் சேர்ந்தது. அவருடைய ஆசீர்வாதம் வேண்டுமென்று நாம் எல்லாருமே பிரார்த்திப்போம். மறுபடியும் உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். உங்களுக்கு த்ருடமான சரீரமும், நல்ல மனதும், கூர்மையான புத்தியும் பகவான் கொடுத்திருக்கிறார். சித்திரம் எழுதுகிறவன் எவ்வளவு கெட்டிக்காரனாயிருந்தாலும், வர்ணத் திரவியங்கள் எவ்வளவு நன்றாயிருந்தாலும், எழுதுகோல் எவ்வளவு கூர்மையாயிருந்தாலும், எழுதவேண்டிய படத்தை எவ்வளவு அற்புதமாக மனதில் ஸங்கல்பித்திருந்தாலும், வெறும் ஆகாசத்தில் எழுதமுடியாது. இவ்வளவு ஸாதனங்களையும் ஸங்கல்பங்களையும் உபயோகப்படுத்தவேண்டுமானால், அசையாத ஒருபடுதாத் துணி வேண்டும். அது விலையற்றதாய் மெல்லியதாய் இருக்கவேண்டுமென்பது கணக்கில்லை. ஆகையால் பகவானால் உங்களுக்கு அனுக்ரஹிக்கப்பட்டிருக்கிற

ஸாதனங்களை விருகப் பல மதங்களினுடைய தாரதம்யத்தை விசாரிப்பதில் செலவழிக்காமல், பகவானல் உங்களுக்கு நீர்மானிக்கப்பட்டிருக்கிற கிருஸ்துவமதம் என்ற அசைவற்ற அடிப்படையில் உபயோகப்படுத்துங்கள். சித்திரம் எழுதிமுடிந்து அதன் அழகைப் பார்த்து ஸந்தோஷிக்கும் நாள் வரும்போது படுதாத்துணி தென்படாமல் தானே மறைந்துவிடும். அது வரை இருந்தே தீரவேண்டும். ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.



அத்யாயம் 2

## நவீந வித்யாப்யாஸம்

### 1. நிலை தவறுதல்

ஒரு நாள் ஸாயங்காலம், ஒரு பண்டிதர் வந்து ஸ்ரீ மஹாஸ்வாமிகளவர்களை வந்தனம் செய்தார். அவருடைய யோகக்ஷேமம் விசாரிக்கிற ஸந்தர்ப்பத்தில் "உங்கள் பையன் என்ன வாசித்துக்கொண்டிருக்கிறான்" என்று ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் கேட்டார்கள்.

**பண்டிதர்:** "இப்பொழுது தான் ஆறுவது பாரத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறான். இந்த வருஷக் கடைசியில் பரீக்ஷைக்குப் போகவேண்டும்" என்றார்.

**ம:** அதற்கப்புறம்?

**ப:** இன்னம் தீர்மானமாகவில்லை. கொஞ்ச நாளாகவே படிப்புச் செலவுகளை அதிகாரிகள் மிகவும் ஜாஸ்தியாக்கிவிட்டார்கள். என் ஸ்வல்ப வரும்படியிலிருந்து செலவழிக்க மிகவும் சிரமப்படுகிறேன். இன்னமும் மேலே வாசிக்கிறதானால், எப்படி நடக்கப் போகிறதென்று தெரியவில்லை. ஆனால் பையன் நல்ல புத்திசாலியாகவும் முன்னுக்கு வரக்கூடியவனாகவும் இருப்பதால், பின்னால் நன்றாக பிரகாசிப்பானென்றும், இப்பொழுதுள்ள அஸௌகர்யத்தைப் பொருட்படுத்தக்கூடாதென்றும், அவனுடைய உபாத்யாயர்கள் சொல்லிவருகிறார்கள்.

ம: பின்னல் பிரகாசிக்கிறது என்றால், பணக்காரனாகிறது என்றுதானே அர்த்தம்?

ப: அது மாத்திரம் இல்லை; மதிப்பு, செல்வாக்கு, எல்லாம் சேர்ந்ததுதான்.

ம: எப்படியும் ஐஹிக ஸம்பத்துதானே?

ப: ஆமாம். இந்தக் காலத்தில் இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் சொல்லிக்கொடுக்கிற வாசிப்பு முழுவதும், ஐஹிக ஸம்பந்தமாகவே இருப்பதால், அத்யாத்மமாக என்ன பிரயோஜனத்தை எதிர்பார்க்க முடியும்?

ம: அந்த அத்யாத்ம பிரயோஜனத்தை முன்னிட்டு நம் தர்ம மார்க்கத்தில் பழக்குவதற்கு, நீங்கள் வேறு ஏற்பாடு செய்திருப்பீர்கள் என்று நம்புகிறேன்.

ப: அதற்கு அவகாசம் ஏது? காலையிலும் முன் ராத்திரியிலும் அவன் பள்ளிக்கூடப் பாடங்களை வாசிக்கவேண்டியிருக்கிறது. ஸாயங்காலம் ஏதாவது விளையாட்டில் போய்விடுகிறது. பாக்கி வேளையோ பள்ளிக்கூடம்.

ம: நம் தர்மத்தைக் கற்றுக்கொள்ளவும், அப்யஸிக்கவும் காலமே அகப்படவில்லை போலும்!

ப: கொஞ்சம்கூட இல்லை. ஆனால் சில பையன்கள்போலில்லாமல் ஏதோ ஸந்தியாவந்தனத்தையாவது ஒருவாறு பண்ணிவருகிறானே என்று ஸந்தோஷிக்கிறேன்.

ம: எனக்கும் மிகவும் ஸந்தோஷம். ஆனாலும் அவனுடைய அத்யாத்ம சிரேயஸ்ஸை நீங்கள் கவனியாமலிருப்பதாகத் தோன்றவில்லையா?

ப: தோன்றத்தான் தோன்றுகிறது. என்ன செய்யலாம்? நம் தேசத்தின் தற்கால நிலைமை அப்படியிருக்கிறதே!

ம: நீங்கள் உங்கள் பால்யம் முதல், பிராசீன ஸம்பிரதாயத்திலேயே வேதத்தையும் சாஸ்திரங்களையும் கற்று முன்னுக்கு வந்திருக்கிறீர்களல்லவா?

ப: ஆம்.

ம: தங்களுக்குக் கொடுக்கப்பட்ட வித்யையும் பயிற்சியும் வாஸ்தவத்தில் ஹிதகரம் தான் என்று நம்புகிறீர்களா?

ப: அதில் என்ன ஸந்தேஹம்?

ம: அப்படியானால் ஹிதகரமென்று நீங்கள் வாஸ்தவமாய் நம்புகிற வித்யையையும் பயிற்சியையும், உங்கள் புத்திரனுக்கு நீங்கள் கொடுக்காமலிருப்பது நியாயமாகுமா?

ப: நியாயமில்லை தான். ஆனால் என்ன செய்கிறது? தற்கால நவீந வாசிப்பு இல்லாமல் இப்பொழுது ஒரு காரியமும் நடத்த முடியவில்லையே?

ம: அந்த வாசிப்பு இல்லாமலே நீங்கள் நன்கு காலக்ஷேபம் செய்யவில்லையா?

ப: ஏதோ ஒரு மாதிரித்தான் நடக்கிறது.

ம: ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? தங்களுக்கு எவ்விதக் குறைவும் இல்லை. உங்களிடம் வரும் யாவரும் உங்களை வெகுமரியாதையுடன் பாவிக்கிறார்கள். உங்கள் விஷயத்தில் அதிருப்திக்கு என்ன காரணம் இருக்கிறது?

ப: அதிகமாயில்லையென்பது வாஸ்தவம். இருந்தாலும், நாங்கள் எங்கு போனாலும் உத்யோகஸ்தர்கள், வக்கீல்கள் முதலிய லௌகிகர்கள் எல்லாருமே, அவர்களிடமிருக்கிற புதிய படிப்பு எங்களிடமில்லையென்ற காரணத்தினால், எங்களை கர்நாடக பண்டிதர்களென்று அவமதிக்கிறார்கள்.

ம: உங்களுக்கிருக்கிற பிராசீனப் படிப்பு அவர்களுக்கு இல்லையென்ற காரணத்தினால், நீங்கள் ஏன் அவர்களை நவீனர்களென்று அவமதிக்கக்கூடாது?

ப: நாங்கள் எப்படிச் செய்கிறது?

ம: ஏன் செய்யக் கூடாது? நீங்கள் அடைந்திருக்கும் பயிற்சி அவர்களுடையதைவிட மேலானதுதான் என்று நீங்கள் நிச்சயமாய் நம்பும் விஷயத்தில்—உங்கள் மனோபாவம் அப்படித்தானே இருக்க வேண்டும்—எப்படியும் அவர்கள் உங்களை அவமதிக்கும்படி, நீங்கள் இடம் கொடுப்பதற்கு நியாயம் கொஞ்சமேனும் கிடையாது.

ப: நாங்களா இடம் கொடுக்கிறோம்? அவர்கள் மனோபாவம் அப்படி யிருக்கிறது.

ம: அப்படியானால் அவர்களுடைய ஸம்மதத்தை எதிர்பாராமல், நீங்களும் அவர்களை அவமதிக்கலாமே? அவ்விதம் செய்கிறீர்களா?

ப: நாங்கள் அவ்விதம் செய்கிறோம் என்று சொல்வதற்கில்லை.

ம: ஜனங்களுடைய தற்கால நிலையை நான் தெரிந்துகொண்ட மட்டில், இதரர்கள் அவமதிக்கும்படி பண்டிதர்களே இடம் கொடுத்து வருவதுடன் நிற்காமல், தங்களை அவமதிக்கும் லௌகிகர்களை கௌரவித்தும் வருகிறார்கள் என்று தெரிகிறது.

ப: தாங்கள் சொல்வது வாஸ்தவம் என்று தான் ஒப்புக்கொள்ளவேண்டியிருக்கிறது.

ம: மேலும், நீங்கள் ஒரு புஸ்தக மூட்டையையோ, அல்லது மடிஸஞ்சியையோ கையில் சுமந்து கொண்டு, கால் நடையாய் ரஸ்தாவில் தள்ளாடிக் கொண்டு போய்க்கொண்டிருக்கும் போது, ஒரு லௌகிகர் ஸுகமாக மோட்டாரில் போவதைப்பார்த்தால், உங்களுக்கு அஸூயை ஏற்படுகிறதா இல்லையா?

ப: சிலவேளைகளில் ஏற்படத்தான் ஏற்படுகிறது.

ம: வெளிப்படையாக நீங்கள் ஒப்புக்கொள்ளத் தயாராயில்லாமலிருந்தாலும், பால்யத்தில் இப்புதிய வாசிப்பின் நன்மையை அடையாமல் போய்விட்டோமே என்ற பச்சாத்தாபமும், உங்களுக்கு மனதில் இருக்கும்?

ப: அதுவும் சிலவேளை இருக்கத்தான் இருக்கிறது.

ம: அத்துடன் நில்லாமல், இவ்வுபயோகமற்ற வேதத்தைக் கற்றுக்கொள்வதில், பால்யத்தை வீணுக்கி விட்டோமே என்ற எண்ணமும் உள்ளூர இருக்கும்?

ப: அவ்வளவு தூரம் நினைக்காமல் போனலும், புதிய மாதிரி வாசிப்பும் இருந்திருக்கலாம் என்று நினைப்பதுண்டு.

ம: புதிய மாதிரி என்றால், உபயோகமுள்ள வழியில் என்றுதானே அர்த்தம்.

ப: ஆம்.

ம: அதாவது வைதிகப் பயிற்சி உபயோகமற்ற தென்றுவது, அல்லது இங்கிலீஷ் படிப்பைவிட உபயோகத்தில் குறைந்தது என்றுவது நினைத்துத்தானே இருக்கவேண்டும்?

ப: அவ்வளவு தூரம் நினைத்ததாகத் தெரியவில்லை.

ம: வாஸ்தவமே. அதனல்தான் "உள்ளூர" என்று சொன்னேன். அவ்வித எண்ணம் ஏற்பட்டதன் மூலம், இந்த உபயோகமற்ற வித்யையைக் கற்றுக்கொள்ளும்படி செய்த பெற்றோர்களிடம் உங்களுக்கு அப்ரீதி ஏற்பட்டதாகத்தானே ஆகும்?

ப: ஆகும் என்பது வாஸ்தவம்தான்.

ம: ஆகையால், லௌகிகரைப் பார்க்கும்பொழு தெல்லாம், அவருடைய வாசிப்பு உங்களுக்கில்லையே என்ற வருத்தம், உங்கள் வாசிப்பு உங்களுக்கு இருக் கிறதே என்ற வருத்தம், அந்த வாசிப்பைக் கொடுக் காமல் இந்த வாசிப்பைக் கொடுத்ததற்காக மாதா பிதாக்களின் பேரில் அதிருப்தி, அப்படியே உபாத்தி யாயர்களிடமும் அதிருப்தி இவையெல்லாம் ஏற்படு கிறதல்லவா?

ப: மனோபாவத்தை விவேசனம் செய்து பார்த் தால், இவ்வளவும் ஏற்படுவதாகத்தான் தெரிகிறது.

ம: இந்த உயர்ந்த பயிற்சியையடைந்த உங்களுக்கே, லௌகிகர்களிடத்தில் பஹுமானம் ஏற்படுமானால், அவர்களும் உங்கள் மனோபாவத்தை அப்படியே அங்கிகரித்து, தாங்கள் மேலானவர்கள் தான் என்று எண்ணிக்கொண்டு, உங்களைக் குறைவாக நினைத்தால் அது அவர்கள் தப்பிதமாகுமா? வைதிகப் பயிற்சியின் தன்மையைத் தெரிந்த நீங்களே தங்களை மறந்து, இதைக்கொடுத்ததற்காக மாதா பிதாக்களை த்வேஷிக்கும்போது, அது இன்னதென்றே தெரியா தவர்கள் அதை மதிக்கவில்லையென்பது ஆச்சர்யமா? தவிரவும், சாஸ்திரத்தில் நம்பிக்கையுள்ளவர்களான நீங்கள், வேதத்தையும், நிரபராதிகளான மாதா பிதாக் களையும், உபாத்யாயர்களையும் நிந்தித்த பாபத்திற்காக வாவது, அதிக கஷ்டத்தை அனுபவிக்க வேண்டாமா? ஐஹிகமான வாசிப்பிலேயே வீணாக பால்யத்தைக்

கழித்திருக்கும் லௌகிகரைப் பார்த்து, நீங்கள் அனு தாபப்படக்கூடாதா? வைதிக ஸம்பந்தமில்லாத லௌகிகப் பயிற்சியைக் கொடுத்து, அத்யாத்ம சிரேயஸ்ஸைக் கெடுத்த தோஷத்திற்காக, லௌகிகர்களின் தாயார் தகப்பனார்களை நிந்திக்கக்கூடாதா? நீங்கள் லௌகிகர் விஷயத்தில் அநுதாபப்படுகிறீர்கள் என்பதை அவர்கள் உணரும்படி செய்வதற்கென்ன? உங்கள் நடத்தையினால் உங்களைக் கண்டு அவர்கள் மதிக்கும்படி நீங்கள் ஏன் நடந்து கொள்ளக்கூடாது?

## 2. படிப்பும் பணமும்.

ப: ஆனால், இந்தக் காலத்தில் வாஸ்தவ யோக்கியதையை யார் கவனிக்கிறார்கள்? பணத்திற்குத்தான் மதிப்பு.

ம: மதிப்பிடுகிறவர் யார்?

ப: எல்லாரும்தான்.

ம: அப்படியல்ல. ஒரு பதார்த்தம் எவனுக்குத் தேவையோ, அவன்தான் அந்தப் பதார்த்தத்தில் மதிப்புவைப்பான். ஆகவே பணம் வேண்டுமென்று நினைக்கிறவர்களால்தான் பணத்திற்கு மதிப்பு. பணம் வேண்டியதில்லையென்றால், இன்னொருவர் எவ்வளவு பணக்காரராயிருந்தாலும், நமக்கு ஆவதென்ன?

ப: ஆனால், இந்த லோகத்தில்—அதாவது வியவஹாரதசையில்—பணமில்லாமல் யாராலும் ஒரு காரியமும் செய்ய முடியவில்லையே!

ம: அது வாஸ்தவம். இதனால், பணத்திற்கு ஏற்கெனவே உள்ள மதிப்புக்குமேல், ஜாஸ்தி மதிப்புக் கொடுத்தாக வேண்டுமென்பது கிடையாது. பணம் என்பது ஸுகஸாதனமாக ஏற்பட்டிருக்கிறதென்பதை மறந்து, அதை ஸுகமென்றே எண்ணிவிடுகிறோம். இந்த ஜன்மத்தில் அனுபவிக்கவேண்டிய ஸுகம் எவ்வளவு என்பது, பிறப்பதற்கு முன்பே தீர்மானிக்கப்பட்டிருப்பதால், நம் பிரயத்தினத்தை எதிர்பாராமலே, அது நமக்குக் கிடைக்குமென்பதையும், நம் பிரயத்தினத்தினால் அதை முன்கூட்டி அனுபவிக்கவோ, மாற்றிக் கொள்ளவோ முடியாதென்பதையும் மறந்து விடுகிறீர்கள். துக்கத்தில் மூழ்கியிருக்கும் பணக்காரர்களையும், ஸந்தோஷத்தினால் குதூஹலமடையும் பிச்சைக்காரர்களையும் நாம் பார்க்கிறோமல்லவா? நம் மதம் இன்னதென்று தெரிந்துகொண்டிருக்கிற நீங்கள், பணத்திற்கும் ஸுகத்திற்கும் ஸம்பந்தம் வைக்கலாமா? உண்மையில், ஸுகஸாதனமென்றுதான், பணத்திற்கு மதிப்புக் கொடுக்கலாமா? பணம் வந்தால் ஸ்வீகரித்துக்கொண்டு உபயோகப்படுத்தலாமே தவிர, பணமில்லையே என்று குறைபடவாவது, ஏங்கவாவது நியாயம் கிடையாது. இது நிற்க, உங்கள் பையனுக்கு நவீன வித்யாப்பியாஸம் கொடுத்துவிட்டதால், நிறைய பணம் சேகரிப்பானென்றாவது, நீங்கள் உத்தேசிக்கிற லௌகிக அந்தஸ்தை ஸம்பாதிப்பானென்றாவது, நிச்சயமாய்ச் சொல்லமுடியுமா?

ப: ஸம்பாதிப்பானென்று எதிர்பார்க்கிறேன். அவ்வளவுதான் சொல்லமுடியும்.

ம: நீங்கள் நன்கு விசாரணை செய்யக் கூடாதவரில்லை. புத்தியுள்ள ஒருவன் ஒரு காரியத்தில் பிரவிருத்தித்தால், அவனுடைய மனதில் உத்தேசம் ஒன்று இருக்கவேண்டுமல்லவா?

ப: அந்தக் காரியத்தினால் கிடைக்கப்போகிற பலத்திலுள்ள ஆசைதான் பிரவிருத்திக்குக் காரணமாகும்.

ம: ஒரு குறிப்பிட்ட பலன் கிடைக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறவன், தன் மனதில் தோன்றினபடி, ஏதேனும் ஒரு காரியத்தில் இறங்குவானோ?

ப: அதெப்படி? அந்தப் பலனைக் கொடுக்கக் கூடிய காரியத்தில்தான் இறங்குவான்.

ம: அல்லது, அந்தப் பலனைக் கொடுக்கக் கூடிய காரியமென்று அவன் நினைத்துக்கொண்டிருந்தாலும் அதில் இறங்குவானில்லையா?

ப: ஆம்.

ம: ஆகையால், ஒவ்வொரு கார்யத்தையும் ஆரம்பிக்கும்முன், அந்தக் காரியத்திற்கும் உத்தேசிக்கிற பலனுக்கும் காரண காரிய ஸம்பந்தமுண்டென்று, சரியாகவோ தப்பாகவோ தெரிந்துகொள்ள வேண்டுமல்லவா? அதாவது இந்தக் காரியம் இந்தப் பலனைக் கொடுக்கும் என்ற எண்ணம் இல்லாத வரையில் பிரவிருத்தி இராது.

ப: அப்படித்தான்.

ம: அந்த எண்ணம் பிரவிருத்திக்குக் காரண மாவதற்கு, அது சரியாயிருக்க வேண்டுமென்ற அவ சியம் இல்லை.

ப: ஆனால் தப்பு எண்ணத்தை அறிவுடன் சேர்ப்பது கிடையாது.

ம: இந்த இடத்தில் எண்ணத்தை மாத்திரம் தான் சொல்லுகிறேன். அந்த எண்ணம் வாஸ்தவ ஸ்திதியை அனுஸரித்திருந்தால், சரியான அறிவாகும்; அனுஸரிக்காமலிருந்தால் தப்பான அறிவாகும். எப்படியும் சரியோ, தப்போ, இந்த எண்ணம் ப்ரவிருத்திக்குக் காரணமாகிறது. தரையில் வாஸ்தவ மான வெள்ளிக் காசைப் பார்க்கிற பையனும், சிப்பியைக்கண்டு வெள்ளி என்று ஏமாந்துபோகிற பையனும், இரண்டு பேர்களும் தரையிலிருந்து அதை எடுப்பதற்கு முயலுகிறார்கள். அவ்வளவுதான் இங்கே ப்ரகிருதம். வாஸ்தவஸ்திதியை ஒத்திருந்தால், அந்த அறிவுக்கு ப்ரமை (प्रमा) என்றும், மாறி யிருந்தால் ப்ரமம் (भ्रमः) என்றும் சொல்கிறார்கள். ப்ரமை (प्रमा) என்பது எப்படி ஏற்படுகிறது?

ப: சரியான அறிவிற்கு ஸாதனங்களாகிற பிரமாணங்களால் ஏற்படுகிறது.

ம: சாஸ்திர பரிபாஷையை விட்டுச் சொல்வோ மேயானால், பிரமாணங்கள் பிரத்யக்ஷம், அனுமானம், சப்தம் என மூவகைப்படுமல்லவா?

ப ஆம்.

ம: ஆகையால், இரண்டு பதார்த்தங்களுக்குள் இருக்கும் ஸம்பந்தம், நமக்கு, பிரத்யக்ஷம், அல்லது அனுமானம், அல்லது சப்தம் இவைகளால் தெரிய வேண்டும். நவீன வித்யாப்யாஸத்திற்கும் பணத்திற்கும் கார்ய காரண ஸம்பந்தம் இருந்தால், அது கீழே சொல்லிய ப்ரமாணங்களில் ஏதேனுமொன்றால் நமக்குத் தெரியவேண்டும்.

ப; அப்படியே.

ம: இந்தக் காரிய காரண ஸம்பந்தம் நமக்கு எப்படித் தெரிகிறது? இங்கிலீஷ்காரர்கள் நம் தேசத்திற்கு வந்து ராஜ்யபாரத்தை வஹிக்க ஆரம்பித்தவுடன், நம் தேச பாஷை தெரியாததால், நிர்வாஹம் நடத்துவதிலுள்ள சிரமத்தை உணர்ந்தார்கள். இதற்காக சிலர் தேச பாஷைகளைக் கற்றார்கள். பெரும்பாலோருக்குக் கற்றுக்கொள்ள ஸாத்தியப்படாமலிருந்தது. இருந்தாலும் வியாபாரம் நடக்க வேண்டும்; இந்நாட்டாருடன் வியவஹாரமும் செய்ய வேண்டும். வியாபாரம் நடக்கவும், ராஜ்யம் நிர்வஹிக்கவும், அவசியம் பாஷா ஸௌகர்யம் வேண்டியிருந்தபடியால், இந்தியர்களுக்கு இங்கிலீஷ் கற்றுக்கொடுத்து விட்டால், அப்படிக் கற்றுக்கொண்டவர்கள் தங்களுடன் இங்கிலீஷ் பாஷையிலும், ஸ்வஜனங்களுடன் தேசபாஷையிலும், பேச முடியுமென்று கருதி, இங்கிலீஷ் படிப்பை கற்றுக்கொடுக்க ஆரம்பித்

தார்கள். இவ்விதம் இங்கிலீஷைக் கற்றுக்கொண்டு, இருதரத்தாருடனும் பேசக்கூடியவர்களாக ஏற்பட்டவர்களுக்கு, "த்விபாஷிகள்" – அதாவது இரு பாஷைகளிலும் பேசக்கூடியவர்கள்-என்ற பெயர் ஏற்பட்டது. "த்விபாஷி" என்ற பெயரே வழக்கத்தில் "துபாஷ்" என்று ஆய்விட்டது. இங்கிலீஷ்காரர்களுக்கு தேச பாஷை தெரியாததினால், இந்தியர்களுடன் வியவஹாரம் செய்ய இந்த துபாஷ் மிகவும் அவசியமானார். அப்படியே இங்கிலீஷ் தெரியாத இந்தியர்களும் இந்த துபாஷையே நம்பும்படி ஏற்பட்டது. இவ்விதமாக இங்கிலீஷ்காரர்களின் ராஜ்ய ஆரம்பத்தில் துபாஷுக்கு செல்வாக்கு ஜாஸ்தி ஏற்பட்டு, இருதரத்தாருக்கும் மிக்க உபயோகமாயிருந்தபடியால், வெகு சீக்கிரம் பணமும் சேர நியாயம் ஏற்பட்டது.

ப: வாஸ்தவமே.

ம: அந்தக்காலத்தில் வேண்டுமானால், இங்கிலீஷ் படிப்பிற்கும் பணத்திற்கும், கார்ய காரண ஸம்பந்தம் பிரத்யக்ஷமாய்த் தெரிந்தது என்று சொல்லலாம். இந்தக்காலத்தில் அப்படி ஒரு ஸம்பந்தமுமிருப்பதாகத் தெரியவில்லையே?

ப: வாஸ்தவமாக ஒருவித ஸம்பந்தமும் இல்லைதான். பிரதிகிராமத்திலும், பரீக்ஷையில் தேறி பட்டம்பெற்றும் வேலை கிடைக்காத சிறுவர்கள், அரைடஜனுக்குக் குறையாமலிருக்கிறார்கள். பணத்திற்கு வழி ஏது?

ம: இதுமாத்திரமல்ல. நவீந வித்யையை அப்யஸிக்கின்ற பையன்கள், பின்னால் பணம் சம்பாதிக்கிறார்களோ, இல்லையோ, செலவாளிகளாகப் பழக்கிக்கொண்டுவிட்டார்களென்பதில் ஸந்தேஹமில்லை. ஆகையால், அவர்களுக்குப் பிழைப்புக்கு வழியில்லை என்பது மாத்திரமல்லாமல், நம் பிராசீன ஸம்பிரதாயத்திலிருந்துகொண்டு, ஸாத்விகமாய் ஆடம்பரமன்னியில் காலம் கழித்துவரும் மற்றவர்களைவிட மிகவும் ஹீனஸ்திதியிலிருக்கிறார்கள்.

ப: வாஸ்தவம்.

ம: இதை எதற்காகச் சொல்லுகிறேனென்றால், பிரத்யக்ஷத்தினால் நமக்கு ஏதேனும் தெரிகிறதாயிருந்தால், நவீநப் படிப்பிற்கும் பணத்திற்கும் கார்யகாரண ஸம்பந்தம் கிடையாதென்பது மாத்திரமல்லாமல், அதற்கு நேர் விபரீதமாய், நவீந வித்யாப்பியாஸத்திற்கும் தரித்திர தசைக்கும் காரண காரியஸம்பந்தமிருப்பதாகக்கூடத் தோன்றுகிறதல்லவா?

ப: அப்படித்தான் தோன்றுகிறது. தங்கள் குழந்தைகளுக்கு நவீந வித்யையைக் கற்றுக்கொடுக்க ஆரம்பித்திருக்கிற எத்தனையோ பெரிய குடும்பங்கள், நாளுக்கு நாள் தரித்திர தசையை அடைந்து வருவதைப் பார்க்கிறோம்.

### 3. தற்கால நிலை.

ம: இவ்விதம் அதிகமான ஜனங்கள் இங்கிலீஷ் படிப்புக்குப்போக ஆரம்பித்தவுடன், துபாஷுக்கு

அநுகூலமாயிருந்த காலம் நீங்க ஆரம்பித்தது. அப்பொழுது "இவர் இங்கிலீஷ் வாசித்தார்; இரண்டு மூன்று லக்ஷம் ஸம்பாதித்தார்; ஆகையால் என்பையனும் இங்கிலீஷ் வாசித்தால் பணக்காரன் ஆவான்" என்று கார்ய காரண ஸம்பந்தத்தை, அநுமானத்தால் ஊஹிக்கவேண்டிய காலம் வந்தது. தவறுதல்களைக் கணக்கிடாமல் இந்த அநுமானம் பிரவிருத்தித்தபடியால், இது சரியான அநுமானமாகாது. "என் பையனும் பணக்காரன் ஆவான்" என்றால், "என் பையனும் பணக்காரன் ஆகலாம்" என்றுதான் அர்த்தம். இங்கிலீஷ் வாசித்தவர்களில் ஏதோ சிலர் தான் மேலான அந்தஸ்தை அடைந்திருக்கிறார்கள் என்றும், மற்றவர்கள் முன் ஸ்திதியைவிட ஒரு சிலாக்யதையையும் அடையவில்லை யென்றும், ஒருவேளை முன் ஸ்திதிக்கு ஹானிகூட வந்திருக்கும் போலிருக்கிறது என்றும், அநேக ஸம்பவங்களைப் பார்த்துப் பார்த்து நாளடைவில் அறிவு ஏற்படும் போது, மேல்சொன்ன அநுமானம் தவறுவதே ஜாஸ்தியாகத் தோன்றுவதால், அந்த அநுமானத்தில் பிராமாண்யபுத்தி குறையும் காலத்தில், நவீன வித்யைக்கும் பணத்திற்கும் காரிய காரண ஸம்பந்தமிருப்பதாக அந்த அநுமானமும் சொல்ல இடமில்லை.

இனி சப்தப்பிரமாணமொன்றுதான் மிச்சமிருக்கிறது. உத்தம சப்தப் பிரமாணமான வேதம் இக்காரிய காரண ஸம்பந்தத்தைச் சொல்லவேயில்லை. ஆகையால் லௌகிக சப்தத்தைத்தான் எடுத்துக்

கொள்ளவேண்டும். கொஞ்ச நாட்களுக்கு முன்பு "இன்ன இன்ன யோக்யதையை ஸம்பாதித்தவர்களுக்கு இன்ன இன்ன உத்யோகம் இவ்வளவு இவ்வளவு சம்பளத்தில் கொடுக்கப்படும்" என்று ஸர்க்காரும் இதர அதிகாரிகளும் பிரசுரம் செய்திருந்தார்கள். ஆனால் லௌகிக சப்தம் நித்யமில்லாததினால், அப்படி அவர்கள் உத்தியோகம் கொடுத்துத்தான் ஆகவேண்டுமென்ற நிர்ப்பந்தம் கிடையாது. ஆகையால் "என்னமோ அப்பொழுது அப்படிப் பிரசுரித்தோம். ஆனால் இப்பொழுது அதன்படி நாங்கள் நடக்கத்தயாராயில்லை" என்று அவர்கள் சொல்லி விடலாம்; பல ஸந்தர்ப்பங்களில் சொல்லியுமிருக்கிறார்கள். "எங்களுக்குத் தோன்றினால் ரத்து செய்து விடுவோம்" என்பார்கள். இப்பொழுது, இந்நிலையும்மாறி, எவ்வளவு யோக்யதை இருந்தாலும், பிராமணராயிருந்தால் உத்தியோகம் கிடையாது என்பதுபோலக்கூட பிரசுரங்கள் வருவதாகக் கேள்விப்படுகிறேன். ஆகையால் இப்பொழுதுள்ள சப்தப்பிரமாணம், நவீன வித்யைக்கும் பணத்திற்கும் கார்யகாரண ஸம்பந்தத்தைக் காட்டாததுடன், அந்த ஸம்பந்தம் கிடையாது என்றே வியக்தமாய், அதிலும் பிராமணர் ஸம்பந்தப்பட்ட மட்டில், மிகவும் வியக்தமாய்த் தெரிவிக்கிறதாகவும் தெரிகிறது.

ப: எப்படியும், பிராஹ்மணர்களாய்ப் பிறந்து விட்டார்கள் என்பதற்காக உத்யோகமில்லையென்பது மிகவும் அக்கிரமம். யோக்கியதையை யல்லவா கவனிக்கவேண்டும்?

ம: நம் பையன்கள் பிராஹ்மண்யத்தைத் துடைத்தெறிந்து விடவும் தயாராயிருக்கிறார்கள். ஆனால் அது ரத்தத்தில் ஊறிக்கிடப்பதால், அவ்வளவு சுலபமாய் நிவர்த்திக்கக் கூடியதாயில்லை. வெளி வேஷத்தில் பிராஹ்மணரல்லாதவர் போல எவ்வளவு மாற்றிக் கொண்டாலும், பிராஹ்மண தர்மத்தை எவ்வளவு அலக்ஷ்யம் செய்தாலும், இன்னமும் 'நீங்கள் பிராஹ்மணர்களே' என்று ஞாபகப்படுத்திக் கொடுப்பதற்காக நாம் ஸர்க்காருக்கு மிகவும் நன்றி பாராட்டவேண்டியதுண்டு. இப்பொழுதாவது, ஸ்வரூபமற்றதான ஒரு லௌகிக அந்தஸ்து கிடைக்கப் போகிறதென்ற மோஹத்தினால் தங்கள் ஸ்வதர்மத்தை விடுவது சரியல்லவென்பதை, நம் சிறுவர்கள் உணர்வார்களா? இப்படி, பிரத்யக்ஷம் அநுமானம், சப்தம் என்ற பிரமாணங்களில் ஒன்றேனும், நவீநக் கல்விக்கும் பணத்திற்கும் கார்ய காரண ஸம்பந்தத்தைத் தெரிவிக்கவில்லையென்று ஏற்படுவதால், அந்த ஸம்பந்த ஞானம் ப்ரமை (भ्रमा) — அதாவது சரியான அறிவு—இல்லை யென்றே சொல்லவேண்டுமல்லவா? ஆனாலும் இந்த ஸம்பந்தம் வாஸ்தவத்தில் இருப்பது போல் வைத்து நாம் இன்னமும் குழந்தைகளை இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பியே வருகிறோம். ஏன்?

ப: கார்யகாரண ஸம்பந்தமிருப்பதாகத் தவறுதலாக நினைத்து, அதாவது ப்ரமத்தினால் அனுப்

புகிறோம் என்று, என்னை ஒப்புக்கொள்ளச் செய்கிறீர்கள் போலத் தோன்றுகிறது!

ம: வாஸ்தவ ஞானம் ஒருவிதமாயிருக்க, அதே காலத்தில் அதற்கு விபரீதமான ப்ரமமும் இருக்க முடியுமா? தனக்கு முன்னுளிருப்பது கிளிஞ்சல் என்று தெரிந்திருக்கும்போது, அது வெள்ளியென்ற தவறுதலான ஞானம் எப்படி ஏற்படும்? அதாவது பிரமை (प्रमा) இருக்கும் காலத்தில் ப்ரமம் (भ्रम:) எப்படி இருக்க முடியும்?

ப: வாஸ்தவமே. ஆனல், பிரகிருதத்தில் எப்படி ஸம்பந்தம் என்பது தெரியவில்லை?

ம: தற்காலத்தில் பிரத்யக்ஷம், அநுமானம், சப்தம் இம்மூன்று பிரமாணங்களும், நவீந வித்யைக்கும் பணத்திற்கும் ஸம்பந்தமில்லையென்பதையே காட்டுவதாகச் சொன்னேன். இவ்விதமாக பிரமை (प्रमा) சொல்லும்போது, அந்த ஸம்பந்தம் உண்டு என்ற ப்ரமம் (भ्रम:) எப்படி ஏற்பட முடியும்? முன்னெரு காலத்தில் அந்த ப்ரமம் இருந்திருக்கலாம். இப்பொழுது சுத்தமாய் நிவர்த்தியாகி விட்டது.

ப: பிரமை, ப்ரமம் இரண்டும் நம் பிரவிருத்திக்குக் காரணமில்லையானல், அவ்வித காரியகாரண ஸம்பந்தமிருப்பதுபோல், ஏன் பிரவிருத்திக்கிறோம்?

ம: நீங்கள் அல்லவா ஸமாதானம் சொல்ல வேண்டும்? ஒரு பலனை யுத்தேசித்து பிரவிருத்திக்கிற

ஒவ்வொரு புத்திசாலியும், அந்தப் பிரவிருத்திக்கும் பலனுக்கும் காரணகார்ய ஸம்பந்தமிருப்பதாகச் சரியாகவோ தப்பாகவோ நினைத்துக்கொண்டுதான், பிரவிருத்திப்பான் என்று சொன்னேனல்லவா ?

ப : ஆம். இதனால், இந்தமாதிரி பிரவிருத்தியில் இறங்குகிறவர்கள், புத்தியைச் செலுத்தி ஸாதக பாதகங்களை நன்ருகப் பரிசீலனை செய்யவேயில்லை யென்பது தங்கள் அபிப்பிராயமாகத் தெரிகிறது.

ம : அப்படித்தான். பகவான் நமக்கு மனன யோக்யதையைக் கொடுத்து மனிதனுக்கியும்கூட, நம்முடைய கவனக் குறைவினால் நம் ஸ்வதந்திரத்தை நாம் பாராட்டாமல், நடக்கிறபடி நடக்கிறதென்று, பிரவாஹத்தில் கட்டை மிதந்து போவதுபோல் ஆய் விட்டோம். ஒரு ஆடு தாவின இடத்தில் எப்படி கவனியாமல் மேல் மேல் மற்ற ஆடுகள் தாவுமோ அந்தமாதிரி நாம், அதிலும் பிராஹ்மணர்கள் நடந்து வந்ததினால்தான் ஸமீபகாலத்தில் ஏற்பட்டிருக்கும் சிரமங்கள் எல்லாம் ஏற்படக்காரணமாயிற்று.

ப : எப்படியும், இப்பொழுது நான் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று, தங்கள் ஆக்ஞையை எதிர்பார்க்கிறேன்.

ம : என் அபிப்பிராயம் கேட்டு என்ன பிரயோஜனம், அதன்படி நடக்கத் தயாராயில்லா விட்டால்? உங்கள் பையன் சிறு பையனாயிருந்து, இன்னமும் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப்படாம

விருந்தால், அவனை உங்களுடனேயே வைத்துக்கொண்டு உங்கள் முன்னோர்கள் அடைந்து மதித்திருந்த வாசிப்பையும் பயிற்சியையும் அவனுக்குக் கொடுங்கள். அவன் இங்கிலீஷ் வாசிக்கிறதாயிருந்தால் மாஸாமாஸம் எவ்வளவு பணம் செலவழிக்க வேண்டியிருக்குமோ, நீங்கள் செலவழிக்கவும் தயாராயிருக்கிறீர்களோ, அந்தப்பணத்தை அவனுக்கு என்று தனியாய் வைத்துக்கொள்ளுங்கள். அவனுக்கு வித்யாப்யாஸம் முடிந்தவுடன் ஸத்பிராஹ்மணனாகவும் ஏற்பட்டிருப்பான்; லௌகிக கார்யத்திலும் குறைவிருக்காது. இங்கிலீஷ் பள்ளிக்கூட ஸம்ஸ்காரத்தையடைந்திருக்கும் பெரிய பையன் ஸம்பந்தப்பட்டமட்டில், அந்த வித்யை பிழைப்புக்காக மாத்திரம் வேண்டுமானால் ஸாதனமாகலாமேதவிர, வெறும் ஜீவனத்தைவிட எவ்வளவோ மேலான காரியங்கள் நமக்கிருப்பதால், அவைகளை ஸம்பாதிக்க நம் மதமே கதியென்பதை அவன் நன்கு உணரும்படி செய்யவேண்டும். வெறும் ஜீவனத்திற்காக அத்யாத்ம சிரேயஸ்ஸை உதாஸீனம் செய்துவிடக் கூடாது. ஆகையால் நம் பிராசீன வித்யையையும் அனுஷ்டானங்களையும் வீட்டிலிருக்கும்போதாவது பழக்கத்தில் வைத்துக் கொள்ளும்படி சொல்லுங்கள். இதுவாவது நீங்கள் அவன் விஷயத்தில் அவசியம் செய்யவேண்டும்.

ப: மிகவும் கிருதார்த்தனானேன். தங்கள் ஆக்ஞைப்படி முடிந்த வரையிலும் நடக்கிறேன்.

அத்யாயம் 3

ஸம்பாஷணைகள் (?) — ஸங்க ஸாதனம்

## 1. ஹேது ஸாத்தியம்.

ஸ்ரீ மஹாஸ்வாமிகளவர்கள் ஒரு கிராமத்திற்கு விஜயம் செய்திருந்த ஸமயத்தில், ஒரு நாள் ஸாயங் காலம், அக்கிராமத்தில் பிரமுகர்களான சில கிருஹஸ்தர்கள் தர்சனார்த்தம் வந்து சேர்ந்தார்கள். அப் பொழுது அவர்களில் பிரதானரான கிருஹஸ்தர் ஒருவர், ஸ்ரீ ஸ்வாமிகளிடம் சொன்னார் :—

கி; சில வருஷங்களுக்கு முன்வரை, இந்த கிராமம் மிகவும் செழிப்பாயிருந்தது. கொஞ்ச நாட் களாக ரொம்பவும் க்ஷீணமாய்க்கொண்டு வருகிறது. மறுபடியும் பழைய செழிப்பையடையும்படி, தாங்கள் அனுக்ரஹிக்க வேண்டுமென்று மிகவும் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கிறோம்.

ம: நீங்கள் மனப்பூர்வமாய் பிரார்த்திக்கும் போது, பகவான் காது கொடுத்துக் கட்டாயம் கேட் பார். ஆனால், எதற்குப் பரிகாரம் நம் கையில் இல்லையோ, அதற்கு மாத்திரம் பகவானிடம் முறை யிட்டால் போதாதா ?

கி: இதற்குப் பரிகாரம் நம் கையில் எங்கே இருக்கிறது ?

ம: சில வருஷங்களாக இக்கிராமம் செழிப்பில் குறைந்து வருகிறதாகச் சொல்கிறீர்கள். நான்

கேள்விப்பட்டமட்டில், முன்னைவிட இப்பொழுது மெத்தை வீடுகள் ஜாஸ்தியாயிருப்பதாகத் தெரிகிறது. முன் நாட்களில் இருட்டடைந்து, காற்றில்லாமல் கூரைமேய்ந்த மண்சுவர் வீடுகளில், உங்கள் பெரியோர்கள் காலம் கழித்தார்கள். இப்பொழுது உங்கள் வீடுகளெல்லாமே கல், செங்கல் சுண்ணாம்பு இவைகளால் பலமாகக்கட்டப்பட்டு, காற்றோட்டமுள்ளதாயும், வெளிச்சமுள்ளதாயும், பார்வைக்கு வெகு அழகாகவும் அமைந்திருக்கின்றன.

நீ: வாஸ்தவமே.

ம: உங்கள் முன்னோர்கள் உடுத்தி வந்த உடைகளைவிட, வெகு உயர்ந்ததாகவும் ஜாஸ்தி விலையுள்ளதாகவுமே நீங்கள் உடை தரிக்கிறீர்கள். அவர்கள் ஸ்வப்னத்தில்கூடக் கேட்டிராத, அநேக புதுப்புதுப் பதார்த்தங்கள் உங்களுக்கு இப்பொழுது இருக்கின்றன.

நீ: ஆம்.

ம: அவர்களுக்கு கொஞ்ச தூரத்திலுள்ள ஒரு கிராமத்திற்குப்போக வேண்டுமானால், மண் ரோட்டில் ஆட்டம்கொடுக்கும் கட்டைவண்டியில் போகவேண்டியிருந்தது. இப்பொழுதோ, அதே ஸாவகாசத்தில், அதைவிட முப்பது பங்கு தூரமுள்ள ஓர் இடத்திற்கு நன்கு பாவியிருக்கும் ரஸ்தா வழியாய், அசைவே தெரியாமல் உயர்ந்த மோட்டார் காரில் போகமுடிகிறது.

கீ: வாஸ்தவம்தான்.

ம: முன்பு விளக்குகளுக்கு உள்ளூர் செக்கில் ஆட்டின எண்ணெய்தான் கிடைக்கும். இப்பொழுதோ உங்கள் விளக்குகளுக்கு எண்ணெய் கடல் தாண்டி வருகிறது. இன்னமும், மின்சாரம் இந்த ஊர் வரை வராமலிருந்தாலும், நல்ல பிரகாசமுள்ள தீபங்கள் கிடைக்கின்றனவல்லவா?

கீ: ஆம்.

ம: இப்படியிருக்க, உங்களுக்கு குறை சொல்லிக் கொள்ள நியாயமென்ன? ஸௌக்கியமாய் ஸந்தோஷமாய் இருக்க வேண்டியதற்குள்ள லக்ஷணங்கள் எல்லாம், உங்கள் முன்னோர்களைவிட உங்களுக்கு வெகு ஜாஸ்தியாகவே இருக்கிற ஸ்திதியில், இன்னும் என்ன வேண்டுமென்கிறீர்கள்.

கீ: இத்தனை ஸௌகர்யங்களும் ஏற்பட்டிருப்பது வாஸ்தவமே; ஆனாலும் எங்கள் முன்னோர்களுக்கு இருந்த ஸௌக்கியமும் ஸந்தோஷமும் எங்களுக்கில்லையே?

ம: அதெப்படி? ஸுக ஸாதனங்கள் எல்லாம் ஜாஸ்தியாகவிருக்கிறதென்று நீங்களே ஒப்புக் கொள்ளுகிறபடியால், ஸுகமும் ஜாஸ்தியாகத்தானே இருக்க வேண்டும்? எப்படியும் குறைய நியாயமில்லையே!

சீ: அதெப்படியோ? குறைந்திருப்பது வாஸ்தவம். முன்னைய ஸௌக்கிய நிலையை அடையவேண்டுமென்ற ஆவலுமிருக்கிறது.

ம: அப்படியானால் இவ்விஷயத்தில் சற்று ஆழ்ந்து யோஜிக்கவேண்டும். எங்கேயோ தவறுதல் இருக்கிறது. நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறபடி ஸுக ஸாதனங்கள் முன்னைவிட வெகு ஜாஸ்தியாய் ஏற்பட்டுங்கூட, ஸுகம் ஜாஸ்தியாக இல்லையென்றால், ஒன்று, அவைகள் வாஸ்தவமாய் ஸுக ஸாதனமில்லையென்றிருக்க வேண்டும்; அல்லது அவைகள் ஸுக ஸாதனம்தான் என்று வைத்துக்கொண்டாலுங்கூட, அவைகள் ஸுகத்தைக் கொடுப்பதற்கு வேறு ஒரு அவசியமான ஸாதனத்தை எதிர்பார்க்கின்றன என்றாவது இருக்கவேண்டும். முதலில், இந்த நவீந ஸௌகர்யங்கள் ஸுக ஸாதனங்களா வென்பதைக் கவனிப்போம். ஒரு பதார்த்தம் ஏற்படுவதற்கு முன், மற்றொரு பதார்த்தம் எப்பொழுதுமே இருந்தே தீரும் என்றிருந்தால், அப்பதார்த்தத்திற்கு அந்த மற்றொரு பதார்த்தம் காரணம் என்று, ஸாதாரணமாய் காரண காரிய ஸம்பந்தத்தைத் தீர்மானிக்கலாம். இந்த நியாயத்தை அந்வயம் என்பார்கள். அப்படியே, ஒரு பதார்த்தத்தின் இல்லாமை மற்றொரு பதார்த்தத்தின் இல்லாமைக்கு முன்னதாக எப்பொழுதுமே இருக்குமானாலும் அப்பதார்த்தம் அந்த மற்றொரு பதார்த்தத்திற்கு காரணம் என்று காரிய காரண ஸம்பந்தத்தைத் தீர்மானிக்கலாம். இதை வியதிரேகம் என்று சொல்

வார்கள். குடம் உண்டாவதற்கு முன், எப்பொழுதும் ஈரமண் இருக்கிறதென்று கவனிக்கிறோம்; ஈரமண் இல்லையானால், குடம் உண்டாவதில்லை என்பதையும் கவனிக்கிறோம். இவ்விதம் ஒத்துப்போகிற இரண்டு வித ஸம்பவங்களிலிருந்தும், ஈரமண் காரணமென்றும், குடம் காரியம் என்றும் தீர்மானிக்கிறோம். அதே மாதிரி, நவீந ஸௌகர்யங்கள் ஸுகத்திற்கு ஸாதனங்களாவென்று தெரிந்துகொள்ள, இந்த இரண்டு வழிகளிலும் விசாரித்துப் பார்க்க வேண்டும். இப்பொழுது இந்த நவீந ஸௌகர்யங்கள் இருந்தும், உங்களுக்கு ஸுகம் இல்லையென்கிறீர்களல்லவா?

கி: ஆம்.

ம: அதாவது, அந்வய வழியாய்க் காரியகாரண ஸம்பந்தத்தை ஊஹிக்க இடமில்லையென்று தெரிகிறது.

கி: ஆம்.

ம: உங்கள் முன்னோர்களுக்கு இந்த நவீந ஸௌகர்யங்கள் இருந்ததில்லையென்றும், ஆனாலும் ஸுகமாயிருந்தார்கள் என்றும், ஒப்புக்கொள்கிறீர்கள் அல்லவா?

கி: ஆம்.

ம: அதாவது, வ்யதிரேக வழியில் பார்த்தாலும், காரியகாரண ஸம்பந்தம் ஸித்திக்கவில்லை என்று ஏற்படுகிறது?

கி: ஆம்.

ம: ஆகையால், நவீந ஸௌகர்யங்கள் வாஸ்தவத்தில் ஸுகத்திற்கு ஸாதனமில்லையென்றே ஏற்படுகிறதல்லவா?

சி: யுக்திக்கு அப்படிந்தான் தெரிகிறது.

ம: ஆனல், ஸுகம் வேண்டுமென்ற ஆசை மாத்திரம் நமக்கு இருக்கிறது?

சி: அதில் என்ன ஆக்ஷேபணை?

ம: ஆகையால், நவீந ஸௌகர்யங்கள் ஸுகத்திற்கு ஸாதனமாகாது என்று தெரிந்துவிட்டபடியால், அவைகளைப் பரித்யாகம் பண்ணிவிடுவோம் என்று நினைத்துவிட்ட மாத்திரத்தில், ஸுகம் கிடைத்துவிடாது. ஸுகத்திற்கு வாஸ்தவமான ஸாதனம் எது என்று தெரிந்துகொண்டு அதைத் தேடியடைய பிரவிருத்தி செய்ய வேண்டுமல்லவா?

சி: ஆமாம். ஆனல் வேறு ஸாதனங்கள் எவை?

ம: அதுதான் இப்பொழுது கவனிக்கவேண்டிய விஷயம். முன் சொன்ன யுக்தியை யனுசரித்து, நம் முன்னேர்கள் ஸுகமாக இருந்தகாலத்தில், என்ன இருந்தது? இப்பொழுது நாம் ஸுகமாயில்லாமலிருக்கிற காலத்தில், என்ன இல்லை? என்பதைத்தீர்மானிக்கவேண்டும்.

சி: அது என்ன?

ம: நீங்களே சற்று யோசித்துப் பாருங்கள். அவர்கள் தங்கள் வைதிக கர்மாக்களை நித்யம் அனுஷ்

டிந்து வந்தார்கள்; தர்ம சாஸ்திரங்கள் இட்ட கட்டளைகளை நழுவாமல் நடத்திவந்தார்கள். இல்லையா?

சீ: ஆமாம்.

ம: இப்பொழுது, நீங்கள் அந்த தர்மங்களை அலக்ஷியம் செய்து வருகிறீர்களல்லவா?

சீ: ஒப்புக்கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது.

ம: அவர்களிடம் நன்னடத்தை, ஆசாரம், ஸத்யம் முதலிய ஆத்ம குணங்கள், எல்லாம் பொருந்தியிருந்தன. அவ்வித நடத்தையாவது குணங்களாவது உங்களிடமிருப்பதாகச் சொல்லமுடியுமா?

சீ: முடியாது தான்.

ம: அவர்கள் ஏன் அவ்வளவு நன்றாய் வைதிக கர்மாக்களை அனுஷ்டித்துவந்தார்கள்? நீங்கள் ஏன் அலக்ஷியம் செய்கிறீர்கள்?

சீ: காலதோஷம் என்று தான் சொல்லவேண்டும்.

ம: இது நொண்டி ஸமாதானம்; ஸமாதானமேயாகாது. உங்கள் முன்னோர்களுக்கு இருந்து வந்த சிரத்தை உங்களுக்கு இல்லை என்பதே வாஸ்தவம்.

சீ: வாஸ்தவம்.

ம: ஆகையால் சிரத்தையிருந்து அதன் படி நடந்து வந்த காலத்தில் ஸுகம் இருந்ததாகவும், சிரத்தை குறைந்து நடத்தையும் குறைவுபடுகிற காலத்

தில், ஜனங்களுக்கு ஸுகம் இல்லாமலிருப்பதாகவும் தெரிகிறதல்லவா ?

சி: ஆம்.

ம: இவ்விதமாக சிரத்தையும் தர்மமும் இருக்கும்போதெல்லாம் ஸுகம் இருந்துவந்திருக்கிறது, அவ்விரண்டும் இல்லாத காலத்திலெல்லாம் ஸுகம் இல்லை என்று ஏற்படுவதால், அவைகளையே ஸுகத்திற்கு ஸாதனமென்று நிர்மானிக்க வேண்டுமல்லவா ? திரும்பவும் அவைகளைக் கைப்பற்றுவீர்களேயானால், தானே ஸுகமும் வந்து சேரும்.

சி: ஆனால், இப்பொழுதும் மிகச்சிரத்தையுடன் தர்மானுஷ்டானத்தைக் கிரமப்படி நடத்திக்கொண்டிருக்கிற அநேகர்களைப் பார்க்கிறோம். மற்றவர்களை விட அவர்கள் ஒன்றும் ஜாஸ்தி ஸுகமுள்ளவர்களாகத் தெரியவில்லையே !

ம: அது ஸரியல்ல. மற்றவர்களைப்போல அவர்கள் செழிப்பு உள்ளவர்களாகத் தோன்றாமலிருக்கலாம். ஆனால், செழிப்புக்கும் ஸுகத்திற்கும் ஸம்பந்தமில்லையென்பதை ஏற்கனவே எடுத்துச் சொன்னேனல்லவா ? ஸுகம் என்பது மனதில் தோன்றும் ஒரு நிலைமை. அதைத் நிர்மானிக்க வெளியிலுள்ள பதார்த்தங்களின் தன்மையாவது எண்ணிக்கையாவது உபயோகப்படாது.

சி: அதெப்படி ?

ம: மூன்று லோகங்களுக்கும் அதிபதியாய் ஒருவன் இருக்கலாம்; அவனே துக்கியாகவுமிருக்கலாம். இன்னொருவன் பிச்சைக்காரனிலும் பிச்சைக்காரனுயிருக்கலாம்; உலகத்தில் அவனுக்கு ஸமமான ஸுகி கிடையாதென்றும் இருக்கலாம்.

சி: வாஸ்தவம் தான். அப்படியானல், ஸுகம் என்பது எதைப் பொறுத்தது?

## 2. ஸுகத்தின் தன்மை.

ம: ஸாதாரணமாக, நாம் ஆசைப்படும் பதார்த்தம் கிடைத்து விட்டால், ஸுகமடைகிறேமல்லவா?

சி: ஆம்.

ம: அப்பதார்த்தத்தை ஆசைப்பட்டுக்கொண்டு மாத்திரமிருந்த ஸமயத்தில், நம்முடைய மனது சஞ்சலத்திற்கு உட்பட்டிருந்தது. பதார்த்தம் கிடைத்தானவுடன், அந்த சாஞ்சல்யம் நின்று மனதில் அமைதி ஏற்படுகிறது.

சி: ஆம்.

ம: அதேமாதிரி, நமக்கு அருவருப்பாயிருக்கிற ஒரு வஸ்துவை விலக்கிவிட்டோமேயானலும், ஸுகமடைகிறேமல்லவா?

சி: ஆம்.

ம: அருவருப்பு மாத்திரமிருந்துவரும் ஸமயத்தில், மனது சஞ்சலமாயிருக்கிறது. அவ்வஸ்துவை

விலக்கியவுடன், இந்த சாஞ்சல்யம் நீன்று அமைதி ஏற்படுகிறது.

சீ: அப்படியே.

ம: ஆகையால், இரண்டு வழியாக ஸுகம் அடைவதிலும், ஸுகம் என்பது மனது அமைதியை யடைவது என்பதைத்தவிர வேறு இருப்பதாகத் தெரியவில்லை. அமைதிக்குக் காரணம் ஆசைப்பட்ட வஸ்து கிடைத்ததாயிருந்தாலும், வெறுக்கப்பட்ட வஸ்து விலகியதாயிருந்தாலும், அமைதிக்கு இடைஞ்சலாயிருந்த சாஞ்சல்யம் நிவிருத்தியானவுடன், அமைதி ஏற்பட்டு ஸுகம் ஸித்திக்கிறது என்பது வாஸ்தவமில்லையா?

சீ: ஆம்.

ம: முன்னிருந்த சாஞ்சல்யம் நிவிருத்தியானால் அமைதி யேற்படுமென்றிருப்பதால், அந்த நிவிருத்தி இன்னவிதமாகத்தான் ஏற்படவேண்டும் என்று நியமம் செய்ய அவசியமுண்டா? ஸாதாரணமாக, ஒரு வஸ்துவை அடைகிறதும், மற்றொன்றை விலக்குவதும், சாஞ்சல்யத்தை நிறுத்த உபயோகப்படுகிறதென்பது வாஸ்தவம். இந்த இரண்டு விதங்களைத் தவிர, வேறு விதமாயும் இந்த சாஞ்சல்யத்தை நிறுத்திக்கொள்ள ஸாத்தியமானால், அப்பொழுதும் ஸுகம் ஸித்தித்துத்தானே தீரவேண்டும்?

சீ: ஆம்.

ம: நமக்கு ஆசையை உண்டுபண்ணக்கூடிய பதார்த்தங்கள் உலகில் ஏராளமாயிருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட பதார்த்த விஷயமான ஆசையினுல் மனது சஞ்சலப்பட்டால், அது கிடைத்தவுடன் அது விஷயமான சாஞ்சல்யம் நின்றுவிடும் என்பது வாஸ்தவம். ஆனல் அடுத்த க்ஷணத்திலேயே, இன்னொரு பதார்த்த விஷயமான சாஞ்சல்யம் நம் மனதைப் பாதிக்க ஆரம்பிக்கும். இப்படியே, ஆசைப்படக்கூடிய பதார்த்தங்கள் ஏராளமாயிருப்பதால், இவ்விதமே சாஞ்சல்யமும், நிவிருத்தியும், ஓய்வில்லாமலிருந்துகொண்டேயிருக்கும். ஆகையால் விஷய ஆசையைப் பூர்த்திசெய்து கொள்வதன்மூலம், நம் மனதுக்கு சாசுவதமான அமைதியை உண்டுபண்ணுவது ஸாத்தியமில்லாத காரியம். அப்படியே, வெறுக்கத்தகுந்த பதார்த்தங்களும் அனந்தம். ஒரு பதார்த்தத்தை விலக்குவதன்மூலம், தாத்காலிகமாய் மனதுக்கு அமைதி ஏற்பட்டாலும், மறு க்ஷணத்தில் மற்ருெரு வெறுக்கத்தக்க பதார்த்தம் நம் மனதைப் பாதிக்க ஆரம்பித்துவிடும். அதையும் விலக்க வேண்டும். அப்புறம் வேறொன்றை விலக்கவேண்டும். உலகத்தில், நமக்கு துன்பத்தைக் கொடுக்கக்கூடிய பதார்த்தங்களையெல்லாம் கணக்கிட முடியாததால், வெறுப்பு, நிவிருத்தி, வெறுப்பு, நிவிருத்தி என்று ஓயாமல் இருந்தே தீரும். ஆகையால் வெறுப்புக்கு விஷயமான பதார்த்தங்களை விலக்கியோ, அவைகளில் ஸம்பந்தம் ஏற்படாமலிருக்கும்படியோ, பார்த்துக்

கொண்டு சாசுவதமான அமைதியை அடைந்துவிடலா மென்பதும் அஸாத்தியமான காரியம்.

சீ: ஆனால், அமைதி வேண்டுமென்று மாத்திரம் எல்லாருக்கும் தோன்றுகிறதே?

ம: தோன்றுகிறதென்பது வாஸ்தவம். ஆனால், மனது விரும்பும் பதார்த்தங்களையெல்லாம் அதற்குக் கொடுத்தோ, அதை பாதிக்கும் பதார்த்தங்களையெல் லாம் விலக்கியோ, அந்த அமைதியை ஸம்பாதித்து விடலாம் என்று நினைத்தால், ஒரு நாளும் நடக்காது. மேலும், ஒரு பதார்த்தத்தை அடையவாவது மற் றொன்றை விலக்கவாவது வேண்டிய முழு சக்தியும் நம்மிடம் இல்லையென்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளவேண்டும். பார்க்கப்போனால், வெளியில் உள்ள பதார்த்தங்களால் நமக்கு ஸுகமேற்பட வேண்டுமென்றிருந்தபோதிலும், நம்முடைய அடிமைத் தனத்திற்கு அளவேயில்லை.

சீ: அப்படியானால், அமைதியும் ஸுகமும் நமக்கு எப்படித்தான் கிடைக்கும்?

ம: ஒருவன் ஆரோக்கியத்துடனிருக்க வேண்டு மானால், அதற்கு முன் அவன் அனாரோக்கியத்துடன் இருந்திருக்க வேண்டுமென்ற நியமம் உண்டா?

சீ: இல்லை.

ம: ரோகமில்லாமலிருந்தால், ஆரோக்கியமா யிருக்கிறானென்று சொல்கிறோம். அதற்கு முன்

ரோகியாயிருந்திருக்க வேண்டுமென்ற அவசியம் இல்லையே?

சீ: இல்லை.

ம: முதலில் வியாதிக்ரஸ்தனுயிருந்து, பிறகு அதிலிருந்து விடுபட்டவனைத்தான், ஆரோக்கியமுள்ள வன் என்று சொல்லவேண்டுமென்பது மிகவும் அஸங் கதமாகும். அவனை ஆரோக்கியமுள்ளவன் என்று சொல்லலாம். அவனைத்தான் அப்படிச் சொல்லலாம் என்பது ஸரியல்ல. ரோகமின்மை என்பது ஆரோக் கியமாகுமே தவிர, ரோகம் முன் இருந்து இப்பொழுது இல்லை என்பதும் வேண்டுமா?

சீ: வேண்டியதில்லை தான். பிரகிருதத்தில்?

ம: அப்படியே, ஸுகம் என்பது துக்கமில்லாம லிருப்பது என்று அர்த்தமாகலாமேதவிர, முன் துக்க மிருந்து இப்பொழுது நிவிருத்தியாயிருந்தால்த் தான் ஒருவனை ஸுகியென்று சொல்லலாம் என்ருகாது. ஒரு குறிப்பிட்ட பதார்த்த ஸம்பந்தமான விருப்பத்தி ஞலோ, வெறுப்பிஞலோ, மனது தன் நிலைதவறி சஞ் சலப்பட்டு பின்பு அப்பதார்த்தம் கிடைத்தவுடனே, விலகினவுடனே, தன் நிலையை அடைந்து ஸுகத்தை யனுபவிப்பது வாஸ்தவமே. இதனுல் ஸுகம் அடை யும்போதெல்லாம், அதற்கு முன்னுல் சாஞ்சல்யம் இருந்தே தீரவேண்டும் என்று சொல்லலாமா?

சீ: அது ஸரியாகாது.

ம: முன்றால் ரோக விஷயமான அனுபவமில்லாமலே ஒருவன் ஆரோக்கியமாயிருக்கலாம் என்று தெரிந்துகொள்வது போலவே, மனதுக்கு சாஞ்சல்ய மென்ற அவஸ்தை முன்றுவில்லாமலே ஸுகமாயிருக்கலாமென்று தெரிந்துகொள்ள வேண்டும். வாஸ்தவத்தில் ரோகம் வந்து நிவிருத்தியான பிற்பாடு ஆரோக்கியமடைந்தவனுடைய ஆரோக்கியத்தைவிட, முன்னல் ரோகமே வராமல் ஆரோக்கியமாய் இருந்துவருகிறவனுடைய ஆரோக்கியம், ஸ்வபாவத்திலும் உண்மையிலும் நிலைத்திருப்பதிலும் எவ்வளவோ மேன்பட்டது. அதேமாதிரி, மனது சஞ்சலப்பட்டு அமைதியடைந்து அப்புறம் அனுபவிக்கும் ஸுகத்தைவிட, சஞ்சலப்படாமலேயே அனுபவிக்கும் ஸுகம், ஸ்வபாவத்திலும் புஷ்டியிலும் நிலைத்திருப்பதிலும் எவ்வளவோ மேலானதே.

சீ: வாஸ்தவம்தான். ஆனல் அப்பேர்ப்பட்ட ஸுகம் எப்படிக் கிடைக்கும்? ஸுக ஸாதனத்தைத் தேடியடைந்து, அல்லது துக்க ஸாதனத்தை விலக்கித்தானே ஸாதாரணமாய் ஸுகம் கிடைக்கிறது?

ம: ஸாதாரணமாய் அப்படித்தான். அதினல்தான், தேடும் சிரமமும் விலக்கும் சிரமமும் அன்னியில், வேறு மூன்றாவது வழி ஒன்று உண்டென்று முன்னமேயே சொன்னேன். அவ்வழியில் கிடைக்கும் ஸுகம், ஸங்கேதமன்னியில் பூர்ணமாகவும் சாசுவதமாகவும் இருக்குமல்லவா?

## 3. நித்ய ஸுகம்.

சி: இருக்கும்தான். அந்த மூன்றாவது வழி என்ன?

ம: அவ்வழி இதுதான். மனதில் சாஞ்சல்யம் ஏற்பட இடம் கொடுக்காமலிருப்பதே.

சி: அதெப்படி?

ம: வியாதியை உண்டுபண்ணக்கூடிய ஒரு வஸ்துவுக்கும், தான் அகப்பட்டுக்கொள்ளாமல் ஜாக்கிரதையாயிருந்தால், அவன் ஆரோக்கியமாகவே இருந்துவரலாமல்லவா?

சி: ஆம்.

ம: அப்படியே, மனதை தன் நிலையிலிருந்து நழுவும்படி செய்து துக்கத்தைக் கொடுக்கக்கூடிய எவ்வித பதார்த்தத்திற்கும், தான் அகப்பட்டுக் கொள்ளாமலிருந்துவிட்டால், ஸுகமாகவே இருக்கலாமல்லவா? பின்னால் செய்யும் பரிஹாரத்தைவிட, முன்னால் பந்தோபஸ்து செய்துகொள்வது சிலாக்கியம் என்ற ஸாமான்ய நியாயம்தான் இங்கேயும். நான் நிர்மலமாயிருக்கிறேன் என்று சொல்லிக்கொள்வதற்காக, மலத்தில் கையை விட்டு விட்டு அப்புறம் கழுவியாக வேண்டுமென்ற அவசியமுண்டா?

சி: விருப்பத்தின் பூர்த்தியினாலோ, வெறுப்பின் நிவிருத்தியினாலோ ஏற்படுகிற ஸுகம் வாஸ்தவமான ஸுகம் இல்லையென்பதும், விருப்பு வெறுப்பு

இரண்டும் அற்று தந்நிலையிலிருக்கும் மனதின் அனுபவமே வாஸ்தவ ஸுகமென்பதும் தங்கள் அபிப்பிராயமென்று தெரிகிறது.

ம: அப்படியே?

சீ: ஆனால், விருப்பையோ வெறுப்பையோ உண்டாக்கக் கூடிய பதார்த்தங்களே நிறைந்திருக்கிற இப்பெரிய உலகத்தின் மத்தியில் இருந்துகொண்டு தன் நிலையை அடையவாவது, அதிலிருந்து நழுவாமலிருப்பதாவது எப்படி முடியும்?

ம: முடிகிறதோ இல்லையோ, உலகத்திலுள்ள அனந்தமான இஷ்டா நிஷ்ட பதார்த்தங்களை எல்லாம் தீர்த்து விட்டு ஸுகத்தையடைவேன் என்று ஆரம்பிப்பதைவிட இது ஸாத்தியமான காரியம்தான்.

சீ: அந்தப் பிரவிருத்தி அசட்டுத்தனமாயிருக்கலாம். அதனால் இந்த வழி ஸாத்தியமென்று ஆகிவிடவில்லையே?

ம: ஏன் ஆகாது? ஓர் அறைக்குள் உங்கள் பார்வையை இழுக்கக் கூடியதாக இருபது பதார்த்தங்கள் இருந்தால், அவைகளை இழுக்கவிடாமல் பண்ணுவதற்கு, ஒவ்வொரு பதார்த்தத்திற்கும் ஒவ்வொரு மூடி தயாரித்து மூடுவது தேவலையா? அல்லது உங்கள் கண்ணை மூடிக்கொள்வது தேவலையா?

சீ: கண்ணை மூடிக்கொள்வதுதான் ஸுலபம்.

ம: அப்படியே, உலகத்தில் நம் மனதில் சஞ்சலத்தை ஏற்படுத்தக்கூடிய அனந்தமான பதார்த்தங்களை நம் இஷ்டப்படி வைக்கவோ, மாற்றவோ, தொலைக்கவோ, உண்டுபண்ணவோ நம்மால் ஸாத்தியமில்லை. அவைகள் நம்மை இழுப்பதற்கிடமில்லாமல், நம் மனதை ஸரிப்படுத்திக்கொள்வது அதைவிட ஸாத்தியமல்லவா? உங்கள் முன்னோர்கள் ஸுகமாயிருந்தார்கள் என்றால், அவர்களுக்கு ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய விஷயங்கள் ஜாஸ்தியிருந்தனவென்றாவது சிரமத்தைக் கொடுக்கக்கூடிய விஷயங்கள் உங்களுக்கு இருப்பதைவிட அவர்களுக்கு குறைவாய் இருந்தனவென்றாவது, அர்த்தமில்லை. இவ்வுலகத்தின் மத்தியில் அவர்களிருந்தபோதிலும் அமைதி, ஸமாதானம், திருப்தி, ஸுகம், இவைகளிருப்பதற்குக் காரணமான மனஸ் ஸ்வஸ்ததை அவர்களால் காப்பாற்றப்பட்டு வந்தது. வெளியிலுள்ள பதார்த்தங்கள் மூலம் அவர்களுக்கு ஸுகம் ஏற்படவில்லை. தங்களைத் துன்பப்படுத்தக்கூடிய யோக்கியதை பாஹ்யபதார்த்தங்களுக்கு உண்டென்று ஒப்புக்கொள்ளவும் அவர்கள் தயாரில்லை. அவர்களுடைய அமைதி, ஸமாதானம், திருப்தி, ஸுகம் இவைகள் தன் நிலையில் ஸ்வபாவஸித்தமாயும், பலமாயும், சாசுவதமாகவும், இருந்தன. நீங்களும் ஸுகமாகவிருக்க விரும்பினால் அவர்களுடைய மனோநிலையையே அப்யஸிக்க வேண்டும். மேலும், பிராம்ஹணர்களுக்கு இம்மனோபாவம் ஸஹஜமாய் ஊறிக்கிடப்பதால், அதைப்புறக்கணித்து வெளியுலகத்தில் ஸுகத்தைத் தேடவாரம்

பிதார்களையானால், அடுத்த ஜன்மத்திலும் இதே மஹோபாவ ஸௌகர்யம் கிடைக்கும்படியான பாக்கியத்தை இழந்தவர்களாக ஆவார்கள். ஒரு பதார்த்தத்தை நன்கொடையாகப் பெற்றவன், அது கையிலிருக்கும்போது அதை நன்கு மதிக்கவில்லையென்று கொடையாளிக்குத் தெரிந்தால், மறுபடியும் அதை அவனுக்கு தானம் கொடுக்க ஸம்மதிப்பானா? அதே மாதிரி, பகவானும் நம் விஷயத்தில் இப்பொழுதுள்ள விசேஷ ஸௌகர்யத்தை, மறுபடியும் கொடுக்க மறுத்துவிட்டால், அது நியாயமேயாகும். ஆகையால் உங்களுக்கு ஸ்வபாவஸித்தமாய் ஸஹஜமாயிருக்கும் திருப்தியென்ற பதார்த்தத்தைக் கைவிடாதீர்கள். அப்படியே, உங்கள் கடமை என்கிற ஸ்வதர்மத்தையும் கைவிடாதீர்கள். காலக்ரமத்தில் எல்லாம் க்ஷேமமாகவே முடியும். உங்கள் பிராஹ்மண்யத்தை மறுபடியும் உறுதியாய் கைப்பற்றிக் காப்பாற்றிவர பிரயத்தனம் செய்யுங்கள். பகவான் உதவி செய்யக் காத்திருக்கிறார் என்பதையும் த்ருடமாக நம்புங்கள்.

சீ: கூடியமட்டும் பார்க்கிறோம். இருந்தாலும் இது பிராஹ்மணர்களுக்கு மிகவும் போதாத காலம்.

ம: இப்போதாத காலம் எப்பொழுது ஆரம்பித்தது? அதையும் ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். தன் ஆசாரம், தர்மம் இவைகளிலிருந்து நழுவவாரம்பித்து, ஐஹிக விஷய ஸம்பாதனத்தில் மற்றவர்களுடன் போட்டிக்கு இறங்கின நாள் முதல் ஆரம்பம்.

முன்னோர்கள் ஸம்பாதித்து வைத்திருந்த யோக்கியதை யினாலும் புண்ணியத்தினாலும், புத்திக் கூர்மையாலும், போட்டியில் லெகுவாக மற்றவர்களைத் தோற்கடிக்க முடிந்தது; ஐஹிக விஷயங்களைக் கைப்பற்ற முடிந் தது. அநாதி பரம்பரையாய்க் கிடைத்த ஒரு பெரும் நிதியை, நன்றி மறந்து அற்ப விஷயத்திற்காக துர் விநியோகப்படுத்துகிறோமென்ற எண்ணமே மறைந் தது. தோற்றுப்போனவர்கள் முதலில் இவர்களைக் கண்டு வியப்புற்றார்கள்; பிறகு பொறாமையடைந் தார்கள்; இப்பொழுது த்வேஷமாக முற்றியிருக் கிறது. இந்தப் போட்டியிலிருந்து பிராஹ்மணர்கள் விலகினால், உடனே முன்னிருந்த மரியாதையையும் கௌரவத்தையும் பெறுவார்கள். முன்பு இவர்க ளிடம் மதிப்பிருந்ததற்குக் காரணம், மற்றவர்களை விட இவர்கள் செல்வவந்தர் என்பதாவது, பலசாலிகள் என்பதாவது இல்லை; செல்வவந்தரைவிட இவர்களுக்கு ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய திருப்தி என்ற ஒரு பெரிய நிதியும், பலசாலிகளைவிட பலவான்களாக இவர்களைச் செய்த தர்மம் என்ற ஒரு சக்தியும் இவர் களிடம் இருந்தன. ஆகையால், "போதாத காலம்" என்பதெல்லாம் நாம் பண்ணிக்கொள்வதுதான். நாம் ஒவ்வொருவரும் ஸம்பந்தப்பட்டமட்டிலும், நம் முன்னோர்களின் நிர்வியாஜமான சிரத்தை, ருஜுவான நடத்தை, மதத்தில் ஊக்கம், கலக்கமடையாத திருப்தி இவைகளை ஸம்பாதித்துக் கொண்டுவிட்டால், அவரவர்களுக்கு அந்தப் "போதாத காலம்" அந்த

கஷணமே நிவிருத்தியாய்விடும். நாம் பிராஹ்மணர்கள் மாத்திரம் தங்கள் நிலையிலிருந்து எவ்வளவு தூரம் தவறியிருக்கிறோமென்று உணரும்படியும், மறுபடியும் அந்நிலையை அடைய வேண்டுமென்ற ஊக்கத்தைக் கொடுத்து பிரவிருத்தி செய்யும்படியும் 'இப்போதாத காலம்' நம்மை வாஸ்தவத்தில் செய்யுமேயானால், அதையே நல்ல காலமென்று பாவிப்போமாக.



அத்யாயம் 4

## தைவமும் புருஷகாரமும்

### 1. உபயோகமற்ற விசாரம்.

ஒரு நாள் ஒரு சிஷ்யன், தான் ஏதாவது ஹிதோ பதேசம் பெற்றுக்கொள்ள வேண்டுமென்ற ஆவலுடன், ஸ்ரீமஹாஸ்வாமிகளவர்களிடம் வந்து வணங்கி னின்றான். ஆனால் தன் அபிப்பிராயத்தை வெளியிட அவன் தயங்குவதைப் பார்த்து, ஸ்ரீமஹா ஸ்வாமிக ளவர்கள் தானே பேசத் தொடங்கினார்கள்.

ம: நீங்கள் எப்பொழுதும்போல் வேதாந்த கிரந்தங்களை வாசித்து வருகிறீர்களென்று நம்புகிறேன்.

சி: ஒரு நியமமாய், விடாமல் தொடர்ச்சியாய் வாசிக்கிறேனென்று சொல்வதற்கில்லை. என்னமோ விட்டுவிட்டு கொஞ்சம் கொஞ்சம் வாசிக்கிறேன்.

ம: அப்படி வாசிப்பதிலும் அநேக ஸந்தேஹங்கள் ஏற்பட்டிருக்குமல்லவா?

சி: அம்மாதிரி ரீதியில் கவனத்துடன் நன்கு வாசித்தேன் என்று சொல்வதற்கில்லை.

ம: வேதாந்த சாஸ்திராப்பியாஸத்தின் ஆரம்பத்தில், அதன் ப்ரக்ரியைகளைப்பற்றி ஏற்படக்கூடிய ஸந்தேஹங்களை நான் சொல்லவில்லை. நன்கு விஷய பரியாலோசனையைச் செய்யப் புகும்போது யாருக்கும் ஸாமான்யமாய் அநேக ஸந்தேஹங்கள் தோன்றும் அல்லவா?

 நீ: ஆம். அப்படியே அநேக ஸந்தேஹங்கள் தோன்றுவது உண்டு.

ம: அவ்வித ஸந்தேஹங்களுக்குத் தாங்கள் ஏதாவது ஸமாதானம் யோஜித்து வைத்திருக்கிறீர்களா? அப்படியானால், அதில் ஒரு ஸந்தேஹத்தையும், அதற்குத் தங்கள் ஸமாதானத்தையும் சொல்லுங்கள்.

நீ: அவைகளில், அடிக்கடி என்னை தொந்திரவு செய்து ஸமாதானத்தை அபேக்ஷிக்கிற ஒரு ஸந்தேஹத்தைத் தெரிவிக்கிறேன். ஆனால், ஸமாதானத்தை நான் தெரிந்துகொள்ளவில்லை. தாங்களே ஸமாதானத்தைச் சொன்னால், கிருதார்த்தனாவேன்.

ம: என்ன, சொல்லுங்கள்.

நீ: "தைவத்திற்கும் புருஷகாரத்திற்கும் அநாதி ஸித்தமாயிருக்கிற விரோதம்" என்ற விஷயம்தான். அவ்விரண்டின் எல்லை எதுவரை? அவைகளின் விரோதத்தை எப்படி பரிஹரிக்கிறது?

ம: நீங்கள் இப்பொழுது கேட்கிற ரீதியில், உங்களுக்கு ஸந்தேஹம் ஏற்பட்டிருந்தால் அது மிகப் பெரியதுதான். அதற்கு ஸமாதானமும் எப்பேற்பட்ட புத்திசாலிக்கும் புலப்படாது.

நீ: ஏன்? நான் கேட்ட மாதிரியில் தவறுதல் ஒன்றுமில்லையே? என் ஸந்தேஹத்தை மாத்திரம் சொன்னேனே தவிர, அது எப்படி சிரமப்படுத்துகிறதென்று கூட நான் சொல்லவில்லையே?

ம: ஸந்தேஹம் இன்னதென்று நீங்கள் சொல்கிறமாதிரியிலேயே, அதனால் உங்களுக்கு ஏற்படும் சிரமம் நன்கு தெரிகிறதே!

சி: அதெப்படி?

ம: இரண்டு பதார்த்தங்கள் இருந்தால்தான், விரோதம் என்பது ஏற்படும். ஒரே பதார்த்தமிருந்தால் விரோதத்திற்கு அவகாசமே கிடையாது.

சி: இங்கே தைவம், புருஷகாரம், என்று இரண்டு பதார்த்தங்கள் இருக்கின்றனவே?

ம: ஸந்தேஹம் மனதில் உதிப்பதற்கே இந்த எண்ணம் தான் காரணம்.

சி: நான் ஒன்றை இரண்டாக எண்ணிக்கொள்கிறேன்? நான் எண்ணினாலும் எண்ணாவிட்டாலும், இவ்விரண்டு பதார்த்தங்களும் தனித்தனியே இருக்கின்றன என்பதை மறைக்க முடியுமா?

ம: இதுவும் ஒரு பிசகு.

சி: எப்படி?

ம: நம் மதத்தின் தத்வங்களை, நீங்கள் நன்கு அறிந்திருப்பீர்கள். இதற்கு முன் நீங்கள் செய்திருக்கும் கர்மாக்களால் ஏற்படும் பலன்களின் ஸமூஹத்தைத் தான், தைவமென்று சொல்கிறோம். ஆகவே, அது உங்களை விட்டுத் தனியாக வேறிடத்தில் இருப்பதில்லை. அப்பலனை அவரவர்களுக்கு சேர்ப்பிக்கும் பொறுப்பை மாத்திரம் பகவான் வஹிப்பதால்,

அப்பலரூபமான தைவம் அவரால் உண்டுபண்ணப் பட்டதில்லை. உங்களாலேயே ஏற்படுத்திக்கொள்ளப் பட்டது. இப்பொழுது, அதாவது கர்மா செய்யும் காலத்தில் உபயோகிக்கும் ஸாதனத்தைப் புருஷகாரம் என்கிறோம்.

சீ: இன்னமும், அவ்விரண்டும் எப்படி வெவ் வேறில்லையென்பது தெரியவில்லை.

ம: இப்படிக் கவனியுங்கள். தைவம் என்பது சென்ற காலத்திய கர்மா; புருஷகாரம் நிகழ்காலத் திய கர்மா. காலத்தினால் வித்யாஸமிருந்தாலும், கர்மா என்ற முறையில் இரண்டும் ஒன்றே தான். இரண்டும் ஒன்றாயிருக்கும்பொழுது பரஸ்பரம் விரோதம் ஏற்பட நியாயமில்லை.

சீ: எப்படியும், காலத்தினால் வித்யாஸமிருக்கத் தானே யிருக்கிறது. அதை உபேக்ஷிக்க முடியுமா?

ம: உபேக்ஷிக்கச் சொல்லவில்லை; சற்று ஆழ்ந்து யோசித்துப் பாருங்கள் என்றுதான் சொல்கிறேன். நிகழ்காலம் நம் முன் இருக்கிறது; நம் புருஷகாரத் தினால், அதை மாற்றிக்கொள்ள யத்தினம்செய்யலாம். சென்ற காலம் சென்றதே. நம் திருஷ்டிக்கு எட்டா ததினால் அதற்கு "அதிருஷ்டம்" என்ற பெயரும் ஏற்பட்டிருக்கிறது. இரண்டு பதார்த்தங்களுக்குள் இருக்கும் பல தாரதம்யத்தைத் தீர்மானிக்க வேண்டு மானால், அவ்விரண்டும் நம் முன் தோன்றுதிருந்தால் முடியாது. நிகழ் காலத்திய புருஷகாரம் மாத்திரம்

மூன் தோன்றியும், சென்ற காலத்திய தைவம் முன் தென்படாமலுமிருக்கின்றது. இரண்டு மல்லர்கள் நம் முன் பிரத்யக்ஷமாய்த் தென்பட்டாலும், அவர்களுக்குள் பலாபலம் தீர்மானிப்பது ஸாத்தியமில்லை. ஒருவனுக்கு சரீர கனமிருக்கலாம், மற்றவனுக்கு சரீர லாகவமிருக்கலாம்; ஒருவனுக்குத் தசை பலமிருக்கலாம், மற்றவனுக்குப் பிடிமானமிருக்கலாம், ஒருவனுக்கு அப்யாஸ ஸௌகர்யமிருக்கலாம், மற்றவனுக்கு பரபரப்பில்லாமலிருக்கலாம். இவ்விதமாக இருவரிடமுமுள்ள ஒவ்வொரு அம்சங்களையும் எடுத்துக்கொண்டு, யுக்திக்குமேல் யுக்தி கற்பித்துக்கொண்டு, இவன்தான் ஜயிப்பான் என்று வியவஹாரம் செய்யலாம். ஆனால், இவ்வம்சங்களை ஸமயத்திற்கு உபயோகப்படாமல் பிரதிகூலமாகவும் ஆகிவிடலாமென்பதை அனுபவத்தில் பார்க்கிறோம். ஆகையால், பலத்தின் தாரதம்யத்தைத் தீர்மானிக்க, நிச்சயத்தைக் கொடுக்கக்கூடியதும் யுக்தி யுக்தமானதும், ஸாத்தியமானதுமான வழி, அவ்விருவர்களையும் மல் யுத்தம் செய்யச் சொல்லி நேரில் பார்க்கவேண்டியதுதான். இப்படி இரண்டும் பிரத்யக்ஷ ஸித்தமாயிருக்கும்போதே இப்படியானால், திருஷ்டமான புருஷகாரத்திற்கும் அதிருஷ்டமாயிருக்கிற தைவத்திற்கும் உள்ள பல தாரதம்யத்தை யுக்தியினால் தீர்மானித்து விடலாமென்பது எப்படி ஸாத்தியமாகும்?

சி: தீர்மானிக்க வழியே யில்லையென்று தாத்பர்யமா?

ம: இந்த வழிதான் இருக்கிறதே. இரண்டு மல்லர்களும் யுத்தம் செய்தால், யார் பலிஷ்டன் என்பது தீர்மானமாகி விடுகிறது.

சீ: அந்த வழியின் மூலம், சண்டை முடிந்த பிறகல்லவா பலாபலம் தீர்மானமாகிறது. அப்பொழுது தெரிந்து கொள்வதில் என்ன பிரயோஜனம்?

ம: தெரிந்துகொள்ளவேண்டிய அவசியமுமில்லை.

சீ: சண்டைக்கு முன் தீர்மானிக்க ஸாத்தியமில்லை; சண்டைக்குப் பின் தீர்மானிக்க அவசியமில்லை, என்றல்லவா ஆகிறது?

ம: அப்படியே. ஆகையால், இந்த தாரதம்ய சர்ச்சையே நிஷ்பிரயோஜனமாகும்.

2. தைவம் வழிகாட்டும்.

சீ: அப்படியானால், தைவம் நடத்துகிறபடி நடக்கட்டுமென்று இருந்துவிடலாமா?

ம: அப்படியல்ல. புருஷகாரம் நடத்துகிறபடி நடக்கவேண்டும்.

சீ:

ம: முன் உபயோகித்த புருஷகாரத்தின் பலன் அல்லவா தைவம் என்பது! முன் உங்கள் புருஷகாரத்தை உபயோகப்படுத்தி, அதன் பலனாகிய தைவத்தை ஸம்பாதித்துக் கொண்டீர்கள். இப்பொழுதும் உங்கள் புருஷகாரத்தைச் செலுத்தி,

அந்தப் பழைய பலன் பாதகமாயிருந்தால் மாற்றவும், ஸாதகமாயிருந்தால் விருத்தி செய்யவும், நீங்களே செய்துகொள்ள வேண்டும். எப்படியும் ஸுகத்தை அதிகப்படுத்தவோ, துக்கத்தைக் குறைக்கவோ, இப்பொழுது புருஷகாரத்தைச் செலுத்தித்தான் ஆக வேண்டும்.

சீ: ஆனால், புருஷகாரத்தை எவ்வளவு நன்றாய் உபயோகித்தாலும், உத்தேசித்த பலனைக் கொடுக்க வொட்டாமல், அநேக ஸந்தர்ப்பங்களில் தைவம் குறுக்கே வந்து கெடுத்து விடுகிறதே?

ம: மறுபடியும் தைவத்தின் லக்ஷணத்தை மறந்தே பேசுகிறீர்கள். தைவமென்பது உங்களுக்கு அன்னியமாய் இருந்துகொண்டு, உங்கள் புருஷகாரத்தைக் கெடுக்கக்கூடிய சக்தி வாய்ந்த ஒரு தனி பதார்த்தமேயில்லை. வாஸ்தவத்தில், ஏற்கெனவே அது உங்களிடத்திலேயே இருக்கிறது.

சீ: இருக்கலாம். இருந்தாலும், புருஷகாரத்துடன் விரோதித்துக்கொள்ளும் ஸமயத்தில்தானே, அது இருப்பதாகவே தெரிகிறது? பழைய பலன்கள் எவை என்று தெரியாமலும், அவைகளை அறிந்து கொள்ள ஸாதனமில்லாமலுமிருக்கும்போது, அப்பலனை எப்படி மாற்றமுடியும்?

ம: ஏதோ சில மஹான்களைத் தவிர, மற்றவர்களுக்கு முன் நிகழ்ச்சி தெரியாதென்பது வாஸ்தவமே. ஆனாலும், இந்த அறியாத்தன்மையே நமக்கு பெரிய

அனுகூலம். இந்த ஜன்மத்திலோ, இதற்கு முன்னுள்ள எண்ணற்ற ஜன்மங்களிலோ, நாம் செய்திருக்கும் கர்மாக்களின் பலன்கள், பலவிதமாயும் அனந்தமாயுமிருக்கின்றன. அவைகளெல்லாம் நம் அறிவில் தோன்றவாரம்பித்தால், நாமே திடுக்கிட்டுப்போய், அவைகளை மாற்றப் பிரயத்தனம் செய்வதையே விட்டுவிடத் தோன்றும். இப்பிறவியிலேயே, மறதி என்பது, பரமதயாளுவான பகவானால் நமக்கு அளிக்கப்பட்ட ஒரு பெரிய வரம் என்றே சொல்லவேண்டும். முன் நடந்த எல்லா ஸம்பவங்களையும், மறக்காமல் ஒவ்வொரு க்ஷணத்திலும் மனதில் சுமப்பதானால், பெரும் பாரமாகும். அப்படியே, வரும் காலத்தில் ஆசாஸ்தி, அதாவது க்ஷேமத்தையே எதிர்பார்த்தல் என்ற விசேஷ ஸ்வபாவமும் நம்மிடமிருந்துவருகிறது. அது இருப்பதினால்தான், தைரியமாய் புருஷகாரத்தை உபயோகப்படுத்த முடிகிறது. இவ்விதமாக, சென்றகால மறதியும், வருங்கால ஆசாஸ்தியும் நமக்குக் கிடைத்திருக்கும் இரண்டு பெரும் பாக்கியங்களாயிருப்பதால், அவைகளை அலக்ஷ்யம் செய்வதற்கில்லை.

சீ: சென்றகால விஷயமான மறதி, இப்பொழுதுள்ள புருஷகாரத்திற்கு இடைஞ்சல் செய்யாமலும், வரும்கால ஆசாஸ்தி உத்ஸாஹத்தைக் கொடுக்கிறதாயும் இருக்கலாம். இருந்தாலும், அநேக ஸந்தர்ப்பங்களில், நம் புருஷகாரத்திற்கு பிரதிபந்தமாய் தைவம் நிற்கிறதென்பதையும் மறக்க முடியாது.

ம: புருஷகாரத்திற்கு தைவம் பிரதிபந்தகம் என்று சொல்வது ஸரியல்ல. வாஸ்தவத்தில், புருஷகாரத்தை எதிர்ப்பதுபோல் தோன்றிக்கொண்டு, பலன்கிட்ட வேண்டுமானால், இப்பொழுது எவ்வளவு தூரம் புருஷகாரத்தை உபயோகிக்க வேண்டுமென்பதையே நமக்கு தைவம் சொல்கிறது. ஸாதாரணமாய், ஒரு பலனை உத்தேசித்து ஒரு கர்மா விதிக்கப்பட்டிருக்கும். ஆனால், அக்கர்மாவை எவ்வளவு ஊக்கமாய், எவ்வளவு காலம், எத்தனை தடவை செய்ய வேண்டுமென்று நமக்குத் தெரிகிறதில்லை. முதல் தடவையில் பலன் கிட்டாத விஷயத்தில், நாம் இதற்கு விருத்தமான வழியில், நம் புருஷகாரத்தை இதற்குமுன் உபயோகப்படுத்தியிருக்கிறோம் என்றும், அவ்விதம் முன் உபயோகப்படுத்தியிருக்கிற புருஷகாரத்தின் பலனை ரத்து செய்துகொள்ள வேண்டுமென்றும், அப்புருஷகாரத்தின் பலாபலத்திற்குத் தக்கபடி, இப்பொழுது நாம் பிரயத்தினம் செய்ய வேண்டுமென்றும், நாம் ஸுலபமாய் ஊஹித்துக் கொள்ளலாம். ஆகையால், தைவம் செய்வதாகத் தோன்றுகிற தடையானது, வாஸ்தவத்தில் இப்பொழுது செய்யவேண்டிய பிரயத்தினத்தின் அளவைத் தீர்மானிக்கவே உபயோகப்படுகிறது.

சி: பிரயத்தினம் செய்யவாரம்பித்த பிற்பாடு அல்லவா தடை இருப்பதாகத் தெரிகிறது? அப்படியிருக்க, அத்தடை பிரயத்தின ஆரம்ப காலத்தில் நமக்கு எப்படி உபயோகப்படும்?

ய: முதலிலேயே உபயோகப்படவேண்டுமென்று அவசியமில்லை. முதலில், தடையேற்படும் என்ற எண்ணமே இல்லாமல்தான் பிரவிருத்தி ஆரம்பிக்க வேண்டும். நம் எண்ணம் தடையன்னியில் நிறைவேறும், நம் புருஷகாரத்திற்கு பிரதிபந்தகமே கிடையாது என்று எண்ணிக்கொண்டுதான், பிரயத்தினம் செய்யவேண்டும். பிரயத்தினம் பலிக்காமல்போனால், அப்பொழுதுதான், இதற்கு முன் விபரீதமாய்ப் பிரயத்தினம் செய்திருப்பதாகவும், அதனால் பிரதிபந்தம் ஏற்படுகிறதென்றும் தெரிந்துகொண்டு, இப்பொழுது இருமடங்கு ஊக்கத்துடனும், விடாமுயற்சியுடனும், பிரயத்தினம் செய்யவேண்டுமென்று தெரிந்துகொள்ள வேண்டும். அப்பிரதிபந்தமும் நம்மாலேயே ஏற்படுத்தப்பட்டிருக்கிறபடியால், அதை நிவிருத்தி செய்யவும் நமக்கு சக்தியுண்டென்பதை நன்கு உணரவேண்டும். மறுபடி பிரயத்தினம் செய்தும்கூட, பலனேற்படாத விஷயத்தில், அப்பொழுதும் அதைரியப்பட நியாயமில்லை. தைவம் என்பதே புருஷகாரத்தின் கார்யமாயிருப்பதால், புருஷகாரத்தைவிட மிக்க பலமுள்ளதாயிருக்க முடியாது. இப்பொழுது பலிக்கவில்லையேயென்றால், முன் பிரயத்தின பலனை மாற்றக்கூடியபடி அவ்வளவு அதிகமாக இப்பொழுது பிரயத்தினம் செய்யவில்லை யென்றுதான் ஏற்படும். அதாவது, தைவமும் புருஷகாரமும் தனித் தனி பதார்த்தங்கள் இல்லாததினால், அவைகளுக்குள் தாரதம்யத்திற்கு இடமில்லை. முன்னுள்ள ஊக்கத்திற்கும் இப்பொழுதுள்ள ஊக்கத்திற்கும்தான் தாரதம்யம்.

சி: அப்படியானாலும், முன் எவ்வளவு ஊக்கத்துடன் ஒரு கர்மாவை செய்திருக்கிறோமென்பது, இப்பொழுது பிரயத்தினம் செய்த பிற்பாடுதானே தெரியும்?

ம: இப்பொழுது புலப்படாத, அதாவது அதிருஷ்டமான, எல்லா விஷயங்களிலுமே அப்படித்தான். உதாஹரணமாக, ஒரு மரத் தூணில் இறக்கப்பட்டிருக்கிற ஓர் ஆணியை எடுத்துக்கொள்வோம். அதைப்பார்க்கும்போது, தூணுக்கு வெளியில் நீட்டிக்கொண்டிருக்கிற சுமார் ஒரு அங்குல நீளம் நம் பார்வைக்குத் தெரியவரலாம். ஆணியின் மீதி பாகம் மரத்திற்குள் பதிந்திருப்பதால், அப்பாகம் எவ்வளவு நீளம் என்று நாம் பார்க்க முடியாது. ஆகையால் நம் ஸம்பந்தப்பட்ட மட்டில், அப்பாகம் அதிருஷ்டமாகும். தூணுக்கு அழகாக பூச்சுக்கொடுத்திருப்பதால், அப்பாகத்தைப் பிடித்துக் கொண்டிருக்கும் மரம் என்ன மரம் என்று தெரிவதற்கும் இல்லை. இதுவும் அதிருஷ்டமேயாகும். இவ்வாணியை வெளியில் எடுக்க வேண்டுமானால், எத்தனை இழுப்பு இழுக்க வேண்டும், ஒவ்வொரு இழுப்பும் எவ்வளவு பலமுள்ளதாய் இருக்க வேண்டும், என்று சொல்லுங்கள் பார்ப்போம்.

சி: அதை இப்பொழுது எப்படிச் சொல்கிறது? மரத்திற்குள் பதிந்திருக்கும் நீளம் தெரிந்தாலல்லவா இப்பொழுது வேண்டிய இழுப்பின் எண்ணிக்கையையும் பலத்தையும் தீர்மானிக்க முடியும்?

ம: வாஸ்தவமே. மரத்திற்குள் போயிருக்கும் நீளம் அகஸ்மாத்தாய் ஏற்பட்டதில்லை. ஆணியை உள் அனுப்பின அடிகளின் எண்ணிக்கையின் பேரிலும், அவ்வொவ்வொரு அடியின் பலத்தின் பேரிலும், அவ்வடிகளை ஏற்றுக்கொண்ட மரத்தின் தன்மையின் பேரிலும் அல்லவா அவ்வளவு நீளம் உள்ளே சென்றிருக்கிறது?

சீ: ஆம்.

ம: ஆகையால், இப்பொழுது நாம் இழுக்க வேண்டிய இழுப்பின் எண்ணிக்கையும், பலமும், அவ்வாணியை மரத்திற்குள் செலுத்தின அடிகளின் எண்ணிக்கையையும் பலத்தையும் பொறுத்திருக்கிறதல்லவா?

சீ: ஆம்.

ம: ஆனால், மரத்திற்குள்ளிருக்கும் நீளம் இப்பொழுது கண்ணுக்குத் தெரியாமலும் தெரிந்து கொள்ள முடியாமலுமிருப்பதால் அதிருஷ்டமாயிருக்கிறது. அப்படியே முன் ஏற்பட்டிருக்கிற அடிகளும் முன்னால் ஏற்பட்டவை என்ற காரணத்தினாலேயே அதிருஷ்டங்களாகின்றன அல்லவா?

சீ: ஆம்.

ம: மரத்திற்குள் போயிருக்கும் நீளம் தெரியாத காரணத்தினாலாவது, மரத்திற்குள் அனுப்பிய அடிகளின் எண்ணிக்கையும் பலமும் தெரியாத காரணத்

னுலாவது, ஆணியை வெளியில் எடுக்கப் பிரயத்தினம் செய்யாமலே இருந்துவிடுகிருேமா? அல்லது, இப்பொழுது கொடுக்கும் இழுப்பின் எண்ணிக்கையையும், பலத்தையும் கிரமமாய் ஜாஸ்திப்படுத்திக்கொண்டாவது ஆணியை எடுத்துவிட பிரயத்தினம் செய்கிருேமா?

சீ: காரியம் நடக்கவேண்டுமாளுல், பிரயத்தினத்தைத்தான் ஜாஸ்திப்படுத்துகிருேம்.

ம: இதே நியாயத்தை எல்லாப் பிரயத்தினங்களிலும் அனுஸரிக்கவேண்டும். ஸாத்தியமானவரையில் பிரயத்தினம் செய்தே தீரவேண்டும். கடைசியில் உங்கள் ஸங்கல்பமே நிறைவேறும்.

### 3. சாஸ்திரங்களின் உபயோகம்.

சீ: எவ்வளவு பிரயத்தினம் செய்தாலும் சில கார்யங்கள் பலிக்காமலே போகிறதில்லையா?

ம: அது ஸரியல்ல. ஒரு விஷயம் என்று இருந்தால், அது அனுபவிக்கப்படுவதற்காகவே ஏற்பட்டிருக்கிறது. அப்படியில்லையாளுல், அது ஜகத்தில் இருக்க நியாயமில்லே. ஜகத்திலிருப்பதால் அது அனுபவிக்கப்படக்கூடியதாகவே இருக்கவேண்டும். ஆகையால், அடையப்படக்கூடாததாக ஒரு விஷயமும் கிடையாது. ஆளுல், இப்பொழுது நாம் இருக்கும் ஸ்திதியில் அடையாமலும், இப்பொழுது நமக்கு இருக்கும் யோக்கியதையில் அடையக்கூடாமலும்,

அநேக விஷயங்கள் இருக்கலாம். அடையக்கூடிய தன்மை, அடையக்கூடாத தன்மை என்பது அவ்விஷயத்தைச் சேர்ந்த லக்ஷணமில்லை, நம் ஸாமர்த்தியத்தையே பொறுத்திருக்கிறது.

சீ: ஒரு பிரயத்தினம் பலிக்கிறதா இல்லையா என்பது கடைசியில்தானே தெரியும்? இப்பொழுது நமக்குள்ள யோக்யதையில் எவ்வித விஷயமாக பிரயத்தினம் செய்யலாம் என்றுவது, அவ்விஷயத்தை யுடைய எவ்விதமான பிரயத்தினம் செய்யவேண்டு மென்றுவது, முன்கூட்டி எப்படித் தெரிந்துகொள்ள முடியும்?

ம: உங்கள் கேள்வி மிகவும் நியாயமே. உங்கள் கேள்விக்குப் பதில் சொல்வதே தர்ம சாஸ்திரங்களின் உத்தேசமாகும். நம் அதிகார ஸம்பத்துக்களைப் பரிசீலனம் செய்து, எந்த எந்த அதிகாரமுள்ளவன், எந்த எந்த கர்மா செய்யலாமென்று, அவை தீர்மானிக்கின்றன. நம் யோக்யதைகள் பலவிதமாயும், பலவாகவும் இருப்பதால், கர்மாக்களும் பலவிதமாயும் பலவாகவும் இருக்கின்றன. கர்மாக்களைத் தீர்மானித்தலே, அதாவது பாதகமேற்படாமல் பிரயோஜனப் படக்கூடிய மாதிரியில் எப்படியொருவன் புருஷகாரத்தை செலுத்த வேண்டுமென்று உபதேசித்தலே, சாஸ்திரத்தின் முக்கிய காரியம். அவ்விதம் தீர்மானிக்கப்பட்ட கர்மாவைத்தான் ஸ்வதர்மம் என்கிறார்கள். புருஷகாரத்தை நிர்ப்பந்திக்க சாஸ்திரம் ஏற்படவில்லை. இஷ்டப்படி நடக்கலாம்; ஆனால் எது நல்லது

ஏது கெட்டது என்று சொல்லும் பொறுப்பை மாத்திரம் சாஸ்திரம் வஹிக்கிறது; மற்றப் பொறுப்புப் பூராவும் நம்மையே சேர்ந்தது. தைவம் நம்மாலேயே ஸம்பாதிக்கப்பட்டிருப்பதால், தைவத்தை தூஷிப்பதில் பிரயோஜனமில்லை. நம் கர்மாவுக்குத் தக்கபடி பலன் கொடுக்கும் பொறுப்பை மாத்திரம், ஈசுவரன் வஹிப்பதால், ஈசுவரன்பேரில் குற்றம் சொல்வதற்கும் இல்லை. நம் யோகக்ஷேமம் நம் கையிலேயே இருக்கிறது. அதை உண்டு பண்ணவோ, சிறப்பிக்கவோ, கெடுக்கவோ நமக்கே ஸ்வாதந்திரியம் உண்டு. இது ஒரு விதத்தில் நமக்குள்ள பாத்தியதையாகும். அதுவே விசேஷப் பொறுப்புமாகும்.

ரீ: தெரிந்துகொண்டேன். இருந்தாலும், அநேக ஸந்தர்ப்பங்களில் அவ்வளவு ஸ்வாதந்திரியம் வஹிக்க இடமில்லாமல் போய்விடுகிறதே. ஒரு கார்யம் செய்வது தப்பு என்று நன்கு தெரிந்தபோதிலும், சிலவேளைகளில் அதைச் செய்யத் தோன்றுகிறது. அப்படியே, மற்றொரு காரியம் நல்லது என்று தெரிந்தபோதிலும், சிலவேளைகளில் அதைச் செய்ய முடியாதவனாயிருக்கிறேன். ஆகையால் நான் புருஷகாரத்தைச் செலுத்துவதற்கு இடைஞ்சலாக, ஒரு சக்தியிருப்பதாகத் தோன்றுகிறது. அச் சக்தி பலவத்தரமாயிருக்கிற நிலைமையில், என் யோகக்ஷேமம் என் கையில் இருக்கிறதென்றால் எப்படி? அச்சக்திக்குத் தானே தைவம் என்று பெயர்?

ம: இரண்டு வெவ்வேறான பதார்த்தங்களைக் கலந்து பேசுகிறீர்கள். தாங்கள் சொல்கிற சக்தி வேறு, தைவம் என்பது வேறு. ஒரு கருவியை நீங்கள் முதல்தடவையாக உபயோகிக்கிறீர்களென்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது சிரமத்துடனும், கொஞ்சம் தவறுதலாகவும் உபயோகப்படுத்தக்கூடும். மறுதடவை அதே கருவியை உபயோகிக்க ஏற்பட்டால், சிரமமும் தவறுதலும் குறையும். அடிக்கடி உபயோகித்து வந்தால், சிரமமன்னியில் ஸுலபமாய் உபயோகிக்கத் தெரிந்துவிடும். அதாவது, அப்யாஸம் ஜாஸ்தியாக ஜாஸ்தியாக, ஸாமர்த்தியமும் ஸுலபத் தன்மையும் ஜாஸ்தியாய் வரும். அடிக்கடி உபயோகிப்பதால், மறுபடியும் உபயோகிக்க வேண்டுமென்று எண்ணமும் தோன்றும். முதல் தடவை திருடுகிற பையன், பிரயத்தினத்தின் பேரிலும், பயத்துடனும் திருடுவான். அடுத்த தடவையில் பிரயத்தின சிரமமும் பயமும் குறையும். அடிக்கடி ஸந்தர்ப்பங்கள் ஏற்பட்டால், திருடுதல் பழக்கமாகி சிரமமன்னியில் ஏற்பட்டுவிடும். பிறகு இப்பழக்கம் திருட அவசியமில்லாத ஸமயத்திலும் திருடும்படி தூண்டும். இதைத்தான் வாஸனை என்று சொல்கிறார்கள். நமக்கு இஷ்டமில்லாத கார்யத்திலும், நம்மை பிரவிருத்திக்கும்படி செய்கிறதாய் நீங்கள் சொன்ன சக்தி இந்த வாஸனையே. இதுவும் நாமாக ஸம்பாதித்துக் கொண்டதுதான். ஆனால் இது தைவம் ஆகாது. நல்ல காரியமோ, கெட்ட காரியமோ, அதற்கு பலனாக

ஏற்பட்டிருக்கிற ஸுகத்தையோ, துக்கத்தையோ கொடுக்கக்கூடிய ஸம்மானமோ, தண்டனையோதான் தைவத்தைச் சேர்ந்தது. ஒரு காரியத்தைச் செய்ததினால் மனதில் ஏற்படும் ருசி, அதே காரியத்தை மறுபடியும் செய்வதில் ஸௌகர்யம், அதேகாரியத்தை செய்ய வேண்டுமென்ற தோற்றம், இவை ரூபமான வாஸனை என்பது தைவத்தைவிட வேறேதான். ஸாதாரணமாய், முன் செய்த கர்மாவின் பலனான ஸம்மானமோ, தண்டனையோ, விபரீத பிரயத்தின மில்லாதபோனால் ஏற்பட்டே தீரும். வாஸனையை மாற்றிக்கொள்ளவும் நிக்கிரஹம் செய்யவும் நமக்கு ஸ்வாதந்திரியம் உண்டு.

சீ: நமக்கு இருக்கும் வாஸனைகள் எண்ணிக்கையில் அடங்காதே. அவைகளை எப்படி நிக்ரஹம் செய்ய முடியும்?

ம: வாஸனை என்பது எப்பொழுதுமே வெளிப்பட்டுவிடப் பிரயத்தினம் செய்யும். நல்லதோ, கெட்டதோ, எல்லா வாஸனைகளுக்கும் இந்த ஸ்வபாவம் உண்டு. இந்த வாஸனை என்ற நதியில் நல்லது, கெட்டது என்ற இரண்டுவித பிரவாஹங்கள் ஓடுகின்றன. நதி முழுவதையும் அணைபோட்டுத் தடுக்கப் பார்த்தால் ஆபத்து ஏற்படலாம். ஆகையால் அப்படி ஒரேயடியாய்த் தடுக்கும்படி சாஸ்திரம் சொல்லவில்லை. நல்ல வாஸனைப்பிரவாஹ வேகத்தை உபயோகித்துக்கொண்டும், கெட்ட வாஸனைப்பிரவாஹ வேகத்தை எதிர்த்தும், பிரயத்தினம் செய் என்று

சாஸ்திரம் சொல்கிறது. நம் மனதில், இவ்வாஸனை இப்பொழுது கிளம்புகிறது என்று நமக்கு தெரிகிற படியால், நாம் அவ்வாஸனைக்கு பராதீனம் என்று எப்படிச் சொல்ல முடியும்? அவ்வாஸனைக்கு இடம் கொடுக்கலாமா வேண்டாமா என்று தீர்மானிக்கிற பொறுப்பு நமக்கே இருக்கிறது. எந்த வாஸனை நல்லது, எந்த வாஸனைக்கு இடம் கொடுக்கலாம், எந்த வாஸனை கெட்டது, எந்த வாஸனைக்கு இடம் கொடுக்காமல் தடுக்கவேண்டியது என்னும் விஷயங்களை சாஸ்திரங்கள் விபரமாய் சொல்கின்றன. அப்யாஸத்தினால் எல்லா வாஸனைகளையும் நல்லதாகச் செய்து, நம்மைக் கெடுக்கக்கூடிய கெட்ட வாஸனைகள் ஏற்படாமலும், செய்து விட்டால், அதன் பிறகு, நல்ல வாஸனைகளை யனுஸரித்து நடக்க வேண்டிய பொறுப்பிலிருந்தும் நம்மை விடுவிக்க ஸாதனங்கள் எவை யென்று சாஸ்திரங்கள் சொல்லிக் கொடுக்கின்றன. படிப்படியாக எவ்வித வாஸனைக்கும் உட்படாமல் இருக்கக்கூடிய நிலைமையை அடையலாம். அந்நிலைமையில் நம் மனது வாஸனையற்று ஸ்படிகம்போல் சுத்தமாய்விடும். எவ்வித கர்மாவும் செய்வதற்கு காரணம் இராது. அப்படியாய் விட்டால் கர்ம பலன்களிலிருந்து விடுதலையும் அவசியம் ஏற்படும். அப்பொழுது த்வைதம், வாஸனை இரண்டுமே மறையும். அப்புறம் ஸ்வாதந்திரியம் பூர்ணமாய் சாசுவதமாக இருக்கும். இவ்விடுதலையையே மோக்ஷம் என்கிறார்கள்.

அத்யாயம் 5

## வக்கீல் உத்யோகம்

### 1. நிஷ்காமகர்மப் பயிற்சி

ஒரு நாள் ஒரு பக்தர், தன் நண்பரான ஒரு வக்கீலையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு, ஸ்ரீ மஹா ஸ்வாமிகளவர்களை தர்சனம்செய்ய வந்தார். இருவரும் வந்தனம் செய்து உட்கார்ந்ததும், பக்தர் ஸ்ரீ ஸ்வாமிகளவர்களிடம் பின்வருமாறு விக்ஞாபனம் செய்தார் :—

**பக்தர்:** நவீன வித்யாப்யாஸமிருந்தால், பிராஹ்மண்யம் கெட்டுவிடும் என்று ஸாதாரணமாய் சொல்வதுண்டு. இந்த என் நண்பர் விஷயத்தில் மாத்திரம், அப்படிச் சொல்வதற்கில்லை. ஸாத்தியமான வரையில் சிரத்தையுடன் பிராஹ்மணருக்குரிய கர்மாக்களை க்ரமப்படி அனுஷ்டித்துவருகிறார்.

**ம:** அப்படியா? நவீந ஸம்ஸ்காரம் இருந்தும், பிராஹ்மண விருத்தியைப் பரிபாலித்து வருகிறார் என்று கேட்க, மிகவும் ஸந்தோஷம். அந்த வித்யாப்யாஸத்தின் தன்மையை நானும் அறிந்திருக்கிறபடியால், அது இவரை பாதிக்கவில்லையென்பதை மாத்திரம் நான் பூரூவும் ஒப்புக்கொள்ள முடியவில்லை. இந்த ஸம்ஸ்காரம் ஏற்படாமலே இருந்திருந்தால், இவர் ஸாக்ஷாத் வஸிஷ்டராகவே இருந்திருக்கலாம். இது ஏற்பட்டதினால்தான், அப்பதவியையடையாமல் கீழே இருக்கிறார் என்றிருக்கலாம்.

பந்து: தாங்கள் சொல்வதே வாஸ்தவமாயிருக்கலாம். எங்களைவிட இவர் எவ்வளவோ மடங்கு உத்கிருஷ்டமாயிருக்கிறார் என்பதைத்தான் சொல்ல வந்தேன்.

ப: அது ஸரி. [வக்கிலைப் பார்த்து] உங்கள் உத்யோகம் மிகச்சிலாக்கியமானது. ஒரு யஜமானனிடத்தில் ஸேவை செய்வதிலுள்ள அஸௌகர்யங்கள் உங்களுக்குக் கிடையாது.

வக்கீல்: அது வாஸ்தவம். ஆனால், சில ஸமயங்களில் அந்த ஸேவா விருத்தியே சிலாக்கியமென்று தோன்றுகிறது.

ப: ஏன்?

வ: எங்களுக்குமேல் யஜமானன் இல்லை என்பது வாஸ்தவம். இந்தக் காரணத்தினால்மாத்திரம், எங்களை ஸ்வதந்திரர்களென்று சொல்வதற்கில்லை. எங்களுக்கு ஸ்வாதந்திரியமே இல்லை. நாங்கள் கக்ஷிக்காரர்களுக்கும், நியாயாதிபதிகளுக்கும் பராதீனர்களே. ஒரு குறிப்பிட்ட யஜமானன் கிடையாதே தவிர, எங்களை அபேக்ஷிக்கிற ஒவ்வொரு கக்ஷிக்காரர்களும் யஜமானர்களாகிவிடுகிறார்கள். ஒவ்வொரு நியாயாதிபதியின் மனோபாவங்களையும், விசித்திர ஸ்வபாவங்களையும் கவனித்து நடக்கவேண்டியவர்களாகவும் இருக்கிறோம்.

ப: காலமாவது உங்களுக்கு ஸ்வாதீனமாயிருக்கிறதல்லவா? உங்களுக்கு ரஜா வேண்டிய காலத்தில், இன்னொருவரைக் கேட்க அவசியமில்லை. கச்சேரிக்குப்

போகவேண்டாமென்று நினைத்தால், போகாமலிருந்து விடலாம் மற்ற உத்தியோகங்களிலிருப்பவர்களுக்கு இது முடியாதல்லவா ?

வ: வாஸ்தவமே. ஆனல், அப்படிச் செய்தால், வேலை குறையும்; வேலை குறைந்தால் வரும்படி குறையும். தவிரவும், காலை வேளைகளில் கக்ஷிக்காரர்களிடம் தகவல் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது மறுநாளைக்கு வேண்டிய வியவஹாராம்சங்களை நன்கு அறிந்து யோசித்துவைக்க, ராத்திரியும் வேண்டியிருக்கிறது; மத்தியானமோ கச்சேரி. இப்படியிருக்க, காலவிஷயத்தில்தான் எங்களுக்கு என்ன ஸ்வாதந்திரியம் இருப்பதாக சொல்லிக்கொள்ள முடியும் ?

ம: ஸாதாரணமாக காலையில் உங்கள் ஜபம் பூஜை இவைகளுக்கு, எவ்வளவு ஸாவகாசம் கொடுக்கிறீர்கள் ?

வ: ஒரு மணி ஸாவகாசத்திற்குமேல் கிடைப்பது துர்லபம்.

ம: ஒரு மணி நேரத்தில் எவ்வளவோ ஸாதித்துவிடலாமே! ஆனல், மத்தியில், ரொம்ப அவஸரமான கார்யமென்று நினைத்து, நீங்கள் எழுந்திருந்து வரும் வரை பொறுக்காமல், உங்கள் குடும்பஸ்தர்களோ, ஸ்நேகிதர்களோ, குமாஸ்தாக்களோ குறுக்கிட்டாலும் ஸஹித்துக் கொள்ளத்தானே வேண்டும் ?

வ: இவ்விதத் தொந்திரவுகள் அடிக்கடி ஏற்படத்தான் ஏற்படுகின்றன.

ம: இதில் என்ன ஆச்சர்யம்? உங்களைப்போல் லௌகிக காரியமில்லாமலிருக்கிற எனக்கே, அபிமானிகளான பக்தர்களாலும், வேலைக்காரர்களாலும் இது மாதிரி ஏற்படுகிறதே!

வ: எங்கள் பாடு இன்னும் சிரமம். எங்களுடையது என்று சொல்லிக் கொள்ளும்படியான வேலையேயில்லையென்றுதான் சொல்லவேண்டும்.

ம: உங்கள் உத்தியோக முறையில், உங்கள் உதவியை அபேக்ஷித்து வருகிற கக்ஷிக்காரர்களுடைய லௌகிக துக்கங்கள், சிரமங்கள், கவலைகள் இவைகளையெல்லாம் நீங்கள் தெரிந்துகொள்ள ஏற்படாதா?

வ: அவ்விதம் தெரிந்துகொள்வது மிக்க அவசியமாகும்.

ம: நீங்கள் எடுத்துக்கொள்ளும் சிரமத்திற்கு ஏதோ பணம் கொடுக்கிறான் என்பது இருக்கட்டும். சில வேலைகளில், அந்தப் பணத்தை தேடிக்கொடுக்கும் பொறுப்பும், அல்லது பணம் எங்கு கிடைக்குமென்று காண்பிக்கிற பொறுப்பும் உங்களுக்கு ஏற்படலாம். அப்பொழுது அவர்களுடைய பணக்கவலையைக்கூட நீங்கள் வகிக்கும்படி ஏற்படுமல்லவா?

வ: சில வேலைகளில் இதுவும் ஏற்படுகிறது.

ம: கக்ஷிக்காரர்கள் ஜாஸ்தியாக ஜாஸ்தியாக, அவர்களுக்காக நீங்கள் படும்கவலையும் ஜாஸ்தியாகுமல்லவா?

வ: ஆமாம்.

ம: அதாவது, உங்கள் சொந்தக் கவலைகளை கவனிக்க ஸாவகாசம் கிடைப்பது மிகவும் அரிது.

வ: அப்படித்தான் இருக்கிறது. வீட்டுக் குடித்தனக் காரியங்களைப் பெண்டுகளிடமாவது, சிறு பையன்களிடமாவது விட்டுவிட வேண்டியிருக்கிறது. உத்யோக ஸம்பந்தமானவைகளை குமாஸ்தாக்களே கவனிக்கிறார்கள். அவர்கள் செய்வதை மேல்பார்த்து, குற்றம் குறைகளைக் கண்டுபிடிக்கவோ, நீக்கவோ கூட, சில சமயம் அவகாசம் கிடைக்கிறதில்லை.

ம: இதர உத்யோகங்களில் இருப்பவர்களுக்கு, இதற்கெல்லாம் ஸாவகாசம் அகப்படுமென்று நினைக்கிறேன்.

வ: ஆமாம்.

ம: அதாவது, உங்கள் உத்யோகத்தில் விசேஷமென்னவென்றால், இதர உத்யோகஸ்தர்களைவிட, சொந்தக் காரியங்களைக் கவனிக்க உங்களுக்கு அவகாசம் குறைவு.

வ: ஆம்.

ம: ஆகையால், ஸ்வயநலத்தைக் கருதுவது என்ற பழக்கம் ஆரம்பிக்கவாவது, நிலைத்திருக்கவாவது உங்களிடம் இடமிராதென்று தெரிகிறது. இவ்விதமாக இதை பாவித்தால், இதுவும் வாஸ்தவத்தில் பெரிய அனுகூலமேயாகும். தன் காரியத்தைக் கவ

னிக்க அவகாசமில்லையென்று நினைக்காமல், ஸ்வ காரியத்தில் நோக்கமேற்பட வழியில்லாமலிருப்பதில் ஸந்தோஷப்பட வேண்டியதே.

வ: இப்படிப் பாவித்தால் அனுகூலம்தான்; இருந்தாலும், எங்கள் புத்தியையும் ஆயுஸ்ஸையும் மற்றவர்களுக்காக விசாரப்படுவதிலேயே கழிப்பதென்றால், அது இகழ்ச்சியாய்விடாதா?

ம: உங்கள் உதவியை அபேக்ஷிக்காத கக்ஷிக்காரர்களுக்காகவும், உங்கள் புத்தியை நீங்கள் செலவழிப்பதுண்டோ?

வ: அதில்லை.

ம: உங்கள் உதவியை அபேக்ஷிக்கிற கக்ஷிக்காரர்களுக்காக மாத்திரம்தானே, உங்கள் புத்தியை உபயோகப்படுத்துகிறீர்கள்?

வ: ஆம்.

ம: அவர்களும், பணம் கொடுக்காமலும், கொடுப்பதாகச் சொல்லாமலுமிருந்தால், நீங்கள் சிரமம் எடுத்துக்கொள்வீர்களா?

வ: மாட்டோம்.

ம: அதாவது, நீங்கள் சிரமம் எடுத்துக்கொள்வது கக்ஷிக்காரரை உத்தேசித்தல்ல, உங்களுக்குச் சேர வேண்டிய பணத்தையுத்தேசித்தே!

வ: வாஸ்தவம்.

ம: உங்களுக்கு ஒரு விசேஷப் பிரயோஜனம் ஏற்படுகிறதென்பதை உத்தேசித்து, நீங்கள் பிரயத்தினம் செய்கிறீர்களென்றால், இதில் இகழ்ச்சி என்பது என்ன?

வ: இவ்விதமாகப் பார்த்தால் தப்பிதம் ஒன்று மில்லை.

ம: உங்களுக்குப் பணம் கிடைப்பது நிச்சயமாயிருந்தால், வியவஹாரம் ஜயித்தாலும், தோற்றாலும் உங்களுக்கு விசாரமில்லையே?

வ: அதெப்படிச் சொல்ல முடியும்? ஜயிப்பதில் எனக்கும் அக்கரை இருக்கவே இருக்கும்.

ம: ஜயித்தால், நாம் ஜயித்து விட்டோம் என்ற மனத்திருப்தி இருக்குமென்பது வாஸ்தவம். அதே மாதிரி, தோற்றால் தோற்று விட்டோமேஎன்ற வருத்தமும் இருக்கும். அதை நான் சொல்ல வரவில்லை. உங்கள் வாதத்தின் பலனாக உங்கள் கக்ஷிக்காரருக்கு ஒரு சொத்துக் கிடைத்தாலும், நீங்கள் வாதம் செய்தும்கூட ஒரு சொத்து நஷ்டமாய் விட்டாலும், அந்த லாப நஷ்டத்தில் உங்கள் சொந்தத்திற்கு பாகம் கிடையாதே?

வ: கிடையாது.

ம: உங்கள் கக்ஷிக்காரருக்கு சொத்துக் கிடைக்க வேண்டுமென்பதில், நீங்கள் அக்கரை வைக்க நியாயமில்லை. நீங்கள் எடுத்த வியவஹாரத்தை, உங்களால்

கூடுமானவரை ஜயித்துக்கொடுக்க வேண்டுமென்பதில் தான் உங்களுக்கு அக்கரை.

வ: அப்படித்தான்.

ம: அதாவது, கக்ஷிக்காரருக்கு ஜயித்துக் கொடுக்கவேண்டிய பிரயத்தினங்களை கூடுமானவரை செய்வீர்கள். கடைசித் தீர்மானமும், ஏற்படக்கூடிய பலனும் அதிகாரிக்கும் பகவானுக்கும் அதீனம் என்று விட்டுவிடுவீர்கள். இதற்குமேல் உங்களுக்குக் கவலை கிடையாது.

வ: வாஸ்தவம்.

ம: பிரதிதினமும் இப்படியே செய்து வருகிறீர்களல்லவா?

வ: ஆம்.

ம: பண ஸம்பந்தத்தைத் தூரவைத்துக் கவனித்துப் பார்ப்போம். வியவஹாரம் நடத்துவதில், உங்களால் ஸாத்தியப்பட்ட வரையில் பிரயத்தினம் செய்து பார்ப்பீர்களென்றும், கடைசி முடிவில், உங்களுக்குச் சொந்தமாய் அதில் அக்கரையில்லையென்றும் ஏற்படுவதினால், உங்கள் உத்யோகம் நிஷ்காம கர்மாப்யாஸத்தில் பழகிக்கொள்ள ஒரு பெரிய ஸாதனமாக வில்லையா?

வ: அப்படித்தான் தோன்றுகிறது. ஆனால் இவ்வளவு தூரம் ஆலோசித்துத் தெரிந்துகொள்வது கிடையாது.

## 2. விசேஷ அனுகூலம்

ம: மேலும், உங்கள் உத்யோகத்தில், பிரதி தினமும் எதிர்க்கக்ஷி வக்கீலினுடைய புத்தியுடன், உங்கள் புத்தியைப் போராடும்படி செய்ய அவசியமும் ஸந்தர்ப்பமும் ஏற்படுமல்லவா?

வ: ஆம்

ம: எதிர்க்கக்ஷியில் வருகிற புத்திசாலியான ஸாக்ஷியை, ஸரியானபடி கேள்வி கேட்பதற்கும் உங்கள் புத்தியை நன்கு உபயோகிக்க வேண்டிவரும்?

வ: ஆம்.

ம: மேலுள்ள நியாயாதிகாரி மந்தராயிருந்தால், உங்கள் கக்ஷியை அவருக்கு நன்கு உணர்த்தவேண்டியதற்கும், நீங்கள் கூடுமானவரை பிரயத்தினம் செய்ய வேண்டும். அதிகாரி புத்திசாலியாயிருந்து விட்டால், அவரை உங்கள் அபிப்பிராயத்திற்கு இணங்கும்படி செய்வதற்கு, அவர் கேட்கும் நுட்பமான கேள்விகளுக்கு நீங்கள் பதில் சொல்லித்தான் ஆகவேண்டும். எப்படியும் ஒரு முடிவுவரும் வரையில், உங்கள் புத்தியும் அவர் புத்தியும் போராடுமல்லவா?

வ: அப்படியேதான்.

ம: ஆகையால், பிரதிதினமும் எதிர்க்கக்ஷி வக்கீலுடனாவது, ஸாக்ஷியுடனாவது, அதிகாரியுடனாவது உத்யோக முறையில் போராட உங்கள் புத்தியை உபயோகிக்க ஏற்படும்.

வ: அப்படியே.

ம: உபாத்யாயர் உத்யோகத்திலிருப்பவர். தான் வித்யார்த்தியாயிருந்த காலத்தில் கற்றுக்கொண்ட விஷயங்களையே, திருப்பித்திருப்பி இப்பொழுது தன் மாணாக்கர்களுக்கு சொல்லிக் கொடுத்து வந்தால்போது மென்றிருப்பதால், தன் புத்தியை மேலுக்குமேல் தீட்டிக்கொள்ள ஸந்தர்ப்பமாவது, அவசியமாவது அவருக்குக் கிடையாது. மாணாக்கர்களுடன் பழகும் காலத்திலும், தனக்குக் கீழ்ப்பட்டவர்களுடன் தான் பழகுகிறார். உங்கள் உத்யோகத்திலோவென்றால், அநேகமாய் உங்கள் புத்தியைவிட கூர்மையான புத்தி யுள்ளவர்களுடன் வியவஹாரம் செய்ய அவசியம் ஏற்படும்.

வ: வாஸ்தவம்.

ம: அடிக்கடி உபயோகிக்கப்பட்டுவரும் எந்தக் கருவியும் துருப்பிடிக்க நியாயமில்லையே ?

வ: இல்லை.

ம: இடைவிடாமல் உபயோகிக்கப்படுவதுடன் ஒவ்வொருதடவை உபயோகிக்கப்படும்பொழுதும் தீட் டப்பட்டுமிருக்குமானால், அது உபயோகப்படுத்தப் படுத்த அதிகக் கூர்மையாக ஆகிவிடும்.

வ: ஆம்.

ம: ஆகையால், வக்கீலினுடைய புத்தி, அவருக்கு வயது ஆக ஆக ஜாஸ்திக் கூர்மைப்பட்டே வரவேண்டு

மல்லவா? இதர உத்தியோகஸ்தர்களுக்கு, இவ்விதம் தங்கள் புத்தியை நிரந்தரம் உபயோகிக்கவாவது தீட்டிக் கொள்ளவாவது ஸந்தர்ப்பங்கள் கிடையாது.

வ: அப்படித்தான் தோன்றுகிறது.

ம: தோன்றுகிறது என்பானேன்? அப்படித்தான் இருக்கிறது என்றே சொல்லுங்கள். இந்தக் காரணத்தினுல்தான், எந்த ஜன ஸமூஹத்திலும், நல்ல விஷயத்திலோ, கெட்ட விஷயத்திலோ, முன் நிற்கிறவர்கள் அநேகமாய் வக்கீல்களாகவே இருக்கிறுர்கள். இதே காரணத்தினுல்தான், வயது முதிர்ந்த காலத்திலும், இவர்கள் புத்தி வன்மையுடன் இருக்கிறுர்கள்.

வ: ஆமாம்.

ம: இவ்விதமாக, இதர உத்யோகங்களில் அடைய முடியாத சில அனுகூலங்கள், உங்கள் உத்யோகத்திலிருக்கின்றன. ஸ்வகாரியத்தைக் கருத அதிகமாய் அவகாசம் கிடையாது; நிஷ்காம கர்மானுஷ்டானத்திற்கு ஒரு பயிற்சி ஸ்தலமாகவுமாகிறது. உங்கள் புத்தியைக் கூர்மையாக்கிக்கொள்ள விசேஷ ஸௌகர்யங்களும் இருக்கின்றன.

வ: வாஸ்தவம். ஆனுல், இதுவரை இவ்வளவு கவனித்துத் தெரிந்து கொண்டதில்லே.

ம: வக்கீலுக்கு வயதாய் விட்டதென்பது, ஒரு குறையில் சேர்ந்ததல்லவென்று ஒப்புக்கொள்ளலாமா? வயதாக வயதாக, புத்தி கூர்மைப்பட்டிருக்கக்கூடிய

தால் வயதானதே வக்கீலுக்கு ஓர் அனுகூலமல்லவா? புத்தி மாறாட்டமும், தளர்ச்சியும் ஏற்படக்கூடிய வயதை நான் சொல்லவில்லை.

வ: அப்படியே.

ம: புத்தி தீக்ஷ்ணமாயிருந்தால், ஒரு விஷயத்தைக் கிரஹிக்க அவகாசம் கொஞ்சம் கிடைத்தாலும் போதுமல்லவா?

வ: ஆம்.

ம: ஆகையால், இதரர்கள் ஒரு விஷயத்தைக் கிரஹிக்க அபேக்ஷிக்கும் அவகாசம் வக்கீலுக்குக் கிடைத்தால் அதே அவகாசத்தில் பல விஷயங்களை இவர் கிரஹித்துவிடலாமல்லவா?

வ: ஆம்.

ம: எல்லாருக்கும் ஆயுட்காலம் ஒரே மாதிரி என்று வைத்துக்கொண்டால், இதரர்கள் தெரிந்து கொள்வதைவிட வெகு ஜாஸ்தி விஷயங்களைத் தெரிந்துகொள்ள வக்கீலுக்கு ஸாத்தியப்படுமல்லவா?

வ: யுக்திக்கு ஸரிதான்.

ம: ஒரே விஷயமான ஞானத்தை ஸம்பாதிக்கவோ, பல விஷயமான ஞானத்தை ஸம்பாதிக்கவோ, இதரர்களைவிட வக்கீலுக்கு அவகாசம் கொஞ்சமாய் கிடைத்தாலும் போதுமல்லவா?

வ: ஆம்.

ம: லௌகிக காரியங்களில், இதரர்களைவிட இவர் அதிகமாக ஈடுபட்டவராகத் தோன்றினாலும், தனக்கு கிடைக்கும் ஸ்வல்பமான அவகாசத்தையும், நன்கு உபயோகப்படுத்திக் கொள்வதற்கு பாதகமில்லையே ?

வ: இல்லை.

ம: வாஸ்தவத்தில் கவனித்துப் பார்த்தால், மிகவும் சுறுசுறுப்பாக இருப்பவர்களுக்குத்தான் அவகாசம் ஜாஸ்தியிருக்கும். சோம்பேறிகள்தான் நேரம் இல்லையென்று சொல்வார்கள். இதற்குக் காரணம், சுறுசுறுப்புள்ளவர்கள் காலத்தை சரியாய் உபயோகிக்கிறார்கள். சோம்பேரிகள் வியர்த்தமாக்குகிறார்கள். இதிருக்கட்டும். உங்களுக்குக் கிடைக்கும் அவகாசத்தை எப்படி உபயோகித்து வருகிறீர்கள் ? உங்கள் காலம் பூராவையும் உத்யோகத்திற்காகவே செலவழிக்க முடியாது. மனதின் குதூஹலத்தை உத்தேசித்தாவது, வேறு காரியமும் வைத்துக் கொண்டிருக்க வேண்டுமே.

வ: தமிழ்க் கிரந்தங்களை வாசிக்கிறேன். விலை மதிக்கத்தகாத உபதேசங்கள் அவைகளில் நிரம்பிக் கிடக்கின்றன.

ம: அதில் என்ன ஸந்தேஹம்? இருந்தாலும், அத்தமிழ் கிரந்தங்களில் அத்யாத்ம விஷயமாயாவது, மத விஷயமாயாவது, ஸம்ஸ்கிருதத்திலுள்ள ஒரு மூல கிரந்தத்தை அபேக்ஷிக்காமல் ஏதேனும் புதிய விஷயங்

கள் இருப்பதாக உங்கள் புத்திக்குப் புலப்படு கின்றனவா ?

வ: அவ்விதமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. சில நவீந தமிழ் வித்வான்கள் மாத்திரம், தமிழ்மதம் வேறு ஆர்யமதம் வேறு என்று காட்ட முயலு கிறார்கள்.

ம: ஸம்ஸ்கிருதத்திலுள்ள மூலக்கிரந்தங்களையே நீங்கள் படித்துவிட்டால் நல்லதென்று தோன்ற வில்லையா ?

வ: நல்லதுதான்; ஆனாலும், எனக்கு வயதாகிக் கொண்டு வருகிறது. இனிமேல் ஸம்ஸ்கிருதம் படிக்க வாரம்பித்தால் ஸாத்தியப்படுமென்று தோன்றவில்லை.

ம: ஜ்ஞாஸ்தி வயது வக்கீலுக்கு பிரதிகூலமில்லை யென்றும், அனுகூலமேதான் என்றும், முன்னமேயே நாம் முடிவு கட்டிக்கொண்டதை மறக்கா தீர்கள். அத் தீர்மானத்தை உலைக்கவும் கூடாது.

வ: ஸாத்தியப்படுமா ?

ம: பிரயத்தினம் செய்து பார்த்து, அப்புறம் ஸாத்தியமா, அஸாத்தியமா என்று சொல்லுங்கள். மேலும், நீங்கள் பிராஹ்மணராக இருப்பதால், ஸம்ஸ் கிருதம் படிக்க அதிகாரமும் கடமையும் உண்டு. நாஸ்திகர் நிறைந்த இக்காலத்திலும், உங்களுக்கு உங்கள் பெற்றோர்கள் கிரமப்படி உபநயன ஸம்ஸ் காரத்தை செய்து வைத்திருக்கிறார்கள். வித்யை

க்ஷீணித்து வந்திருக்கும் இக்காலத்திலும், உங்களுக்குச் சொல்லிக்கொடுக்கத் திறமையும் மனமும் உள்ள வித்வான்கள் அநேகர் இருக்கிறார்கள். இந்த ஸந்தர்ப்பத்தை விணுக்கிக் கொள்ளக்கூடாது. அடுத்த ஜன்மத்தில் இவ்வித ஸௌகர்யங்கள் இருக்கும் என்று யாரால் சொல்லமுடியும்?

### 3. நம் கடமை

வ: கிருஹத்தில் நடத்தவேண்டிய ஸாதாரண விசேஷங்களுக்குக்கூட, ஸரியான வைதிகர்கள் கிடைப்பது துர்லபமாயிருக்கிறது. அவர்களுடைய நடத்தை மனதுக்குப் பிடிக்காமல், அநேக விசேஷங்களை நிறுத்தியே விட்டேன். ஸாமான்ய வைதிக காரியங்களுக்கே காலம் இப்படியிருக்கும்போது, எனக்குச் சொல்லிக்கொடுக்க ஸரியான பண்டிதர்கள் எங்கு அகப்படப்போகிறார்கள்?

ம: காலம் வரவரக் கெட்டுக்கொண்டுதான் வருகிறது, தர்மானுஷ்டானத்திற்கு வேண்டிய ஸௌகர்யங்கள் குறைந்துதான் வருகின்றன, என்பதை வாஸ்தவமாய் நம்புகிறீர்களா?

வ: அதில் என்ன ஸந்தேஹம்?

ம: இன்னும் நூறு வருஷம் சென்ற பிறகு, நம் ஜன ஸமூஹம் எப்படியிருக்குமென்று நினைக்கிறீர்கள்?

வ: அதோகதிதான்.

ம: அப்படிச் சொல்லக்கூடாது. கலியுகாந்தத்தில், அதாவது நான்கு லக்ஷம் வருஷங்கள் சென்ற பிறகு, பகவான் அவதாரம் செய்ய உத்தேசித்திருக்கிற காலத்திலும், அவர் ஜன்மமெடுக்கக் கூடிய சில பரிசுத்தமான தார்மிக குடும்பங்கள் இருந்தே தீரும் என்று தெரிகிறது. ஆகையால் மிகவும கெட்டிருக்கும் என்று மாத்திரம் சொல்லுங்கள்.

வ: அப்படியே.

ம: நாம் இருக்கும் இதே இடத்தில், நூறு வருஷங்கள் கழித்து ஜன்மம் எடுக்கும் ஒரு மனிதனுக்கு, வைதிக தர்மானுஷ்டானத்திற்காவது, நல்ல ஞானம் ஸம்பாதிக்கவாவது இப்பொழுதுள்ள ஸௌகர்யங்கள் இராதல்லவா ?

வ: இராது.

ம: ஓர் ஊரில் சாப்பாட்டுக்கு வழியில்லையென்று தெரிந்தால், அந்த ஊருக்குப் போகாமலிருப்பதே நலமல்லவா ?

வ: ஆம்.

ம: போய்த்தான் தீரவேண்டுமென்றிருந்தால், அந்த ஊரில் தாமஸிக்கும்படி ஏற்படக்கூடிய காலத்திற்கு வேண்டிய ஆஹாரத்தை இங்கிருந்தே கொண்டு போக வேண்டுமல்லவா ?

வ: ஆமாம்.

ம: அதாவது, போகாமலிருக்க முயற்சிக்கவேண்டும்; அல்லது அங்குள்ள அஸௌகர்யங்களுக்குத் தக்கபடி, இங்கிருந்தே ஜாக்கிரதையாய் ஸௌகர்யங்களைத் தயாரித்துக்கொண்டு போகவேண்டும்.

வ: ஆம்.

ம: இதே நியாயப்படி, இப்பொழுது ஜீவித்திருக்கிற ஒருவன், மறுபடியும் தனக்கு நூறு வருஷம் கழித்து ஜன்மம் ஏற்படலாம் என்று தெரிந்துகொண்டிருப்பதுடன், அப்பொழுது இப்பொழுதுள்ள ஸௌகர்யங்கள் கிடையாது என்றும் வாஸ்தவமாய் நம்பினானாகில், அவன் செய்யவேண்டிய காரியம் என்ன?

வ: இப்பொழுதே தயார் செய்துகொள்ளவேண்டும்

ம: அல்லது, ஜனிக்காமலே இருந்துவிடலாம்.

வ: வாஸ்தவமே ஆனால் மறு ஜன்மம் அவசியம் ஏற்பட்டே தீரும் என்று நாம் நம்பும்போது, ஜனிக்காமல் எப்படியிருக்க முடியும்?

ம: ஜனன மரணத்திற்கு அதீதமாய் மோக்ஷம் என்ற ஒரு நிலை உண்டென்று சொல்லும் நாம், மறு ஜன்மம் அவசியம் ஏற்பட்டே தீரும் என்று நம்புகிறோம்?

வ: அது ஸரி. மோக்ஷம் அவ்வளவு ஸுலபமாகவா கிடைக்கிறது?

ம: ஸுலபமோ, துர்லபமோ, மனிதனுடைய பிரயத்தனத்தினால் அடையக்கூடியதுதானே?

வ: ஆம்.

ம: அவ்விதம் அடையக்கூடியதாயிருந்து, அதை யடைந்தால் ஸகல கலேசங்களும் சாசுவதமாய் நம்மை விட்டு விலகும் என்றிருந்தால், அந்நிலையை அடைய, அல்லது அந்நிலைக்கு எவ்வளவு ஸமீபத்தில் நெருங்க முடியுமோ அவ்வளவு நெருங்க, நம்மால் கூடிய மட்டும் பிரயத்தனம் செய்தே தீரவேண்டுமென்பது நம் கடமையல்லவா?

வ: அப்படியே.

ம: ஆகையால், இன்னும் நூறு வருஷம் கழித்து நீங்கள் மறு ஜன்மம் எடுக்க நேர்ந்தால், ஸத்கதிக்கு ஸாதனமாயுள்ள பிரயத்தனங்களைச் செய்ய வேண்டியதற்கான ஸௌகர்யங்கள் இராது என்று நீங்கள் வாஸ்தவமாய் தீவிரமாய் நம்பினீர்களேயானால், மறுபடியும் பிறக்காமலே இருப்பதற்காக, இப்பொழுதுள்ள ஸௌகர்யங்களை ஊக்கத்துடனும், சிரத்தையுடனும், இருமடங்கு மனோவேகத்துடன் உபயோகித்துக் கொள்ளவேண்டாமா?

வ: நியாயமே. இருந்தாலும், என்னைப்போல் உள்ளவர்கள், இந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் கிடைக்கும் என்று எதிர்பார்க்க முடியுமா?

ம: உங்களுக்கு யோக்கியதை யில்லை யென்று நினைத்துக்கொள்ள எவ்விதக் காரணமும் இல்லை. எப்

படியும், நூறு வருஷங்களுக்குப் பின் ஏற்படக்கூடிய ஜன்ம காலத்தில் ஸௌகர்யங்கள் குறைந்தேயிருக்குமாதலால், அதற்குத் தக்கபடி இப்பொழுதே ஸாதனங்களைத் தயார் செய்துகொள்ள வேண்டுமென்பது உண்டா இல்லையா?

வ: உண்டு.

ம: இந்த ஜன்மத்தில் ஸம்பாதிக்கப்படும் பணம், வீடு, வஸ்திரம் இவைகள் எல்லாம் சாகிற ஸமயத்தில் விட்டுவிட்டுப் போகவேண்டிய பதார்த்தங்களே. பின் ஜன்மத்திற்கு வேண்டிய ஸாமக்கிரிகளில் இவை சேரா.

வ: சேராதுதான்.

ம: சரீரத்தை விட்டுப் போகும் ஜீவனுடன் கூடப்போவது, தர்மம், அதர்மம் இவைதான் அல்லவா? தர்மம் அனுகூலம், அதர்மம் பிரதிகூலம். ஆகையால், இந்த ஜன்மத்தில் எவ்வளவு தர்மம் ஸம்பாதிக்க முடியுமோ, அதை ஸம்பாதிக்க வேண்டும். அதர்மத்தை எவ்வளவு குறைக்க முடியுமோ, அவ்வளவு குறைக்க வேண்டும்.

வ: இது தான் மிகவும் சிரமமான கார்யமாயிருக்கிறது. ஒரு சின்ன வைதிக காரியம்கூட ஸரியாய் நடத்துவதற்கு ஸாத்தியமில்லாமல் சுற்றிலுமுள்ள ஸந்தர்ப்பங்கள் அவ்வளவு கெடுதலாயிருக்கின்றன.

ம: இருக்கலாம். ஆனால் தர்மம் இரண்டுவிதமல்லவா? அநேக மனுஷ்யர்களையும், அநேக பதார்த்தங்களையும் எதிர்பார்த்தே செய்யவேண்டிய வைதிக கிரியைகள் ஒரு விதம்; தானாகவே இருந்து செய்யக்கூடிய ஜபம், மனதை ஒருநிலைப்படுத்துதல், தத்வ விசாரம் இவைகள் மற்றொரு விதம். பின்சொல்லிய தர்மத்தை ஸம்பாதிப்பதில், சுற்றுள்ள ஸந்தர்ப்பங்கள் பாதகமாயிருக்க முடியாதே.

வ: எப்படியும் நம் தேசத்தில் இப்பொழுது மூடிக்கொண்டு வரும் அஞ்ஞான இருட்டு மிகவும் அதைர்யத்தை உண்டுபண்ணுகிறது.

ம: பிரதிதினமும் ஸாயங்காலம் ஸூர்யன் அஸ்தமிக்கிறார்; ராத்திரி இருட்டு சூழ்ந்து கொள்கிறது. இதற்காக, ஸூர்யன் அஸ்தமித்தவுடன் நாம் படுத்துக் கொண்டு விடுகிறோமா? இருட்டு வந்துவிட்டது, இனி ஒன்றும் செய்வதற்கில்லை யென்று இருந்து விடுகிறோமா? நாம் ஒவ்வொருவரும் ஒரு சின்ன தீபத்தையாவது ஏற்றிக்கொண்டு, அத்தீபத்தினுடைய பிரகாசத்தின் ஸஹாயத்தினால், நாம் செய்யக்கூடிய வழக்கமான கார்யங்களைச் செய்து வருகிறோமல்லவா? அவசியமேற்பட்டால் மினுமினுவென்றிருக்கிற ஒரு சுளுந்தை வைத்துக்கொண்டு, எவ்வளவு இருட்டானாலும் கவனிக்காமல் நாம் பல மைல்கள் நடந்துபோவது இல்லையா? ஸூர்யன் அஸ்தமித்து விட்டார் என்று சொல்லிக் கொண்டு சும்மா இருந்து விடுகிறோமா?

வ: இல்லை.

ம: ஆகையால், ஜனன மரண சக்கரத்திலிருந்து தப்பித்துக்கொள்ள வேண்டியது அவசியமென்று மனப்பூர்வமாய், தீவிரமாக எண்ணமிருக்கும் விஷயத்தில், தேசத்திலிருக்கும் அஞ்ஞான இருளைப் பொருட்படுத்தாமல், உங்களுக்கு இருளை விலக்கி வழிகாட்டக் கூடிய ஒரு பிரகாசத்தைக் கைப்பற்றுவீர்கள். ஊருக்கெல்லாம் இருள் விலகவில்லையே என்றால் உங்களுக்கென்ன? இவ்வழி காட்டும் பிரகாசத்தையே குரு என்பார்கள். அத்யாத்ம விஷயத்தில் அவரே உங்கள் யஜமானர். அவரையே பூர்வாக சரணம் அடையுங்கள். அவர் உங்களைக் கைப்பிடித்து அழைத்துக்கொண்டு, படிப்படியாக மேலே கொண்டு விடுவார். சுற்றியிருக்கும் இருட்டு அவரைப் பாதிக்காது. பிசகாமல் உங்களை அழைத்துச் செல்வார். ஆனால் அவரிடம் உங்களுக்கு த்ருடமான நம்பிக்கை மாத்திரம் வேண்டும்.

வ: இந்தக் காலத்தில் அவ்வித குரு எங்கு கிடைக்கிறார்?

ம: இது அனுவசியக் கேள்வி. பூர்ணவிசுவாஸத்துடன் நீங்கள் பிரார்த்திக்கும் விஷயத்தில், அந்த க்ஷணத்திலேயே உங்கள் முன்பு தோன்றுவார். உங்களுக்கு குருவாகும்படியான யோக்கியதை அவரிடமிருக்கிறதா என்று பரீக்ஷிப்பதற்காக அவர் தோன்ற வேண்டுமென்று நினைத்தால் முன்னைவிட வெகுதூரம் விலகி விடுவார்.

## 4. ஸம்ஸ்கிருதக் கல்வி.

ம: இதிருக்கட்டும். பிரகிருதத்தில், இப்பொழுது உங்களுக்குக் கிடைத்திருக்கும் பிராஹ்மண ஜன்மாவை நன்கு பிரயோஜனப் படுத்திக்கொள்ள வேண்டுமென்றும், அதற்கு அங்கமாக ஸம்ஸ்கிருதம் வாசிக்க வேண்டுமென்றும் சொல்ல வந்தேன்.

வ: ஸம்ஸ்கிருதம் வாசிக்க வேண்டுமென்று வற்புறுத்தக் காரணம் என்ன?

ம: ஸம்ஸ்கிருத கிரந்தங்களில் தர்மம், பிரஹ்மம் முதலிய அநேக விஷயங்கள் தெரியவருகின்றன. அவையின்னவென்று வேறு பாஷைகளில் மொழிபெயர்த்து எழுதிய நூல்களிலிருந்து நாம் தெரிந்துகொள்ள முடியாது.

வ: ஏன் முடியாது?

ம: உங்கள் பையன் யாராவது மேல் வகுப்பில் வாசிக்கிருனு?

வ: ஏன்? ஒருவன் பி. ஏ. வாசிக்கிருன்.

ம: அங்கு அவன் விசேஷமாய் கற்றுக்கொள்கிற விஷயம் என்ன?

வ: "பிஸிக்ஸ்"

ம: அவ்வார்த்தையை உச்சரிக்கும் காலத்தில் ஏற்படும் சப்தம் என் காதில் விழுகிறது. ஆனுல் அந்த பாஷையில் எனக்கு பரிசயமில்லாததினுல், அது ஒரு

சப்தம் அல்லது ஒரு ஸாங்கேதிக நாமம் என்று மாத்திரம் தான் தெரிகிறது. அதனுடைய அர்த்தம் என்னவென்று எனக்குத் தெரியும்படியாய் தமிழில் சொல்லுங்கள்.

வ: அது "பௌதிக சக்திகளை"ப்பற்றி சொல்லும் சாஸ்திரமாகும்.

ம: இப்பொழுது தெரிந்தது. இடியும் மழையும் எப்படி ஏற்படுகிறதென்று சொல்லும்போலும்!

வ: இல்லை, இல்லை. அதைச்சொல்லும் சாஸ்திரத்திற்கு "பிஸியாக்ரபி" என்பார்கள். இதில், ஒரு பதார்த்தத்திற்கும் மற்றொரு பதார்த்தத்திற்கும் ஏற்படக்கூடிய அன்யோன்ய ஸம்பந்தம் சொல்லப்படுகிறது.

ம: வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு சேர்ந்தால் எப்படி சிவப்பாகிறதென்று சொல்லும் போலத் தெரிகிறது.

வ: அப்படியுமல்ல. அதைச் சொல்வது "கெமிஸ்ட்ரி" என்ற சாஸ்திரத்தை சேர்ந்தது. ஒரு பதார்த்தத்திற்கும் மற்றவைகளுக்குமுள்ள ஸம்பந்தத்தினால் ஏற்படக்கூடிய சலனாவஸ்தைகள், சலன மற்ற அவஸ்தைகள் இவைகளை மாத்திரம் இது சொல்லும்.

ம: இப்பொழுது தெரிந்தது. இந்த சாஸ்திரத்தினால், ஆகாசத்தில், பூமி, சந்திரன், நக்ஷத்திரங்கள்

இவைகள் எப்படி நிற்கின்றன, எப்படி சலிக்கின்றன வென்று தெரிந்துகொள்ளலாமென்று தோன்றுகிறது.

வ: அப்படியுமல்ல, அது "அஸ்ட்ரானமி" என்ற ஜ்யோதிஷ சாஸ்திரத்தைச் சேர்ந்தது.

ம: அப்படியானல், நீங்கள் உச்சரித்தீர்களே, அந்த இங்கிலீஷ் பதத்திற்கு ஏற்பட்ட அர்த்தம்தான் என்ன?

வ: அர்த்தத்தை ஸரியானபடி தமிழில் எடுத்துச்சொல்ல எனக்குத் தெரியவில்லை. தமிழிலும் ஸரியான வார்த்தையில்லை. பல வாக்கியங்களைக்கொண்டு எடுத்துச் சொல்வோமானாலும், அப்பதத்தின் பூருபாவத்தையும் வெளிப்படுத்தமுடியுமென்று தோன்றவில்லை.

ம: பாதகமில்லை. தமிழ் இருக்கட்டும் தெலுங்கு, கன்னடம் முதலான உங்களுக்குத்தெரிந்த ஏதேனுமொரு பாஷையில் சொல்லுங்கள்.

வ: அதுவும் முடியுமென்று தோன்றவில்லை.

ம: இங்கிலீஷில் ஒரு பதத்தினால் வியவஹரிக்கக் கூடியதாயிருக்கிற ஒரு சாஸ்திரத்தின் தன்மையை இன்னவிதமென்று, பல வாக்கியங்களை உபயோகித்தாலும், இதர பாஷைகளில் சொல்லமுடியாமல் இருக்கிறதென்று சொல்கிறீர்கள்?

வ: அப்படித்தான் இருக்கிறது.

ம: இந்த நியாயம், எங்களுக்கு மாத்திரம் கிடையாதா? ஸம்ஸ்க்ருதத்தில் ஒரு பதத்திஞல் சொல்லக்கூடிய விஷயம், இதர பாஷைகளில் எவ்வளவு எடுத்துச் சொன்ஞலும் மனதில் பதியக்கூடாததாக இருக்கலாமென்று ஏன் ஒப்புக்கொள்ளக் கூடாது?

வ: இருக்கலாமென்றுதான் இப்பொழுது தெரிகிறது.

ம: அவ்விஷயங்களில் பிரஹ்மம் என்பது ஒன்று. அதை ஔபநிஷதம் என்று சொல்வதால், உபநிஷத்துக்களின் மூலமாய்த்தான் அதை அறிய முடியும் என்று தெரிகிறது. எப்படியும், உபநிஷத்துக்களை மூலக்கிரந்தத்தில் படிக்க அதிகாரமற்றவர்களும், வேறு விதத்தில் யோக்கியதையற்றவர்களும், மொழி பெயர்ப்பு நூல்களால் தெரிந்து கொள்ளட்டும். எவ்வளவு தூரம் பிரயோஜனப்படும் என்பது ஸந்தேஹமே. உங்களுக்கு அப்படிச்செய்ய என்ன அவசியம் என்பதுதான் நான் சொல்கிற விஷயம்.

வ: தெரிந்துகொண்டேன். தங்கள் உபதேசப் பிரகாரம் நடக்கப்பார்க்கிறேன்.

ம: செய்யுங்கள். உங்கள் நன்மைக்காகத்தான் இவ்வளவும் சொல்கிறேன். முன்சொன்ன ரீதியாக, மறுபடியும் ஜன்மம் எடுக்கிற ஸமயத்தில், இப்பொழுதுள்ள ஸௌகர்யங்களிருக்குமென்று யார் சொல்ல

முடியும்? இப்பொழுதுள்ள ஸௌகர்யங்களை முடிந்த வரையில் உபயோகித்துக்கொள்ள வேண்டும். ஸாத்தியமான வரையில் பிரயத்தினப்படட்டும், ஜனன மரண சக்கிரத்திலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாமல் போனாலும்கூட, பின் ஜன்மத்தில் ஏற்படக்கூடிய அஸௌகர்யங்களை ஸஹித்துக்கொள்ள வேண்டியதற்குள்ள பலமாவது ஸம்பாதித்துக்கொள்ளலாமல்லவா? அவ்விதம் தயார் செய்துகொள்வதற்கு, லௌகிக விருத்தியில் இருப்பவர்களுக்குள், உங்கள் உத்யோகத்தில்தான் அனுகூலங்கள் பல இருக்கின்றனவென்று எடுத்துக் காட்டினேன். இவ்வித அனுகூலங்களை உபயோகித்துக்கொண்டு அவைகளின் பலனையடைவீர்களென்று நம்புகிறேன்.

வ: தங்கள் கருணை மிகுந்த அனுக்ரஹத்தினால் அவ்விதமே நடக்கலாமென்று நம்புகிறேன். என் முயற்சி ஸபலமாகப் பிரார்த்திக்கிறேன்.



## அத்யாயம் 6

# விவாஹச் சீர்திருத்தம்

### 1. வரதக்ஷிணை

ஸமூஹச் சீர்திருத்தம் என்ற நவீன இயக்கத்தில் கொஞ்சம் ஈடுபட்டிருந்தும், ஸ்ரீ மஹாஸ்வாமிகளிடம் விசேஷபக்தியுடைய பிரபு ஒருவர், ஒருநாள் வந்து வந்தனம் செய்து பேசிக்கொண்டிருக்கிறமத்தியில் தெரிவித்துக்கொண்டார்.

பிரபு: பிராஹ்மணர்கள் சாப்பாட்டுக்குக்கூட திண்டாடிக்கொண்டிருக்கிற இக்காலத்தில், கல்யாணங்களில் கண்டபடி பணத்தைச் செலவழிக்கிறார்கள். இப்படிச் செலவழித்து அநேக பெரிய குடும்பங்கள் க்ஷீணித்து விட்டன. கல்யாணத்தை ஒரு நாளில் நடத்திவிட்டால், நான்கு நாள் ஐந்து நாள் என்று இழுக்காமலிருந்தால், இவ்வளவு செலவும் குறைவுபடும்.

ம: விவாஹ ஸந்தர்ப்பங்களில் அனாவசியமாய் ஜாஸ்தி பணம் செலவாகிறது என்பது வாஸ்தவம். ஆனால், அதற்கும், விவாஹத்தில் வைதிக காரியங்கள் நாலைந்து நாட்கள் நடப்பதற்கும் என்ன ஸம்பந்தம்?

பி: வைதிக கார்யங்களை நீட்டினால் செலவும் ஜாஸ்திதானே ஆகும்?

ம: அப்படியல்ல. விவாஹ காலத்தில் ஜனங்கள் செய்துவரும் தமாஷாவையும், வைதிகக் கிரியை

களையும் பகுத்தறியாமல் சொல்கிறீர்கள். வைதிக கர்மாவுக்குச் செலவே கிடையாது. ஒரு பிடி அக்ஷதையும் ஸம்த்துமிருந்தால் போதும் இத்துடன் நின்று கொண்டால், பணத்திற்காவது, மனதிற்காவது எவ்வித சிரமமுமன்னியில், எத்தனை நாள் வேண்டுமானாலும் நடத்தலாம். பாட்டுக்கச்சேரி, விருந்து, வாண வேடிக்கை இவைகளுக்கெல்லாம் பணம் செலவழிக்க வாரம்பித்தால், அது நம் மதத்தின் குற்றமா? ஒரு செலவையும் அபேக்ஷிக்காத, நிரபராதியான வைதிக காரியங்களைக் குறைக்க வேண்டுமென்று சொல்ல எவ்வித நியாயமும் கிடையாது.

பி: வைதிக கார்யத்திற்குச் செலவில்லையென்றிருந்தாலும், அது முடியும்வரை ஸ்நேகிதர்களையும், பந்துக்களையும் உபசரிக்க வேண்டியிருப்பதால், மனதிற்கும் பணத்திற்கும் சிரமம்தானே.

ம: அவ்விதம் நினைத்தீர்களேயானால் முதல் நாள் மாத்திரம்தான் அவர்கள் இருக்க வேண்டுமென்று அழைப்பு அனுப்புங்களேன். மற்ற நாட்களில் பெண்ணும் மாப்பிள்ளையும்தான் அவசியம் இருக்க வேண்டியவர்கள். இரண்டாம் நாள் காலையில் பாக்கி எல்லாரையும் அனுப்பிவிடலாம்.

பி: அது மரியாதையாய் இருக்குமா?

ம: ஒருநாள் கல்யாணமாயிருந்தால், எப்படியும் மறுநாள் காலையில் அவர்களை அனுப்பத்தானே போகிறீர்கள்?

பி: வாஸ்தவம். ஆனால், அப்பொழுது, இரண்டாம் நாள் காரியமில்லையென்று தெரிந்துவிடுமாதலால் அவர்களை புறப்பட்டு விடுவார்கள்.

ம: இப்பொழுதும், இரண்டாம் நாள் காலை முதல் அவர்கள் இருக்க வேண்டுமென்று நீங்கள் நினைக்கவில்லையென்று அவர்களுக்குத் தெரிந்து விட்டால், தானே புறப்பட்டு விடுவார்கள். தன்னை இருக்க வேண்டுமென்று அபேக்ஷிக்கவில்லையென்று தெரிந்துவிட்டால், மரியாதையுள்ள எவரும் உங்களைத் தொந்திரவு செய்து கொண்டு இருக்கமாட்டார்கள். இதிருக்கட்டும். கல்யாணத்தில் பந்துக்கள் முதலானவர்களுக்கு அன்னம் போடுவது என்பது தாங்கள் இவ்வளவு பயப்படும்படி ஒரு பெரிய செலவு காரியமா? இப்பொழுது நடந்துவரும் கல்யாணச் செலவுகளை கவனித்துப் பார்ப்பீர்களேயானால், அதில் வைதிகச் செலவும் போஜனச் செலவும், இதர அம்சங்களை உத்தேசித்து எவ்வளவோ ஸ்வல்பமென்பது தெரியவரும். அப்படியிருக்க, இன்னமும் இந்தச் செலவுகளை மாத்திரம் குறைக்க எண்ணுவது என்ன நியாயமென்று தெரியவில்லை. இவைகளைவிட மிக அதிகப் பணச் செலவை அபேக்ஷிக்கிறவைகளும், கொஞ்சம் கூட அவசியமில்லாதவைகளும், விட்டுவிடக் கூடியவைகளுமான அநேக அம்சங்கள் இருக்கின்றன. உங்கள் பந்துக்களுக்கெல்லாம் விலையுயர்ந்த ஆடைகள் வாங்க வேண்டுமென்று, நம் மதம் சொல்லவில்லை. கண்டவர்களையெல்லாம் அழைத்து, பணச்செலவு செய்து விருந்

துளிக்கவும் சொல்லவில்லை. பாட்டுக்கச்சேரி வைத்து பணத்தைச் செலவழிக்க வேண்டுமென்றும் நம் மதம் சொல்லவில்லை. மாப்பிள்ளைகளுக்குக் கண்டவாறு வரதக்ஷிணை கொடுக்க வேண்டுமென்றும் நம் மதம் சொல்லவில்லை. இக்கடைசி விஷயம் தமிழ் நாட்டில் மட்டும் காணப்படும் ஒரு துக்ககரமான விஷயம்.

பி: எப்படியோ, இக்கெடுதல் நம் ஸமூஹத்தில் நுழைந்து விட்டது. தங்கள் செல்வாக்கை உபயோகித்தாவது இதைத்தொலைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

ம: அப்படியே! என்னால் கூடியமட்டும் செய்து வருகிறேன். ஆனால் என் செல்வாக்கு எவ்வளவு? இக்கெடுதலை உண்டுபண்ணி இதை நிலைநிறுத்தி வருகிற அவனுடைய பிரபாவம் எவ்வளவு?

பி: அவன் யார்?

ம: வேறு யார்? ஆசா பிசாசுதான். அவனையே காமம் என்றும் லோபம் என்றும் சொல்வார்கள். பிராஹ்மணர்கள் தங்கள் மதத்திற்குக் கட்டுப்பட்டும், தங்கள் ஆசார்யர்களுக்கு அதீனமாகவும் இருந்துவந்த வரையில், இதுமாதிரி கெடுதல்கள் காணப்படவில்லை. தங்களுக்கு ஸ்வபாவ ஸித்தமான திருப்தியை விட்டு, ஆசைக்கும் பேராசைக்கும் இடங்கொடுத்தவுடன், இந்த வரகல்கமுள்பட அநேகக் கெடுதல்கள் உள் நுழைந்துவிட்டன. இவை மனதில் குடிகொண்டிருக்கும்வரை, நானோ அல்லது, வேறு யாரோ, என்ன புத்தி

மதியோ, உபதேசமோ செய்தாலும் காதில் ஏராது. மிகவும் பலசாலியாயிருக்கிற காமன், அதே காலத்தில் விபரீதமான உபதேசமே செய்து கொண்டிருப்பான். அதுவே பலிக்கும்.

பி: ஆசை, பேராசையெல்லாம் பணம் கேட்கிற மாப்பிள்ளையைச் சேர்ந்தவர்களிடமல்லவா இருக்கும்? அதற்குப் பெண் வீட்டுக்காரர்களல்லவா அவஸ்தைப் படவேண்டியிருக்கிறது?

ம: மாப்பிள்ளை வீட்டுக்காரர்களுக்கு மாத்திரம் தான் பேராசையென்பதை நான் ஒப்புக்கொள்வதற்கில்லை. பெண் வீட்டுக்காரருக்கும் அப்படியேதான்.

பி: அதெப்படியிருக்க முடியும்? பணம் கொடுக்கிறவர்களல்லவா அவர்கள்?

ம: வரதக்ஷிணையே இல்லாமல் கல்யாணம் செய்துகொள்ளத் தயாராயிருக்கிற ஒரு வைதிகப் பையனும், இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தாலொழிய முடியாதென்று சொல்கிற ஓர் உத்யோகஸ்தனுடைய பையனும் இருந்தால், பெண்ணின் தகப்பனார் யாரைப் பொறுக்குவார்? சொல்லுங்கள்.

பி: தன் புஸ்திதியை விற்றுவது, அந்த உத்யோகஸ்தனுடைய பையனை வேண்டுமென்றுதான் கருதுவார்.

ம: ஏன்?

பி: தனக்கு இப்பொழுது அஸௌகர்யமேற்பட்டாலும், பின்னால் தன் பெண் ஸௌக்கியமாயிருக்கட்டுமே என்ற எண்ணம்தான் காரணம்.

ம: அப்படியே. அதாவது, தன் பெண்ணுக்கு அந்த உத்யோகஸ்தனின் ஆஸ்தி வேண்டுமென்ற எண்ணம்.

பி: அப்படித்தான் சொல்ல வேண்டும்.

ம: பேராசை ஒரு பக்கத்தில் மாத்திரமில்லையென்பது தெரிந்ததா?

பி: இப்பொழுது தனக்கு அசௌகர்யமேற்பட்டாலும், தன் பெண் பின்னால் ஸுகமாய் வாழவேண்டுமென்று நினைப்பது தப்பிதமா?

ம: தப்பிதமென்று சொல்லவில்லை. அவளுடைய பர்த்தாவாவது, மாமனாராவது பணக்காரராயிருந்தால், அவள் ஸுகமாய் வாழ்வாள் என்று நினைக்கிறதுதான் தப்பிதம். மற்றவர்களுடைய அபிப்பிராயம் எப்படியிருந்தபோதிலும், பிராஹ்மணனாய்ப் பிறந்தவனுக்கு, தன் பயிற்சியினாலும் அனுபவத்தினாலும், பணத்திற்கும் ஸுகத்திற்கும் காரணகாரிய ஸம்பந்தம் கிடையாதென்றும், பணமிருந்தால் ஸுகம் கிடைக்குமென்ற எண்ணம் பிரயோஜனமற்றதான, தவறுதலான எண்ணம் என்றும் தெரியவேண்டாமா? தன் பெண் ஜனிக்கும்போதே, அவளுக்கு இந்த ஜன்மத்தில் அனுபவிக்க வேண்டிய ஸுகம் இவ்வளவு, துக்கம் இவ்வளவு, என்று முன்னமேயே தீர்மானித்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதென்றும், அந்த அளவில் கொஞ்சம் சேர்க்கவாவது, குறைக்கவாவது தனக்கும், வேறு ஒருவருக்கும் சக்தி கிடையாதென்றும்,

தெரியவேண்டாமா? இவ்விதமாகத் தன்னையும், எல்லாக் கர்ம பலன்களையும் வகுத்துக் கொடுக்கும் பகவானையும் மறந்துவிட்டு, பணம் வேண்டுமென்ற துச்சமான ஆசைக்கு இடங்கொடுத்தால், சிரமம் ஏற்படத்தான் ஏற்படும்.

பி: இந்த வரசுல்கம் தொலைய, எந்த உபாயத்தை அனுஷ்டிக்கலாம்?

ம: பிராஹ்மணனுக்கு, முன்னிருந்த மனஸ் ஸமாதானமும், திருப்தியும் திரும்பி வருவதுதான் உபாயம்.

பி: தக்காலம் ஜன ஸமூஹமிருக்கும் நிலையில், இது ஸாத்தியமாய்த் தோன்றவில்லையே?

ம: கேட்டால் கொடுக்க சக்தியற்றும், கொடுக்க நினைத்தாலும் கொடுக்க முடியாமலுமிருக்கக் கூடிய தாரித்ரிய தசை பிராஹ்மணனுக்கு வந்தால், வரதக்ஷிணை தானே நின்றுவிடும்.

பி: இந்நிலை வேண்டுமானால் வந்துவிடும். அதுவும், வெகு சீக்கிரம் வந்துவிடும் என்றுகூடத் தோன்றுகிறது.

ம: இன்னும் அந்த ஸ்திதி வரவில்லை. அதற்குள் பிராஹ்மணர்கள் விழித்துக்கொள்ள மாட்டார்களா வென்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

பி: பெண்களை அதிபால்யத்தில், எப்படியும் ருதுவாவதற்கு முன், விவாஹம் செய்து கொடுக்க

வேண்டுமென்ற நிர்ப்பந்தத்தினுலேயே இந்த வரதக்ஷிணை தொந்திரவு ஏற்பட்டிருப்பதாக எங்களில் சிலருக்குத் தோன்றுகிறது.

ம: அதெப்படி? ஹிந்து ஸமூஹம் ஏற்பட்ட நாள் முதற்கொண்டு பால்ய விவாஹமிருக்கிறது; வரதக்ஷிணை வழக்கம் இப்பொழுதுதான் ஆரம்பித்திருக்கிறது. தெலுங்கு தேசத்திலாவது, கர்னுடக தேசத்திலாவது, பொதுவாய் வடதேசத்திலாவது, இந்த வரதக்ஷிணை சிரமம் இல்லை. தமிழ் தேசத்தைவிட இன்னும் அதிபால்யத்தில் அங்கு விவாஹம் நடக்கிறது. இருந்தாலும், இந்த வரதக்ஷிணைச் சிரமம் அங்கே இல்லை. அப்படியிருக்க இதற்கும் பால்ய விவாஹத்திற்கும் என்ன ஸம்பந்தம்? ஒரு ஸம்பந்தமும் சொல்வதற்கில்லை. வயதான பிறகு விவாஹம் செய்ய வேண்டுமென்ற கொள்கையுள்ள சிலர் மாத்திரம், பால்ய விவாஹத்திற்குக் கொஞ்சமேனும் ஸம்பந்தமில்லாத அநேக அனர்த்தங்களை, அதனுல் ஏற்பட்டவைபோல, வேண்டுமென்றே சொல்லுகிருர்கள். அப்படிச் சொல்வதில் சீர்திருத்தக்காரர்களுக்கு ஓர் உத்ஸாஹம். ஆனுல், வாஸ்தவத்தில் அப்படிச்சொல்ல எவ்வித ஆதாரமும் கிடையாது. வாஸ்தவத்தில் கவனித்துப் பார்த்தால், பெண்களுக்கு வயதான பிறகு கல்யாணம் செய்கிறதானுல், வரதக்ஷிணை ஜாஸ்தியாகத்தான் ஆகுமென்று எனக்குத் தோன்றுகிறது.

## 2. பால்ய விவாஹம்.

பி: பால்ய விவாஹத்தைப்பற்றி இப்பொழுது பிரஸ்தாபம் ஏற்பட்டிருப்பதால், ஸமீபத்தில் அது விஷயமாய் ஸர்க்காரால் ஏற்படுத்தியிருக்கும் சட்டத்தைப்பற்றி தங்கள் அபிப்பிராயத்தை அறிந்து கொள்ள நினைக்கிறேன்.

ம: சாஸ்திரங்கள் இந்த விஷயம் இப்படித்தான் என்று தீர்மானித்துக் கொடுத்திருக்கிற விஷயத்தில் நான் "அபிப்பிராயம்" சொல்வது? ஒருவருடைய "அபிப்பிராயமும்" இவ்விஷயத்தில் கொஞ்சமேனும் தேவையில்லை மத ஸம்பந்தமாய்ப் பிரமாணங்களா யிருக்கிற சுருதி ஸ்மிருதிகள், லௌகிக ராஜ்ய சட்டங்கள் எல்லாவற்றிற்கும் மேற்பட்டவை. எந்தக் காரணத்தைக்கொண்டாவது அவ்விஷயங்களில் பிரவேசிக்க ஸர்க்காருக்கு அதிகாரமோ நியாயமோ கிடையாது. "வோட்"களை எண்ணிப்பார்த்துக் கொண்டு இவ்விதச் சட்டத்தை ஏற்படுத்தியது தற்கால ஸர்க்கார் செய்திருக்கும் தவறுதல்களில் மிகவும் பெரிய தவறுதல்.

பி: ஸர்க்கார் பிரவேசித்து விட்டார்கள். சட்டமும் போட்டாய் விட்டது. இனிமேல் ஜனங்கள் எப்படி நடந்துகொள்ளவேண்டும்?

ம: அது ஒவ்வொரு மனிதனும், தனக்குத் தானே தீர்மானித்துக்கொள்ள வேண்டிய விஷயம். சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் தண்டனைக்கு

உட்படவா? ஸர்க்கார் பயமுறுத்தும் தண்டனைக்கு உட்படவா? என்று தீர்மானித்துக்கொள்ளவேண்டும்.

பி: எப்படியும் கஷ்டம் உண்டு. ஸர்க்காரின் நிர்ப்பந்தத்தினுல் சாஸ்திரத்தை மீறும்படி ஏற்பட்டிருப்பதால், பகவான் மன்னிக்கமாட்டாரா?

ம: ஒரு நாளும் மாட்டார். உங்கள் லௌகிக சட்டத்திலேயே, இன்னொரு பலவானுடைய நிர்ப்பந்தத்திற்காக ஒரு குற்றத்தைச் செய்யும்படி ஏற்பட்டது என்று சொன்னுல், குற்றவாளியல்லவென்று விட்டுவிடுவார்களா? பின்னுல் எப்படியானுலும், இப்பொழுதுள்ள அனர்த்தத்திலிருந்து தப்பித்துக் கொண்டால் போதுமென்று நினைக்கிறீர்கள். இது நீங்களாக புத்தி பூர்வமாகவே செய்யும் கார்யமானதினுல், அதன் பலனை அனுபவித்தே தீரவேண்டும். மற்றவர்கள்பேரில் குற்றத்தை சாட்டுவதற்கு நியாயம் கிடையாது.

பி: இவ்விதச் சட்டத்திற்குக் காரணபூதர்களாயிருந்தவர்கள், ஜனங்களின் க்ஷேமத்தைக் கருதியே இது மிக்க அவசியமென்று மனப்பூர்வமாய் நம்புகிறார்கள்.

ம: இருக்கலாம். ஆனுல் அதன் அர்த்தம் என்னவாகிறது? பால்ய விவாஹம் செய்ய வேண்டுமென்று சொல்கிற சாஸ்திரங்கள் ஜனங்களின் க்ஷேமத்தைக் கருதவில்லை என்றல்லவா?

பி: முன் காலங்களில் அவை பயனுள்ளதாயிருந் திருக்கலாம். இப்பொழுது அப்படியில்லாததினால் மாற்ற வேண்டியதுதானே?

ம: நம் ரீதியாக, சாஸனத்தை (கட்டளையை)ச் செய்கிற காரணத்தினால், சாஸ்திரங்களுக்கு சாஸ்திரம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் அபிப் பிராயத்தில், இப்பொழுதுள்ள சட்ட ஸபையாரின் இஷ்டமோ, மனப்போக்கோ, அதையனுஸரித்து, இவை சாஸ்யங்கள், அதாவது சாஸனம் செய்யப் படத்தகுந்தவை, என்று ஆகவேண்டுமென்று தோன்றுகிறது. நம் தர்மம் ஸநாதனம், அதாவது நித்யம், மாறுபாடற்றது, என்று நம்புகிற நாம் இக் கொள்கையை எவ்விதத்திலும் அங்கீகரிக்க முடியாது. மேலும், ஸர்க்கார் எவ்வளவோ பலசாலியாக இருக் கட்டும்; ஜனங்களைப் பார்த்து உங்கள் மதக்கோட் பாடுகளை மீறித்தான் நடக்கவேண்டும், இல்லையானால் தண்டிப்போம், என்று நிர்ப்பந்தம் செய்ய என்ன அதிகாரம்? இம்மாதிரி இதுவரை ஒரு ஸர்க்காரும் நிர்ப்பந்தித்தது கிடையாது.

பி: இச்சட்டம் வேண்டுமென்று பிரயத்தனம் செய்தவர்களில், சிலர்களுக்கு சாஸ்திரத்தில் நம்பிக் கையே கிடையாது. அநேகர்களுக்கு சாஸ்திரம் மாற்றத்தகாதது என்பதில் நம்பிக்கை கிடையாது.

ம: அப்படியானால், தங்களை ஹிந்துக்களென்று சொல்லிக்கொள்ளவாவது, ஹிந்துக்கள் ஸம்பந்தமாய்

சட்டம் இயற்றவாவது, அவர்களுக்குக் கொஞ்ச மேனும் அதிகாரம் இல்லை.

பி: வயதான பிற்பாடு விவாஹம் செய்வதே சாஸ்திர ஸம்மதம் என்று காட்டவும்கூட, கொஞ்சம் பிரயத்தினம் நடந்தது. ஆனால் அதை முக்கியமாய் வற்புறுத்தவில்லை. ஜனங்களின் ஐஹிக ஸுகம் தான் தங்களுடைய முக்கிய உத்தேசமென்று வாதாடி னார்கள்.

ம: இதனால் ஐஹிக ஸுகம்தான் எப்படி ஏற் படக்கூடும் என்பதிலும் ஸந்தேஹமே. ஸுகம் ஏற் படுகிறதென்றே வைத்துக்கொள்வோம். ஜன்மாந் தரத்திலாவது, லோகாந்தரத்திலாவது ஏற்படக்கூடிய விசேஷ ஸுகத்திற்கு பிரதிபந்தகமென்று நிச்சயமாய் தெரிகிற காரியத்தைச் செய்தாவது, இந்த ஐஹிக ஸுகத்தை ஸம்பாதித்துக்கொள்ளவேண்டுமா?

பி: ஜன்மாந்தரம், லோகாந்தரம் இவைகளில் நம்பிக்கையில்லாததினால், இவ்விஷயத்தையே அவர் கள் பொருட்படுத்துகிறதில்லை. அங்கிலைகளில் ஸுகத் தையோ துக்கத்தையோ கொடுக்கக்கூடிய கர்மாக்கள் இவையென்று சொல்கிற சாஸ்திரங்களிலும் அவர் களுக்கு நம்பிக்கையில்லை.

ம: இந்தக் காரணத்தினாலும், அவர்கள் தங்களை ஹிந்துக்களென்று சொல்லிக்கொள்ள நியாயமில்லை. அப்படியிருக்க, ஹிந்துக்களுக்காக சட்டமியற்ற

அவர்களுக்கு எப்படி அதிகாரம் ஏற்படும்? இதிருக்கட்டும். இச்சட்டத்திறைல் ஜனங்களுடைய ஐஹிக ஸுகத்தை எப்படி ஸாதிக்கலாமென்று நினைக்கிறீர்கள்?

பி: நம் தேசத்தில், முக்கியமாய் வங்காளத்தில், விவாஹம் என்பது என்னவென்று தெரிந்துகொள்வதற்கு முன்னமேயே கல்யாணமாகி, பர்த்தாக்களை இழந்த பால விதவைகள் அநேகர் இருக்கிறார்கள். அவர்களின் எண்ணிக்கை ஜாஸ்தியாகாமல் இச்சட்டம் தடுக்குமல்லவா?

ம: விவாஹம் என்றால் என்னவென்று தெரிந்த பிறகு விதவைகளாக ஆகிறவர்களிடம் இருக்கும் அனுதாபத்தைவிட, இப்பால விதவைகளிடம் சீர்திருத்தக்காரருக்கு ஜாஸ்தி அனுதாபமிருக்கிறதாகத் தெரி

பி: ஆம்.

ம: இன்னவிதமாயிருக்குமென்று தெரியாமலே இருக்கும் ஸுகத்தை அடையாமல் இருப்பதில் அதிக துக்கமா? தெரிந்து கொஞ்சம் அனுபவித்து விட்டு இழப்பதில் அதிக துக்கமா?

பி: அனுபவித்து இழப்பதில் தான் அதிக துக்கமிருக்கும்.

ம: இந்த நியாயத்தை விதவைகள் விஷயத்தில் ஏன் கவனிக்கவில்லை? தாம்பத்ய ஸுகமென்னவென்று தெரிந்து, அதை இழந்திருக்கும் விதவைகளே விசேஷ

மான அனுதாபத்திற்கு பாத்திரராவார்கள். மேலும், கொஞ்ச நாள் அனுபவித்துவந்த பதார்த்தத்தை இழந்தால் ஜாஸ்தித் துக்கமா, வருஷக்கணக்காய் அபிமானித்து அனுபவித்துவந்த பதார்த்தத்தை இழப்பது ஜாஸ்தி துக்கமா?

பி: வெகுகாலம் அனுபவித்துவந்ததை இழப்பதுதான்.

ம: இதே நியாயப்படி, பர்த்தாவின் பரிசயம் ஏற்பட்டு கொஞ்ச காலத்திற்குள் கணவனை இழப்பவளைக் காட்டிலும், நல்ல வயது வந்த பிறகு பர்த்தாவை இழக்கும் நிலைமை அடைந்தவளுக்கே ஜாஸ்தி துக்கமிருக்கும். ஆகையால், வயதான பிறகு விதவைகளாகிறவர்களே நம் அனுதாபத்திற்கு விசேஷ பாத்திரர்களென்று தோன்றுகிறது. அவர்களைப்பற்றி ஏன் சீர்திருத்தக்காரர்கள் கவலைப்படவில்லை?

பி: கவலைப்படாமல் என்ன? வயதானவர்களோ, பாலிகைகளோ, எல்லா விதவைகளுமே புனர்விவாஹம் செய்து கொள்ளலாம் என்பதுதான் அவர்களின் கருத்து.

ம: விதவை என்ற சப்தமே அவர்கள் காதில் உறுத்துகிறதென்று தோன்றுகிறது. அதனால்தான், விதவைகளின் எண்ணிக்கையைக் குறைக்க உத்தேசிக்கிறார்கள் போலும்.

பி: ஆம்.

ம: விதவைகளின் எண்ணிக்கையைக் குறைக்க இவ்வளவு சிரமம் எதற்கு? இனி, நம் தேசத்தில் விதவைகளே இருக்கக்கூடாது என்று ஒரு சட்டம் போட்டுவிட்டால் போதுமே.

பி: அதெப்படி ஸாத்தியம்?

ம: ஏன் ஸாத்தியமாகாது?

பி: பர்த்தாக்களை சாகாமலிருக்கும்படி எப்படி செய்ய முடியும்?

ம: அதிருக்கட்டும். பெண்கள் விதவைகளாகாமல் இருக்கச் செய்ய முடியாதா?

பி: அதெப்படி முடியும்?

ம: பார்யை தானே பர்த்ரு வியோகத்தினால் விதவையாகிறாள். எந்தப்பெண்ணும் பார்யையாகவே ஆகக்கூடாதென்று சொல்லி, விவாஹத்தையே நிறுத்தி விட்டால், விதவையென்று ஏற்படவே வழியில்லாமல் போய்விடாதா?

பி: அது வாஸ்தவமே. மேல் தேசங்களில் முன்னேற்றமடைந்ததாகச் சொல்லும் சில நாடுகளில், அது மாதிரியும் பிரயத்தினம் செய்து வருகிறார்கள். அந்நிலை நம் தேசத்தில் ஏற்படாமலிருக்க பகவான் அனுக்ரஹம் செய்வாராக!

ம: உங்கள் சீர்திருத்தக்காரர்களும் அந்நிலைக்குத்தானே கொண்டு போகிறார்கள்? பர்த்தாக்களை சாகாமலிருக்கச் செய்ய முடியாதென்று சொன்னீர்

களை. கல்யாணம் செய்துகொள்ள ஸம்மதிக்கிற புருஷர்களின் எண்ணிக்கையை அதிகப் படுத்துவது மாத்திரம் ஸாத்தியமாகுமா ?

பி: ஆகாது.

ம: உங்கள் சட்டத்தினால் கல்யாணம் செய்து கொள்ள ஸித்தமாயிருக்கிற புருஷர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்த முடியாததினால், அவ்வெண்ணிக்கை முன்போல் அப்படியே இருக்கும்.

பி: ஆம்.

ம: அவ்வெண்ணிக்கையில் அகப்பட்ட சிலர்களை, வயதான விதவைகளை விவாஹம் செய்துகொள்ளும்படிக்கும், அநேகம் பேர்களை பால்ய விதவைகளை விவாஹம் செய்துகொள்ளும்படிக்கும், உங்கள் சீர்திருத்தக்காரர் தூண்டுகிறாரல்லவா ?

பி: ஆம்.

ம: இவர்கள்போக மீதியுள்ள புருஷர்கள்தான் கன்யைகளை விவாஹம் செய்துகொள்ள அகப்படுவார்கள்.

பி: ஆம்.

ம: இவ்விதமாகக் கன்யைகளை விவாஹம் செய்துகொள்ளக்கூடிய புருஷர்களின் எண்ணிக்கை குறையுமல்லவா ?

பி: ஆம்.

ம: கன்யைகளின் எண்ணிக்கை குறைந்திராது.

பி: அதெப்படிக் குறையும்?

ம: இச்சட்டத்தினுல், பால விதவைகளாக ஏற்படவொட்டாமல் "காப்பாற்ற"ப்பட்டிருக்கிற சிறு பெண்களும், கன்யா ஜாபிதாவில் சேர்ந்து கன்யைகளின் எண்ணிக்கை ஜாஸ்தியாகுமல்லவா?

பி: வாஸ்தவம்.

ம: ஆகையால், இச்சட்டத்தினுலும், இதைப் போன்ற பிரயத்தினங்களினுலும், கன்யைகளை விவாஹம் செய்துகொள்ளக்கூடிய புமான்களின் எண்ணிக்கை குறைந்தும், விவாஹத்திற்கு ஸித்தமாயிருக்கிற கன்யைகளின் எண்ணிக்கை ஜாஸ்தியாகவுமே ஏற்படுமல்லவா?

பி: ஆம்.

ம: அதாவது, இனிமேல் விவாஹம் செய்துகொள்ள புருஷர்கள் அகப்படாமல், கன்யைகள் வெகு ஜாஸ்தியாக இருந்து வருவார்கள்.

பி: அப்படித்தான் ஆகுமென்று தோன்றுகிறது.

ம: பர்த்தாக்களின் எண்ணிக்கை அப்படியேயிருப்பதால், பர்த்தாக்களில்லாத பெண்களின் எண்ணிக்கையும் அப்படியேதான் இருக்கவேண்டும்.

பி: ஆம்.

ம: ஆகையால் இச்சீர்திருத்தம், ஸந்தோஷமாய் தாம்பத்யம் செய்துவரும் ஸ்திரீ புமான்களின்

எண்ணிக்கையை ஜாஸ்திப்படுத்த உபயோகப்படாது. விதவைகளின் எண்ணிக்கையைக் குறைக்கலாம். விவாஹமாகாத கன்யைகளின் எண்ணிக்கையை எப்படியும் ஜாஸ்திப்படுத்தும். எவ்விதத்திலும் பர்த்தா இல்லாத பெண்களின் எண்ணிக்கை அப்படியேயிருக்குமாகுல். அவர்கள் பர்த்தாவை இழந்த விதவைகளாயிருந்தால் என்ன, பர்த்தாவையே அடையாத கன்யைகளாயிருந்தால் என்ன? இரண்டு விதமாயும் அவர்கள் பர்த்தாவில்லாத "அதவை"கள்தானே. மேலும், கன்யைகளுக்கு பர்த்தாக்கள் அகப்படுவதை துர்லபமாகச் செய்தால், அவர்களுக்கு தாம்பத்ய ஸௌகம் அனுபவிக்க இடமில்லாமல்போகிறது என்பது மாத்திரமில்லை; விவாஹம் என்ற அவசியமான ஸம்ஸ்காரமே அவர்களுக்கு ஏற்பட இடமில்லாமல் போய் விடுகிறது. த்விஜர்களான பையன்களுக்கு உபநயனம் எப்படி அவசியமோ, அப்படியே எல்லா ஜாதிப்பெண்களுக்கும், அதிலும் த்விஜர்களான பெண்களுக்கு, விவாஹம் அவசியமே. பாலவிதவையாயிருந்தாலும், இந்த ஸம்ஸ்காரம் அவளுக்கு நடந்துவிடுகிறபடியால், தன் ஜாதி அந்தஸ்தை நன்கு அடைந்தவளாகிருள். விவாஹமாகாத பெண்ணுக்கு, ஸரியான காலத்தில் இந்த ஸம்ஸ்காரம் ஏற்படாத காரணத்திஞல் இத்தன்மை ஸித்திக்காது. இந்த ஸம்ஸ்காரம் ஏற்படவே வழியில்லாமல் சீர்திருத்தக்காரர் செய்வதிலிருந்து, ஜாதியில் பிறந்தும், ஜாதி அந்தஸ்தையடைந்து மத ஸம்பந்தமான காரியங்களில் பிரவிருத்திக்கவோ,

கலந்து கொள்ளவோ யோக்கியதையற்றவர்களாக ஜாஸ்தியாகப் பெண்கள் ஏற்படுவதுதான் மிச்சம். நம் மதரீதியாக, அவசியமான ஸம்ஸ்காரமேற்படாம லிருப்பது பெரிய தோஷமாகும். நிரபராதிகளான அநேகம் பெண்கள் இத்தோஷத்திற்கு உட்பட வேண்டுமென்று சீர்திருத்தக்காரர் நிர்ப்பந்தம் செய்கிறதாகத்தான் ஆகிறது. இச்சீர்திருத்தக்காரர்கள் வருவதற்குமுன், நம்தேசத்தில் ஸேதுமுதல் ஹிமாசலம் வரையில், இந்த ஸம்ஸ்காரமடையாத பெண்களே இருந்ததில்லை. ஒவ்வொரு பெண்ணினுடைய அத்யாத்மசிரேயஸ்ஸும் பாதுகாக்கப்பட்டிருந்தது. இப்பொழுது விதவாரக்ஷணம் என்று சொல்லிக்கொண்டு, இதை வேண்டுமென்றே புறக்கணித்து உதாஸீனம் செய்கிறார்கள்.

### 3. சரியான திருத்தம்

பி: பால்யத்திலேயே பர்த்தாக்களை இழந்து நிற்கும் சிறு பெண்களின் பரிதாபகரமான நிலையைக் கண்டு விசேஷ அனுதாபம், மற்றவர்களுக்குக் குறையாமல் தங்களுக்கும் இருக்கும் என்று நன்கு அறிவேன். ஆனால், இதற்கு ஒருபரிகாரமும் செய்யாமல், நடக்கிற படி நடக்கட்டுமென்று சும்மாவிருந்துவிடவேண்டு மென்பதா தங்கள் அபிப்பிராயம்?

ம: பெண்கள் ஏன் விதவைகளாகிறார்கள்?

பி: இது அவர்களுடைய கர்மபலன்; அவர்கள்

இதை அனுபவித்தே தீரவேண்டுமென்று தாங்கள் சொல்வதாகத் தோன்றுகிறது.

ம: இதுவரை பேசிவந்ததில், கர்மம் என்பதை இழுக்காமலே, வேண்டுமென்று ஜாக்கிரதையாய், பேசி வந்திருக்கிறேன். சுத்த லௌகிக வியவஹாரத்தில், தாங்களும் இதை இழுக்கவேண்டாம். ஆகையால் கர்மம் என்பதை தூரவைத்துவிட்டு, நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுங்கள்.

பி: பெண்கள் ஏன் விதவைகளாகிறார்கள் என்ற கேள்விக்கா?

ம: ஆம்.

பி: இதற்குப்பதில் எப்படிச்சொல்கிறது? பர்த்தாக்கள் இறந்து போவதினால் பெண்கள் விதவைகள் ஆகிறார்கள்.

ம: இதுவேதான் ஸரியான பதில். இன்னம் ஒரு கேள்வி. இனிமேல் விதவைகளின் எண்ணிக்கை குறைய வேண்டுமானால், அதற்கு எந்த வழிதான் யுக்திக்குப் பொருந்தும்?

பி: சாகிற பர்த்தாக்களின் எண்ணிக்கை குறைய வேண்டும் என்று, நான் சொல்ல வேண்டுமென்று தாங்கள் எதிர்பார்ப்பதாய்த்தோன்றுகிறது.

ம: அப்படியே. இதைத்தவிர, வேறு வழியாவது உபயோகப்படக்கூடிய பரிஹாரமாவது கிடையாது.

பி: மனிதர்கள் சாகிறதை எப்படித் தடுக்க முடியும்?

ம: அதிருஷ்டம், கர்மம், இவைகளைத் தூர வைத்துப் பேசினால், ஏன் முடியாது? தேசத்தில் சாவு குறைய வேண்டுமென்றும், ஸுகாதாரமும் அரோக வாழ்க்கையும் ஜாஸ்தியாக வேண்டுமென்றும் வேண்டிய பிரயத்தினங்கள் எடுத்துக்கொள்வது இல்லையா? பத்தாக்களை அகால மரணத்திலிருந்து பாதுகாக்க மாத்திரம் ஏன் பிரயத்தினம் செய்யக் கூடாது?

பி: பையன்களுக்கு வயதான பிறகு விவாஹம் செய்து வைத்தால் அகால மிருத்யு தடுக்கப்பட்டதாகாதா?

ம: அதெப்படி? ஸரியானபடி பிரஹ்மசர்யானுஷ்டானம் செய்யாமல்போனால், எதுதான் பலனைக் கொடுக்கும்? நவீன வித்யாப்யாஸம் என்ற வியாஜத்தில், நம் சிறுவர்களுக்கு அனாவசியமாய் ஏற்படும் சுமையை நீக்காமலும், அவர்களின் ரத்தத்தை உறிஞ்சுகிற நவீன மனோபாவங்களையும் துராசாரங்களையும் ஒழிக்காமலும், விவாஹத்திற்கு முன்னால் ஸரியானபடி காயிக, மானஸிக, ஆத்யாத்மிகப் பயிற்சியைக் கொடுக்காமலும், இருந்துவிட்டு விவாஹத்தை மாத்திரம் வயதான பிறகு செய்து வைத்தால், அவர்களை ஒரு விதத்திலும் காப்பாற்றினதாகாது. மேலும், தாம்பத்ய வாழ்க்கையிலும்கூட அவசியமாய் அனுஷ்டிக்கவேண்டியதான பலவித பிரஹ்மசர்ய நியமங்கள் இருக்கின்றன. ஆகையால், பால்ய விதவைகளைப்பற்றி நீங்கள் கவலைப்படவே

9.

வேண்டாம். பர்த்தாவாக ஆகி, அகால மிருத்யுவை அடைகிற நம் பையன்களைப்பற்றியே கவனியுங்கள். உங்கள் அனுதாபமும், உதவியும் அவர்களுக்கே தத்காலம் வேண்டியிருக்கிறது. அவர்களுக்குக்கை கொடுத்து, எப்பொழுதும் அரோக த்ருடகாத்ரர்களாக இருக்கும்படி செய்யுங்கள். அவர்களை அகால மிருத்யு பாதிக்காமல் பார்த்துக்கொண்டால், பால்ய விதவைகளைப்பற்றிய விசாரம் தானே தீர்ந்துவிடும். இதற்காக, சாஸ்திரத்தின்பேரில் குற்றம் சொல்லவாவது, அவைகளை மாற்றிவிடமுயலவாவது, எவ்வித அவசியமும் கிடையாது. கவனித்துப் பார்த்தால், இப்பொழுது தோன்றியிருக்கும் இந்த அனர்த்தங்கள் எல்லாம், சாஸ்திரங்களை மீறினதினால்தான் ஏற்பட்டவையென்று நன்கு விளங்கும். அவைகளே ஸரியான பிரமாணங்கள் என்பதைத் தெரிந்துகொண்டு அவைகளில் சொல்லியபடி நடந்துவந்தால் எல்லா அனர்த்தங்களும் விலகி எப்பொழுதும் சுபமே உண்டாகும்.



அத்யாயம் 7

## மத விஷயத்தில் நடுநிலை.

### 1. அரசன் கடமை.

ஸ்ரீ மஹாஸ்வாமிகளிடம், ஒரு நாள், ஸர்க்கார் உத்யோகஸ்தர் ஒருவர் பேசிக்கொண்டிருக்கும்போது பின்வருமாறு தெரிவித்துக் கொண்டார் :—

உ : நம் தேசத்தில் அநேகம் பேர்கள், இப்பொழுது காலம் மிகவும் கெட்டிருப்பதாகவும், அதனால் முறைப்படி தர்மானுஷ்டானம் செய்ய முடியவில்லையென்றும், குறை சொல்லிக்கொள்வதைக் கேட்டிருக்கிறேன். வாஸ்தவத்தில், பிரிட்டிஷ் ஆளுகையில் உள்ள இந்தக்காலம், தர்மானுஷ்டானத்திற்கு மிகவும் அனுகூலமென்றே என் சொந்த அபிப்பிராயம். நாம் அனுஷ்டிக்கவில்லையானால், குற்றம் நம்முடையதே. நடுநிலை வஹிக்கிற ஸர்க்காரின்பேரில் பழியைச் சுமத்த எவ்வித நியாயமும் இல்லை.

ம : நடுநிலை என்றால் என்ன ?

உ : நம் மதக்கொள்கைகளிலாவது, ஆசாரங்களிலாவது, தாங்கள் ஒரு விதத்திலும் தலையிடுகிறது இல்லையென்று பிரிட்டிஷ் ராஜாங்கத்தார் வாக்குறுதி கொடுத்து, அதைப் பரிபாலித்தும் வருகிறார்கள். இதற்கு முன்னிருந்த மகமதியர் ஆளுகையில், மதத்தையும் உயிரையும் காப்பாற்றிக்கொள்ள ஜனங்கள் வீடு வாசல்களை விட்டு ஓடும்படி குரூரமாய் ஹிம்சை

செய்ததற்கு, இப்பொழுதுள்ள நிலை எவ்வளவோ சிலாக்யமல்லவா?

ம: நவீனப் பள்ளிக்கூடங்களில் சொல்லிக் கொடுக்கப்படும் பாடப்புஸ்தகத்திலிருந்து, நீங்கள் இந்த சமாசாரத்தை கிரஹித்திருப்பதாகத்தெரிகிறது. அவைகளில் உண்மையான அம்சங்களும் சிலது இருக்கலாம். இருந்தாலும், அநேகமாய் ராஜகீய நோக்கத்தை முன்னிட்டே அப்புஸ்தகங்கள் எழுதப்படுகின்றன. இப்பொழுதுள்ள பிரிட்டிஷ் ஆளுகையின் விசேஷ அநுகூலங்கள் இருப்பதாக ஜனங்களின் மனதில் படவேண்டியதைக் கருதும்போது, இதற்கு விபரீதமாய் முன் ராஜாங்கத்தார்கள் இருந்தார்கள் என்று எழுதவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. நீங்கள் சொன்ன விஷயம் வாஸ்தவமோ, வாஸ்தவமில்லையோ, எப்படி வேண்டுமானுலும் இருக்கட்டும். வாஸ்தவமென்றே வைத்துக்கொண்டாலும், அதனுல் என்ன ஏற்படுகிறது?

உ: வாஸ்தவமாயிருந்தால், மதவிஷயத்தில் நடுநிலை வஹித்து அனுமதிக்கிற தற்காலத்திய ஸர்க்கார், முன்னுள்ள மகமதிய அரசாங்கத்தாரைவிட எவ்வளவோ மடங்கு சிலாக்கியம் என்று ஏற்படுமல்லவா?

ம: அப்படியிருக்கவேண்டும் என்று அவசியம் இல்லை. அதற்குப் பல காரணங்கள் உண்டு. நம் தேசத்தை மகமதியர்கள் ஆக்ரமித்தவுடன், தங்கள் அரசாட்சியை விஸ்தரித்தினர்கள் என்பது வாஸ்தவம். அதனுல் இடத்தைக் கருட்டிக்கொண்டு தங்கள்

ஸ்வதேசத்திற்குப் போய்விடவேண்டுமென்று நினைக்காமல், இங்கேயே குடியேறிவிட்டார்கள்; இதையே தங்கள் தேசமாக்கிக் கொண்டார்கள்; தங்களுக்கு வேறு தேசம் ஒன்று இருந்தது என்பதையே அதிசீக்கிரம் மறந்துவிட்டார்கள்; இங்கேயே தங்கிவிட்டபடியால், இந்ததேசத்தில் வசித்துவரும் ஜனங்களின் யோகக்ஷேமமே அவர்களுடைய யோகக்ஷேமமாக ஆகிவிட்டது; ஜனங்கள் செழிப்பாய்க் கவலையற்றிருந்தால், நாமும் செழிப்பாய்க் கவலையற்றிருக்கலாமென்பதை உணர்ந்தார்கள்; அதற்காக ரஸ்தாக்கள்போட ஆரம்பித்தார்கள்; பாலங்கள் கட்டினார்கள்; சாகுபடிக்கு வேண்டிய ஏராளமான ஸௌகர்யங்களைச் செய்து கொடுத்தார்கள். இவ்விதமாக ஜனங்களின் நன்மையைக் கருதி, பல காரியங்களைச் செய்தார்கள். ஜனங்கள் அமைதியாயும் திருப்தியாயும் இருக்க வேண்டி, வேறு பல பிரயத்தினங்களையும் செய்தார்கள். ஜனங்கள் அமைதியாயும் திருப்தியாயும் இருந்தால்தான் தங்களுக்கும் க்ஷேமம் என்பதை நன்கு அறிந்தார்கள்.

உ: அப்படித்தான் இருந்திருக்கவேண்டும்.

ம: பொதுக் காரியங்களுக்காவது, அரசர்களின் சொந்தச் செலவிற்காவது பணம் தேவையாயிருந்தால் வரிபோட்டு வசூலித்தார்கள். ஆனால், ஜனங்களுடைய மனோபாவம் கோணாமலிருக்கும்படி ஜாக்கிரதையாயிருந்தார்கள். மேலும், இங்கு வசூலிக்கப்படும் பணத்தை அன்னியதேசத்திற்கு அனுப்ப

வில்லை. பணத்திற்கோ, செலவில்லாமலிருந்தால் பிரயோஜனமில்லை; ஆகையால், அதை இந்தத்தேசத்திலேயே செலவழிக்கும்படி ஏற்பட்டது. கூலி, சம்பளம் முதலான ரூபமாக அப்பணம் மறுபடியும் ஜனங்களிடமே திரும்பிவந்தது. நம் தேசத்திய பணம் வற்றடிக்கப்படவில்லை.

உ: அதற்கு இடமில்லைதான்.

ம: இப்பொழுது, தக்கால நிலைமையைக் கவனியுங்கள். இப்பொழுதுள்ள அரசாங்கத்தாருக்கு இத்தேசத்தைத் தன் தேசமாக்கிக்கொள்ள எக்காலத்திலும் உத்தேசம் கிடையாது. உத்தேசமிருந்தாலும், இத்தேசத்தில் இருந்துவரும் கோடிக்கணக்கான ஜனங்களின் மத்தியில் அது ஸாத்தியமும் ஆகாது. ஆகையால் தன் தேசத்திற்கு அனுப்பவேண்டிய பணத்தை வசூலிப்பதற்கு மிகவும் அனுகூலமான ஸ்தலம் இத்தேசம் என்றே பாவித்து வருகிறார்கள். சிலவேளைகளில், நல்ல ரஸ்தாக்களும், சாகுபடி ஸௌகர்யங்களும் ஜனங்களுக்குச்செய்து கொடுக்க வேண்டுமென்று அவர்கள் நினைக்கும்போதுகூட, தங்கள் நலத்தை மறக்கிறதில்லை. இங்கிருந்து பணத்தை அனுப்பி, தங்கள் தேசத்திலிருந்து ஸாமான்களை வரவழைப்பதற்கு இதுவும் ஓர் அனுகூலம் என்று உபயோகித்துக் கொள்கிறார்கள். இங்கு செய்து கொடுக்கும் ஸௌகர்யங்களை சாசுவதமாய் இருக்கக் கூடியதாகச் செய்துவிட்டால் தங்களுக்கு லாபமில்லை; அடிக்கடி பழுதுபார்க்கும்படியாயும், அடிக்கடி இடித்

தூக்கட்டும்படியாயும் இருந்தால்தான், ஸாமான்கள் வியாபாரம்செய்ய ஸௌகர்யமாயிருக்கும். இவ்வித மாக இந்த தேசத்திற்கு நஷ்டமும், தங்கள் தேசத் திற்கு லாபமும் கிடைக்கவேண்டும் என்றே கருதிவந் திருக்கிறார்கள்.

உ: வாஸ்தவம். நம் தேசத்திற்கு இங்கிலீஷ் காரர் வந்தது பரோபகார சிந்தனையின்பேரிலா?

ம: ஜனங்களுடைய லௌகிக க்ஷேமத்தில் இப்படி. ஆத்யாத்மிக க்ஷேமத்தை கவனிப்போம். மகமதியர்களுக்கு தங்கள் மதத்தில் விசேஷ அபி மானம் இருந்தது. ஈசுவரன் உண்டென்று த்ருடமாய் நம்பினார்கள். ஜாதி, தேசம் வித்யாஸமன்னியில், ஜகத்திலுள்ள எல்லா மனிதர்களுக்கும் ஈசுவரன் பொதுவானவன் என்று நம்பினார்கள். “தங்களை சிருஷ்டித்த ஈசுவரனையடைய பிரயத்தினம் செய்ய வேண்டியது எல்லாருடைய கடமையே. நாங்கள் த்ருடமாய் நம்பியிருக்கிற எங்கள் நபி, அவ்வீசுவரனைத் தேடியடைய வழி இன்னதென்று உபதேசித்திருக் கிறார். இந்தத் தேசத்திலுள்ள ஜனங்களுடைய யோகக்ஷேமத்தை, அவ்வீசுவரனே எங்களிடம் ஒப்பு வித்திருக்கிறார். அதில் அவருக்கு ஓர் உத்தேசமிருக்க வேண்டும். அவரையடைய வேண்டிய ஸரியான மார்க்கத்தை, நாங்கள் இவர்களுக்குக் கற்பிக்க வேண்டுமென்பதுதான் அவ்வுத்தேசமாயிருக்கும். ஓர் அரசன் தன் பிரஜைகளுடைய லௌகிக க்ஷேமத்தை மாத்திரம் கவனித்தால் போதாது; ஆத்யாத்மிக

சிரேயஸ்ஸையும் கவனிக்கக் கடமைப்பட்டவன். ஒன்றைக் கவனித்து மற்றொன்றைக் கவனிக்காமலிருந்துவிட்டால், தன் கடமையிலிருந்து நழுவினவனேயாவான். ஆகையால், இந்த ஜனங்களை ஸமாதான முறையிலும், அவசியமானால் நிர்ப்பந்தம் செய்தும், நம் மதத்தில் சேர்த்துக்கொள்வது நம் கடமையை நிறைவேற்றுவது ஆகும்" என்று இம்மாதிரியாக மனப்பூர்வமாய் த்ருடமான விசுவாஸத்துடன் அவர்கள் ஆலோசித்தார்கள். பிறகு ஜனங்களை மதமதியராக்க ஆரம்பித்தார்கள். இம்மனோபாவத்தில் என்ன தவறு?

உ: இவ்விதமாய்க் கவனித்தால் இல்லைதான்.

ம: இப்பொழுதுள்ள அரசாங்கத்தார், "எங்களுக்கு வரிதான் குறி. லௌகிகத்திலும் ஜனங்களின் நன்மையைவிட எங்கள் நலமே முக்கியமானது. மத விஷயத்தில் நாங்கள் நடுநிலையிலிருக்கிறோம். அதாவது, ஜனங்கள் எப்படிப் போனாலும் எங்களுக்குக் கொஞ்சம்கூட அக்கரையில்லை. அவர்கள் ஸ்வர்க்கத்திற்குப் போனாலென்ன, நரகத்திற்குப் போனாலென்ன? வரியை ஸரியாய்ச் செலுத்த வேண்டும்; செலுத்தாதபோனால், வசூலிக்க எங்களுக்கு சக்தியிருக்கிறது; இது ஒன்றுதான் எங்களுக்குக் குறி" என்று சொல்கிறார்களல்லவா?

உ: தாக்ஷிண்யம் இல்லாமல் சொல்கிற பக்ஷத்தில் அப்படித்தான் ஆகிறது. ஆனால், மத விஷயத்தின்

தாங்கள் உதாஸீனமாயிருப்பதாக ஸர்க்கார் ஒப்புக் கொள்கிறதில்லை. எல்லா மதங்களையும் அனுமதிப்பதாகப் பெருமை பேசிக்கொள்கிறார்கள்.

ம: இந்த அனுமதிக்கும், உதாஸீனத் தன்மைக்கும் அதிக வித்யாஸம் இல்லை. அனுமதியாக இருக்கட்டும், அல்லது உதாஸீனமாக இருக்கட்டும்; பெயர் எப்படியிருந்தாலும், மத விஷயத்தில் கொஞ்சமேனும் அக்கரை இல்லையென்றுதான் ஆகிறது. ஈசுவரனிடம் கொஞ்சமேனும் நம்பிக்கையிருந்து, அவனையடைய வேண்டியது அவசியமென்று நினைத்தால் இம்மனோபாவம் உசிதமாகுமா ?

## 2. ஸமூஹபலம்

உ: தேசத்தை ஆளுபவர்கள், தம் மதத்தை ஜனங்களுக்கு நிர்ப்பந்தித்தாவது புகட்டவேண்டுமென்பதா தங்கள் அபிப்பிராயம்?

ம; அப்படியல்ல; மகமதியர்கள் பலாத்காரமாக இதரர்களைத் தங்கள் மதத்தில் சேர்த்துக்கொண்டாலும், அவர்கள் கருத்துப்படி அதில் ஆக்ஷேபிக்கத் தகுந்த அம்சமாவது, யுக்திக்கு விருத்தமான அம்சமாவது சொல்வதற்கில்லை யென்பதை மாத்திரம் எடுத்துக் காட்டினேன். ஈசுவரனிடமும் தங்கள் நபியிடமும் அவர்களுக்கு இருந்த த்ருடமான விசுவாஸமே அவர்களுடைய மனோபாவத்திற்குக் காரணம். அது சிலாக்கியமேயாகும். ஈசுவரனையே புறக்கணித்தல்லவா தத்கால அரசாக்ஷி நடக்கிறது ?

உ: மனோபாவம் நல்லதாயிருந்தாலும், அதனால் நம் முன்னோர்களுக்கு எவ்வளவு ஹிம்ஸையும் கெடுதலும் ஏற்பட்டன?

ம: வாஸ்தவம்; ஆனால், அதற்கும் இரண்டு விதத்தில் பிரயோஜனமிருந்தது. நம் மதத்தில் பற்றுதலும், ஆசாரணையும் குறைந்திருந்த ஹிந்துக்களை, அவர்களுக்கு லௌகிகமாகச் சில ஸௌகர்யங்களை ஏற்படுத்திக் கொடுப்பதாகச் சொல்லியோ, லௌகிகமாகச் சில அஸௌகர்யங்களை ஏற்படுத்திவிடுவதாக பயமுறுத்தியோ, ஸுலபமாகத் தங்கள் மதத்தில் மகமதியர்கள் சேர்த்துக்கொண்டார்கள். நம் மதத்திலுள்ள அநேக நிர்ப்பந்தங்கள் அங்கு கிடையாது. இவர்களும் மகமதியராகவே ஆகிவிட்டபடியால், நம் ஹிந்துஜன ஸமூஹத்திலிருந்தும் வெளிப்பட்டுவிட்டார்கள்.

உ: இதெப்படி நன்மையாகும்? நம் ஸமூஹத்திற்கு கஷ்டமல்லவா?

ம: இல்லை. நம் ஸமூஹத்தில் துர்பலமாயும், ரோகமுற்றதாயும் உள்ள அம்சங்கள் வெளிப்படுத்தப்பட்டு, இனி அதில் மறுபடியும் சேர வழியில்லாமல் ஏற்பட்டுவிட்டதால், பாக்கியுள்ளவர்கள் பலத்துடன் ரோகமற்று இருக்க முடிந்தது. நம் தேஹத்தில் தோன்றும் ஒரு ரத்தக்கட்டியை அறுத்து வெளிப்படுத்தினால் கஷ்டமும் உண்டு, வலியும் ஏற்படும் என்பது வாஸ்தவம். அதேமாதிரி, நம் ஸமூஹத்திலிருந்து சிலரை

வெளிப்படுத்துவதன்மூலம், நம் ஜனத்தொகை குறைய நேரிட்டபொழுது நம் முன்னோர்களும் மிகவும் சிரமப்பட்டுத்தான் இருப்பார்கள். ஆனால், தேஹத்திலுள்ள இதர பாகங்கள் பலமாய் நோயற்று இருக்க வேண்டுமென்றால், இந்த சிகித்ஸையைச் செய்துதானே ஆகவேண்டும்? இது கடைசியில் நன்மையைத் தருமல்லவா? தேஹத்தில் எப்படியோ, அப்படியேதான் ஜன ஸமூஹத்திலும். அதன் பலமும், ஆரோக்கியமும், ஆகிருதியையாவது, அங்கங்களின் எண்ணிக்கையையாவது பொருத்ததல்ல; பிராண சக்தியையும், பலஹீனம் வியாதி இவையில்லாமலிருக்கும் தன்மையையுமே பொருத்தது. நம் மதத்திலுள்ள பற்றுதலை உதடுடன் நிறுத்தி, இதர ஸௌகர்யா ஸௌகர்யங்களைக் கருதாமலிருக்க சக்தியற்றவர்கள், நம் ஸமூஹத்தைவிட்டு வெளியேறினால் நல்லதே. அவர்கள் வெளிப்பட்டதினால் நமக்கு நஷ்டமேயில்லை. மத விஷயமாகப் பொதுவாக ஏதோ அனுமதி இருக்கிறதென்கிறீர்களே. தத்கால ஜன ஸமூஹத்தைக் கவனியுங்கள். தன் மனதிற்குள் மகமதியராகவோ, கிருஸ்துவராகவோ இருந்துகொண்டு, வெளியிலும் அவர்களைப்போலவே நடை உடை பாவனைகளை வைத்துக்கொண்டு, இந்துவல்லவென்றே தோன்றும்படியாக ஒருவன் நடந்து வந்தாலும், அவன் இக்காலத்தில் இன்னமும் ஹிந்து என்ற பெயரையே வைத்துக்கொண்டிருக்கிறான். அவனை ஹிந்துவல்லவென்று சொல்ல உங்களுக்கு அதிகாரம்

கிடையாது. அவ்விதம் சொல்லிவிட்டால், உங்கள் பேரில் மான நஷ்டத்திற்கு அவன் நடவடிக்கையும் எடுக்கலாம். உங்கள் அடுத்த வீட்டுக்காரரோ, உங்கள் ஸஹோதரரோ, உங்கள் ஸம்பிரதாயாசாரங்களுக்கு விரோதமாய் நடந்தாலும், கிராமத்திலும் உங்கள் வீட்டிலேயும், இவரை நீங்கள் ஸஹித்துத் தான் தீரவேண்டும். உங்கள் ஸம்பிரதாயங்களையும் ஆசாரங்களையும் பார்த்து, கொஞ்சமேனும் ஸஹிக்காமல் அவன் பரிஹஸிக்கவும் செய்யலாம். நீங்கள் மாத்திரம் அவனுடைய நடத்தையை ஆக்ஷேபிக்கக் கூடாது. ஆக்ஷேபித்தால் நவீன நாகரீகப்படி நீங்களே புத்தியற்ற பிடிவாதக்காரர்கள் என்ற வசைக்கு ஆளாவீர்கள். ஆகையால், அவனை உங்கள் மத்தியிலேயே வைத்துக்கொண்டு, அவன் உங்கள் குடும்பத்தையும் குழந்தைகளையும் கெடுக்கிறதை நீங்கள் ஆக்ஷேபிக்காமல் பார்த்துக்கொண்டிருக்க வேண்டும். இது தான் நவீன ஸஹனம் என்பது.

உ: அப்படித்தான் இருக்கிறது. ஆனாலும், இது நம் ஸமூஹத்தின் பலக்குறைவை காட்டுகிறதே யொழிய, ஸர்க்காரிடம் என்ன தோஷம்?

ம: ஸர்க்காருடைய உதவியில்லாத பக்ஷத்தில், எந்த ஜனஸமூஹம்தான் பலமாயிருந்து, தன் கட்டுப்பாட்டை மீறுகிறவர்களிடம் தன் தீர்மானங்களை நிறைவேற்றிக்கொள்ளமுடியும்? போதாததற்கு, ஜனஸமூஹத்தின் செல்வாக்கையே அடியோடு போக்கக்

கூடிய காரியங்களை ஸர்க்காரே செய்வதாயிருந்தால், என்ன செய்யமுடியும்?

உ: தாங்கள் சொல்கிறபடி நம் ஸமூஹத்திற்கு மகமதியர் உதவிசெய்து வந்தார்களா?

ம: மனப்பூர்வமாக அவர்கள் ஒருபொழுதும் உதவிசெய்ததில்லை. ஆனாலும், அவர்கள் உத்தேசிக்காமலிருந்தாலும், அவர்களுடைய ஆட்சியில் கார்யாம்சத்தில் நம் ஸமூஹம் பலப்பட்டே வந்தது. நம் மதத்திற்கு விரோதிகளென்று பஹிரங்கமாய் அவர்கள் தங்களைச் சொல்லிக்கொண்டபடியால் அவர்களை எதிர்க்க நாம் நம்மைத் தயாராய்ப் பலப்படுத்திக் கொண்டோம். நமக்குச் சத்துரு இருக்கிறான் என்று நிச்சயமாய்த் தெரிந்தபடியால், எங்கேயேனும் ஏதாவது ஸந்தேஹம் தோன்றினால், உடனே ஜாக்கிரதையாயிருந்து வந்தோம். கிராமம், ஜாதி, மதம் இவ்விஷயங்களில் ஸமுதாய சக்தி விழித்துக்கொண்டு ஜாக்கிரதையாய் பலத்துடன் இருந்து வந்தது. எந்த நிமிஷத்திலும் எதிர்ப்புவரும் என்று எதிர்பார்த்து காலாகாலத்தில் ஸரியானபடி தயார்செய்து கொண்டார்கள். பஹிரங்க யுத்தமானதினால், தங்களைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டி பலம் ஏற்பட்டது. இதுவே மகமதியர்கள் ஆளுகையில் ஏற்பட்ட மற்றொரு அனுகூலம்.

உ: இது, எப்படி அனுகூலம் என்றுவது, இப்பொழுதுள்ள அமைதியான ஜீவனத்தைவிட அது எப்படி ஸௌக்கியமென்றுந் தெரியவில்லையே.

ய: நமக்கு சத்துரு ஒருவன் இருக்கிறான், அவனுடன் எதிர்த்துப்போராடவேண்டும், என்று முன்னதாகத் தெரிந்தால் அதற்குவேண்டிய ஆயுதங்களைக் கைப்பற்றித் தயாராகலாம் யுத்தகளத்தில் நேருக்கு நேர் சத்துருவை எதிர்ப்பது சிரமமில்லை. உங்கள் கூடவேயிருந்து மித்திரனாக வேஷம் போட்டுக்கொண்டிருக்கிற சத்துருவை எதிர்ப்பதுதான் மிகவும் சிரமம். நம்மை பஹிரங்கமாய் எதிர்க்கிற ஒரு புலியுடன் சண்டையிட முடியும்; நமக்குத் தெரியாமல் சரீரத்தில் புகுந்து ரத்தத்துடன் கலந்து, கொஞ்சம் கொஞ்சமாய் தாக்ஷிண்யமன்னியில் உயிரை வாங்குகிற விஷத்துடன் சண்டையிடுவது ஸாத்தியமில்லை.

உ: வாஸ்தவம்.

ம: அப்படியே, மகமதியர்கள் ஆட்சியில் நம் சத்துரு யார் என்று தெரியுமாதலால், எதிர்ப்பை எதிர்பார்த்துத் தயாரித்துக்கொள்ள முடிந்தது. இப்பொழுதோ வென்றால், நமக்குச் சத்துரு யார் என்பது தெரியாது. நம்மை எதிர்க்கவேயில்லை என்று எல்லாரும் சொல்லிக்கொள்கிறார்கள். நாமும், எதிர்க்கவில்லையென்று சொல்வதைக் கேட்டுக்கேட்டு நம் பலத்தையெல்லாம் இழந்து நிற்கிறோம். நமக்கு அபாயமேயில்லையென்ற தவறுதலான எண்ணம் ஏற்படஏற்பட மேலும் துர்பலராகி வருகிறோம். ஹிந்துமத விருத்தமான எண்ணங்களும், ஆசாரங்களும், விஷம்போல் நம் ரத்தத்தில் கலந்து வருகின்றன. இது விஷம் என்று தெரியாமலும், தெரிந்துகொள்ள இஷ்டப்

படாமலும் நாம் இருந்து வருவதுதான் மிகவும் பரி தபிக்க வேண்டிய விஷயம். இந்நிலை மகமதியர்கள் நாளில் கிடையாது.

உ: அப்படியானால், தத்கால ஸர்க்காரும் தங்களை "ஹிந்து மதத்திற்கு விரோதி" யென்று வெளிப்படையாகச் சொல்ல வேண்டுமென்பதா தங்கள் விருப்பம்?

ம: நம்முடைய நன்மையைக் கருதினால், இப் பொழுது நம்மை க்ஷீணப்படுத்திவரும் "நடு நிலை"யை விட, அவ்விதம் சொல்லிவிட்டாலும் நல்லதேயாகும்.

உ: அல்லது, இதர மதங்களுக்கு எதிரிடையா யிருந்து, ஹிந்து மதத்திற்கு வேண்டிய உதவியைச் செய்ய வேண்டுமென்பது தங்கள் எண்ணமா?

ம: இது ஸாத்தியமில்லையென்பது தெரியும்.

உ: அரசாங்கத்தார் கிருஸ்துவர்கள்; பிரஜை களோ பல வகுப்புகளைச் சேர்ந்தவர்கள்; அவர்களுக் குள், ஒரு குறிப்பிட்ட வகுப்பின் கக்ஷியில் ஸர்க்கார் சேருவது ஸாத்தியப்படுமா?

ம: இதனால், எல்லா மதங்களுக்கும் ஒரேமாதிரி ஆதரவு அளிக்கக்கூடாதென்று ஆகுமா?

உ: இப்பொழுது அப்படித்தானே செய் கிறார்கள்?

ம: நீங்கள் நினைப்பது ஸரியல்ல. எல்லா மதங் களுக்கும் ஒரே விதமாய் ஆதரவு அளிக்கவேயில்லை.

ஒருகால் எல்லா மதங்களுக்கும் ஒரே விதமாய் "அனுதரவு" காட்டுகிறார்கள் என்று வேண்டுமானால் ஆகும். அதையே "நடுநிலை" என்கிறார்கள்.

உ: தங்கள் மதமல்லாத வேறு மதத்திற்கு அவர்கள் எப்படி ஆதரவு கொடுக்க முடியும்? தங்கள் மனஸ்ஸாக்ஷிக்கு விருத்தமாயல்லவா அவர்களை செய்யச் சொல்வதாக ஆகும்?

ம: ஏதேனும் ஒரு மதாபிவிருத்திக்காக ஸர்க்காரிலிருந்து பணம் கொடுக்க வேண்டுமென்றுவது, அந்த மதஸ்தர்கள் சரியாக நடந்துவருகிறார்களாவென்று பார்க்கவேண்டுமென்றுவது, நான் கொஞ்சமேனும் சொல்லவரவில்லை.

உ: வேறு விதத்தில் ஆதரவை எப்படிக் காட்ட முடியும்?

ம: தாங்கள், மத விஷயங்களில் கொஞ்சமேனும் தலையிடாமலிருந்து கொண்டு, அந்தந்த மத விஷயமாய் அவரவர்களுக்கு பூர்ண ஸ்வாதந்திரியம் கொடுத்துவிட வேண்டும்.

உ: தற்கால ஸர்க்காரும் இதையே செய்ய வில்லையா? மத விஷயங்களில் தலையிடுகிறதில்லை. அவரவர்கள் மத ஸ்வாதந்திரியத்தையும் பந்தோபஸ்து செய்தே கொடுக்கிறார்கள்.

ம: பேருக்கு அப்படியிருக்கலாம். காரியத்தில் இல்லை. விவரித்துச் சொல்கிறேன் கேளுங்கள்.

## 3. அரசாங்க உதவி

ம: விதேசிய அரசாங்கத்தாரும், அவர்களைப் போல் பாவனையையடைந்திருக்கும் நம்மில்சிலரும், நம் நோக்கம், நம் ஆசரணம் இவை என்னவென்று கொஞ்சமேனும் அறியாதவர்கள். மதம் என்றால், நித்தியப்படியுள்ள காரியங்களுக்கு ஸம்பந்தமன்னியில், வெளிப்பட்டதாய் அஸாதாரணமாயுள்ள ஏதோ ஒன்று என்று நினைக்கிறார்கள். உண்மையான ஹிந்துவுக்கோவென்றால், மதமும் நித்யஜீவனமும் ஒன்று; எவ்விதமான காரியத்திலும் மதம் கலக்கும். ஸமூஹ விஷயங்கள் வேறு, மத விஷயங்கள் வேறு என்பது அவன் ஸம்பந்தப்பட்ட வரையில் கிடையாது. மதம் என்பது மனித வாழ்க்கையில் ஒரு சில்லரையான அம்சம்தான் என்றே பாவித்துவருகிற ஸர்க்காருக்கு விவாஹம், ஸத்ஸந்ததி, ஸம்விபவஹாரம், தாயபாகம் முதலானவைகளும் மத ஸம்பந்தப்பட்டவைதான் என்றால் எப்படி அர்த்தமாகும்? ஆகையால், இவைகள் எல்லாம் மத ஸம்பந்தமற்றவையென்று சொல்லி, இவ்விஷயங்களில் தலையிடுகிறார்கள். ஆகையால், மத விஷயத்தில் நாங்கள் தலையிடுவதில்லையென்று அவர்கள் சொல்லிக்கொள்வது வாஸ்தவமில்லை; அதிலும், ஹிந்துக்கள் விஷயமாய்க் கொஞ்சமேனும் வாஸ்தவமில்லை. மகமதியர்கள் ஆளுகைக் காலத்தில், இவ்விதமாகக் கொஞ்சமேனும் தலையிட்டதும் கிடையாது; தலையிடப் பிரயத்தனம் செய்ததும் கிடையாது என்பதை ஞாபகப்படுத்துகிறேன். நம் மதத்தை பந்தோ

பஸ்து செய்கிறது என்றால், அதற்கு ஒரு விதம்தான் உண்டு ஒரு மதத்தைச்சேர்ந்த பிரஜைகள் அவர்களுக்கு ஏற்பட்ட தர்மங்களை ஸரிவர நடத்திவருகிறார்களாவென்று கவனிக்க வேண்டிய பொறுப்பை வஹித்துவருகிற மதாசார்யர்களுக்கு, ஸர்க்கார் தன் பலத்தைக் கொடுத்து உதவ வேண்டும். அதாவது, அந்தந்த மதத் தலைவர்கள் தங்கள் ஆக்ஞையை நிறைவேற்றிக்கொடுக்க, ஸர்க்காருடைய லௌகிக பலத்தை அபேக்ஷிக்கும் விஷயத்தில் உடனே உதவவேண்டும்.

உ: அதெப்படி நாம் எதிர்பார்க்கலாம்? ஹிந்துப் பிரஜைகளை ஹிந்து மதப்படி நடத்த வேண்டிய பொறுப்பை ஒருகிருஸ்துவ அரசாங்கத்தார் வஹிப்பார்களா?

ம: ஏன் கூடாது?

உ: எப்படியிருந்தாலும் இதுமாதிரி உதவி, மகமதிய அரசாங்கத்தார் காலத்தில் ஒருநாளும் கிடைத்திராது.

ம: நீங்கள் நினைப்பது தவறு. உதாஹரணமாக, மைசூர், ஹைதராபாத் ராஜ்யங்களில் அரசாட்சி நடத்திவந்த மகமதிய அரசர்கள், ஸ்ரீசிருங்கேரி மடத்தில் அப்பொழுதுள்ள ஆசார்யார்களுக்கு எழுதியிருக்கும் சில கடிதங்கள், இன்னமும் இருக்கின்றன. அவைகளில், மதவிஷயமாக ஆசார்யர்கள் செய்யும் ஆக்ஞைகளைக் கூடவிருந்து ஸரிவர நிறைவேற்றிக் கொடுக்கும்படி தன் அரசாங்க உத்யோகஸ்தர்களுக்குக் கட்டளையிட்டிருப்பதாகத் தெளிவாகக் காண்கிறது.

[1791-ம் வருஷத்தில் டிப்பு ஸுல்தான் தன் ஸர்தார் "ஸெய்து மகம்மது"க்கு அனுப்பிய உத்திரவில், "சிருங்கேரி மடத்து ஆசார்யர், அவர்களுடைய சிஷ்யர்களில், தர்மத்திலிருந்து விலகினவர்கள் விஷயமாய் விசாரணை செய்யவேண்டிய ஸௌகர்யங்களைச் செய்து கொடுக்கவேண்டும்" என்று கண்டிருக்கிறது.

1779ல் ஹைதராபாத் நைஜாம் பிறப்பித்த உத்திரவில் "ஸ்ரீ மடத்து சிஷ்யர்கள் யாரேனும் வாரிஸ் அன்னியில் இறந்தால் அவர்கள் சொத்து ஸ்ரீ மடத்தையே சேரவேண்டும்" என்றும், "சிஷ்யர்களுடைய தர்மானுஷ்டானங்கள் விஷயமாய்த் தீர்மானிக்க ஸ்ரீ ஸ்வாமிகளே முக்கியாதிகாரி" என்றும் காணப்படுகிறது.

அப்படியே, 1843ல் நைஜாம் ராஜா சிருங்கேரி ஸ்ரீமத் ஆசார்யார் அவர்களுக்கே எழுதியிருக்கும் கடிதத்தில் "பதினெட்டு ஜாதிகளிலுமுள்ள ஸகல பிரிவினர்களும், அவரவர்களுக்கு ஏற்பட்ட தர்மங்களை அனுஷ்டிக்கிறார்களாவென்று விசாரிக்கவும், அவரவர்களை அவ்வவ்வனுஷ்டானங்களில் நிலை நிறுத்தவும், நீங்களே மேலான அதிகாரிகளாயிருக்கிறீர்கள்" என்றும், "மத விஷயத்தில் ஆசார்யரின் ஆக்ஞைகளை யாரும் மீறக்கூடாது" என்றும் உத்திரவிட்டிருப்பதாகவும் கண்டிருக்கிறது.]

உ: இப்படியெல்லாம் இருந்திருக்க முடியும் என்றே நான் நினைக்கவில்லை.

ம: மகம்மதிய அரசாங்கத்தார் விஷயமாய் உங்களுக்கேற்பட்டிருக்கும் மனோபாவனையெல்லாம், ஒருதலையாய் எழுதப்பட்டிருக்கிற கிரந்தங்கள் மூலமாய் ஏற்பட்டதல்லவா? இன்னமும் அதிக ஆச்சர்யப்படக்கூடிய விஷயங்களும் இருக்கின்றன. அதே மடத்திற்கு டிப்புஸுல்தான் எழுதிய ஒரு கடிதத்தில் 'ஸமீபத்தில் ஸம்பவிக்கப்போகும் யுத்தத்தில் தனக்கு ஜயம் ஏற்பட வேண்டியதற்காக ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்தில் தன் செலவில் அவசியமான வைதிகக் காரியங்களைச் செய்ய ஏற்பாடு செய்யவேண்டும்' என்று ஆசார்யரைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்.

உ: இதைக்கேட்க மிகவும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. மதக்கிறுக்குப் பிடித்தவன், தன் மதத்தில் பிறரை பலாத்காரமாய் சேர்த்துக்கொண்டு வந்தவன் என்றல்லவா டிப்புவிற்குப் பேர் கிளம்பியிருக்கிறது?

ம: நான் முன் சொன்னபடி, இதுமாதிரிக் கதைகளில் அதிகமாய் நம்பிக்கை வைக்க இடமில்லை. ஸ்ரீ மடத்திற்கு அவன் எழுதிய கடிதங்களும், தன் ஆயுள் முடிவுவரை பூர்ணய்யா என்ற பிராஹ்மண மந்திரியையே வைத்துக்கொண்டிருந்தானென்பதும் மறுக்கத் தகாத பிரமாணங்களாகும். அநேக விஷயங்களில் அவன் மட்டுக்குமிஞ்சி நடந்திருக்கலாம். அதுவும், மேலே சொல்லியபடி ஈசுவரனிடத்திலும், அவ்வீசுவரனையுடைய ஒரே ஸாதனமாக அவனுக்குத்

தோன்றின தன் மதத்திலும், அவனுக்கிருந்த த்ருடமான விசுவாஸத்தினுல்தான் ஏற்பட்டிருக்கும்.

உ: மகமதியர்கள் காலத்தில் எப்படியிருந்திருந்தபோதிலும், தாங்கள் அபேக்ஷிக்கிறபடி, இப்பொழுதுள்ள ஸர்க்கார் உதவுவார்களென்று நினைக்க இடமில்லை.

ம: அப்படியானுல், ஜாஸ்தி ஆதரவும் உதவியும் ஏற்படக்கூடிய ஆட்சி வரும்வரை காத்திருக்க வேண்டியதுதான்.

உ: ஏன் அப்படி? லௌகிக ஆதரவுக்கு ஏன் இவ்வளவு மஹிமை கொடுக்கிறீர்கள்?

ம: தேசச் சரித்திரம் எல்லாம் இப்படியேதான் தெரிவிக்கிறது. இத்தேசத்தில் நம் மதத்தை ரக்ஷித்துப் பரவச்செய்வதற்காக, ஈசுவரனே ஸ்ரீ சங்கராசார்ய ரூபத்தைத் தரித்து அவதரித்தபோதுகூட, ஸுதன்வா என்ற ஓர் அரசனின் லௌகிக உதவியைத் தேடியடையவில்லையா? ஸர்வக்ஞரான ஸ்ரீமத் வித்யாரண்ய ஸ்வாமிகளும், வைதிக தர்மத்தை முன்னிலைக்குக் கொண்டுவரப் பார்த்தபோது, தனக்கு உதவியாயிருக்கும் பொருட்டு விஜயநகரமென்ற ஹிந்து ஸம்ஸ்தானத்தை ஏற்படுத்திக்கொள்வது அவசியமென்று நினைத்து ஏற்படுத்தவில்லையா? சிருங்கேரியில் பூர்வாசார்யாராயிருந்த மஹான் ஸ்ரீமத் சங்கராசார்யாரின் ஜன்ம பூமியான காலடி க்ஷேத்திரத்தில் அவர் மூர்த்தியை பிரதிஷ்டை செய்யும்

காலத்தில் "*பரமாசார்யாருடைய மேதையையும் ஸாமர்த்தியத்தையும் எனக்குக் கொடுத்தாலுங்கூட, ஸுதன்வாபோன்ற அநேக அரசர்களின் ஸஹாயமும் கிடைத்தால்தான், நம் மதத்தைப் பாதுகாக்க என்னால் பிரயத்தினம் செய்யமுடியும்" என்று வியக்தமாய் சொல்லவில்லையா? இப்பொழுதிருக்கும் நிலைமையில் நாங்கள் சக்தியற்றவர்களே.

### 4. மதஸ்வாதந்திரியம்.

உ: தாங்கள் சொல்கிற மாதிரியில், அரசாட்சி மாறவேண்டுமென்று கேட்கிற இப்பொழுதுள்ள தேசிய கக்ஷிக்காரருடைய அபிப்பிராயத்திற்கும், தங்கள் அபிப்பிராயத்திற்கும் அதிக வித்யாஸம் இருப்பதாகத் தெரியவில்லையே.

ஆ: அப்படியல்ல. ஸர்க்காரே மாறவேண்டுமென்று அவர்கள் எண்ணுகிறார்கள். ஸர்க்காரின் மனோபாவம் மாறவேண்டுமென்பதுதான் என் கருத்து. மேலும் தேசியம் என்று சொல்லிக்கொள்கிற கக்ஷியை

---

* यद्या दुर्मतभेदपाटववतीं मेधां नवोन्मेषिणीं
विद्यामाश्रुतशास्त्रपाठनचणां दद्याद्द्रुतं चेद्गुरो ।
साहाय्यं च सुधन्वपार्थिवसदृग्राजावलेस्तर्ह्यहं
त्वद्दीक्षाबलतो यते यतिपते तत्त्वार्थसंवृद्धये ॥

–பக்தி ஸுதாதரங்கிணி, பக்கம் 203
ஸ்ரீசங்கராசார்ய ஸ்தோத்ர கதம்பம் ௧. 28

முன் நின்று நடத்துகிறவர்களையும், அவர்கள் உபயோகிக்கும் வழிகளையும் கவனித்தால், அரசாங்க அதிகாரம் அவர்கள் கையில் சிக்கிக்கொள்ளும் விஷயத்தில், நம் மதத்திற்கு அதைவிட வேறு ஆபத்துக் கிடையாதென்றே தோன்றுகிறது. அவர்களில் ஒருவருக்கும் எந்த மதத்திலும் பற்றுதலேயிருப்பதாகத் தெரியவில்லை. பற்றுதலிருப்பதாக சொல்லிக்கொள்கிறவர்களும் வாய்ப்பேச்சுடன் ஸரி. "தேசீய" நன்மையென்று அவர்கள் எதைக் கருதுகிறார்களோ, அதற்கு விரோதமாக மதம் தென்பட்டால், அந்தப் பேச்சுப் பற்றுதலும் உலைந்துவிடும். ஆகையால், இந்த "தேசீயர்கள்" வசத்தில் அகப்படுவதைவிட, தத்கால ராஜாங்கத்தார் ஆளுகையிலிருப்பதே மிகவும் சிலாக்கியம். அவர்களின் இயக்கமும், நடவடிக்கைகளும் எனக்குக் கொஞ்சமேனும் திருப்தியைக் கொடுக்கவில்லை.

உ: இருந்தாலும், ஸர்க்காரைத் தாங்கள் கண்டிப்பது, அவர்களின் கண்டிப்பைவிட எவ்விதத்திலும் குறைந்ததாகத் தெரியவில்லையே?

ம: அதிருக்கலாம். ஆனால், ராஜாங்கத்தார் விதேசஸ்தர்கள் என்றிருப்பதாலும், அதிகாரங்களைத் தங்கள் கைவசப்படுத்திக்கொள்ள வேண்டுமென்கிற எண்ணத்தினாலும், அவர்கள் ஸர்க்காரைக் கண்டிக்கிறார்கள். ராஜாங்க அதிகாரம் விதேசஸ்தர்களிடமிருந்தாலும், ஸ்வதேசஸ்தர்களிடமிருந்தாலும், அது எனக்கு ஒரு பெரிய விஷயமில்லை. ஆளுகிறவன் யார்,

எந்த தேசத்தைச் சேர்ந்தவன், என்ன மதம், என்ப தில் எனக்கு விசேஷ அக்கரையில்லை. பிராஹ்மணன் பிராஹ்மணனாகவிருந்து காலத்தைக் கழிக்கும்படியா யும், பொதுவாக ஹிந்து ஹிந்துவாகவும், மகமதியர் மகமதியராகவும், பார்ஸி பார்ஸியாகவும், அப்படியே இதரர்களும், தங்கள் தங்கள் மதப்படியும் வாழ்நாளைக் கழிக்கும்படியாயும் வேண்டிய ஸௌகர்யங்களையும் ஆதரவையும் அளிக்க வேண்டுமென்பதில்தான் எனக் குக் கவலை. மத விஷயத்தில் நடுநிலை, பொது அனுமதி, என்றால் அர்த்தமேயில்லை. மேலே சொன்ன ரீதியாக, மதங்கள் விஷயமாய் ஸமமான பாவனையிருக்க வேண்டும். இன்னொருவனால் தொந்திரவு செய்யப் படாமலும், தடுக்கப்படாமலும் அவனவன் தன் தன் கொள்கைகளை வைத்துக் கொள்ளவும், அவனவ னுடைய மத ஸம்பந்தமான அனுஷ்டானங்களை அனுஷ்டிக்கவும், வேண்டிய ஸௌகர்யங்களைச் செய்து கொடுக்க வேண்டும். அப்படிக்கன்னியில், எல்லா ஜனங்களையும் ஏகரூபமாக, மதமற்றவர்களாகவோ நாஸ்திகர்களாகவோ செய்து விடுவது நடுநிலையாகுமா? மதத்தையே அழித்ததாகத்தான் ஆகும். மதவிஷயத் தில் ஸ்வதந்திரர்களாகவிருந்து, சாந்தமாய்த் திருப்தி யுடன் காலங்கழித்துவர நினைக்கும் பிரஜைகளைக் கொண்டுதான் அரசாங்கத்தாருக்கு க்ஷேமம் என்றும், புதிதுபுதிதாக குதூஹலத்தைத்தேடி, கண்டபடி யெல்லாம் கொள்கையும் நடத்தையும் வைத்துக் கொண்டு, மனம்போனபடி போய்க்கொண்டு, உலகத்

தில் ஆர்ப்பாட்டம் செய்து வருகிற சிலர்களால் அரசாங்கத்திற்கு எப்பொழுதும் க்ஷேமம் கிடையாது என்றும், கூடிய சீக்கிரத்தில் ஸர்க்காரே உணருவார்களென்றும் நினைக்கிறேன். நம் மதத்தை பாதுகாக்கும் பொறுப்பை, பகவானே வஹிக்கிருரென்ற த்ருடமான நம்பிக்கையிருப்பதால், இப்பொழுது அதைத் தாக்க எவ்விதக் கிளர்ச்சிகள் தோன்றினபோதிலும், என்ன நடக்கிறதென்று நிர்விசாரமாய் எதிர்பார்த்துக் கொண்டிருக்கலாமென்று தோன்றுகிறது.

[குறிப்பு:— மேலே சொல்லிய விஷயங்களில் சிலவற்றைச் சிலர்கள் ஸரியானபடி அர்த்தம் செய்து கொள்ளாமலிருந்துவிடக் கூடாதென்பதை உத்தேசித்து சில அம்சங்களைக் குறிப்பிடவேண்டியிருக்கிறது. மதப்பாதுகாப்பின் அவசியத்தை வற்புறுத்துவதே இதன் முக்கிய தாத்பர்யம். எந்த மதமும், அந்த மதஸ்தர்களின் அனுஷ்டானத்திற்கு இடைஞ்சலேற்பட்டுக்கொண்டேயிருந்தால் வலுத்துச் செழிப்பாய் இருக்க முடியாது அதிலும், பொதுவாகவே ஸ்வபாவத்திலும் பயிற்சியிலும் கொள்கையிலும் சாந்தமாய் ராஜ விசுவாஸத்துடனிருந்துவரும் பிரஜைகளில் வைதிக ஹிந்துக்களைத் தவிர மேலாக யாரையும் உலகத்தில் கண்டதுமில்லை, காணப்போகிறதுமில்லை. ராஜகீய வியவஹாரத்தில் தலையிடும் எண்ணமே அவர்களுக்கு மிகவும் குறைவு. வைதிக ஹிந்துக்களின் மத விஷயமான ஸ்வாதந்திரியத்தைப் பாதுகாக்க வேண்டுமென்பதுதான் நோக்கம். மேலே

சொல்லியபடி "மதங்கள் விஷயமாய் ஸமபாவனை யிருக்கவேண்டும். அவனவன் இன்னொருவனுடைய தொந்தரவும் தடையும் ஏற்பட இடமன்னியில் தன் தன் கொள்கைகளை வைத்துக்கொள்ளவும், அவனவனுடைய மத ஸம்பந்தமான அனுஷ்டானங்களை அனுஷ்டிக்கவும் வேண்டிய ஸௌகர்யங்களைச் செய்து கொடுக்க வேண்டும்". இவ்வித எண்ணத்தில்தான் நம் பிராசீன ஹிந்து ராஜாக்கள் இத்தேசத்தில் பார்ஸிகள், கிருஸ்துவர்கள் முதலான இதர மதஸ்தர்களுக்கும் குடியேற ஸௌகர்யம் செய்து கொடுத்தார்களென்பது சரித்திரம் வாசிப்போர் நன்கு அறிவார்கள்.

இன்னும் ஒரு விஷயம். பலாத்காரமான மத மாற்றுதலைப்பற்றி மேலே சொல்லியது மகமதிய அரசாங்கத்தாரின் நிலையிலிருந்து சொல்லப்பட்டதே தவிர, தர்மாதர்ம விவேசன நிலையிலிருந்து சொல்லப்படவில்லை. மதப்பிடிவாதமுள்ள மகமதிய ராஜாங்கத்தாருக்கும், தத்காலத்திலிங்கு நடுநிலை வஹிக்கும் ராஜாங்கத்தாருக்கும் உள்ள தாரதம்யத்தை மகமதியர் நிலையிலிருந்தே சொல்லப்பட்டதால் ஒரு தலைப்பக்கமாகவே தோன்றும். "அரசாங்கத்தார்கள் தங்கள் மதத்தை நிர்ப்பந்தமாக ஜனங்களுக்குப் புகட்டவேண்டுமென்பதா தங்கள் அபிப்பிராயம்" என்று கேட்டதற்கு "இல்லவே இல்லை" என்று பதில் சொன்னதிலிருந்தே, பலாத்கார மதமாற்றம் உசிதம் தான் என்று சொல்லப்படவில்லையென்பது தெளி

வாகும். எந்த மதத்தில் ஒருவன் ஜனிக்கிறானோ அதுவே அவனுக்கு பரமமான சிரேயஸ் ஸாதன மென்று நம்புகிற ஹிந்து ஒருவித மதமாற்றலையும் ஒப்பான்; இதர மதத்திலிருந்து ஹிந்துவாக்கக்கூட ஸம்மதியான் (முதல் அத்யாயம் பார்க்க). அப்படி யிருக்க பலாத்காரமான மத மாற்றலை எப்படி ஒப்புவான்.—ரா. கி.]



அத்யாயம் 8

## மதப் பிரசாரம்

### 1. அக்ஞானம் சரணமாகுமா ?

லௌகிக ரீதியாய் தக்க அந்தஸ்துள்ள ஒருவர் ஒருநாள் ஸ்ரீ மஹாஸ்வாமிகளிடம் பின்வருமாறு கேட்டார் :—

அ : பால்யம் முதல் லௌகிகமான வித்யையையே அப்யஸித்து வந்திருக்கிற என்னைப்போன்றவர்களுக்கு தர்ம விஷயமான விதிநிஷேதங்கள் தெரியாததினால், எங்களுக்குத் தவறுதல் ஸம்பவித்தால் ஸமாதானமுண்டு. அவ்வித ஸமாதானம் சொல்லிக்கொள்வதற்கிடமன்னியில் இருக்கிற பண்டிதர்கள் தவறினால், ஜாஸ்தியான தோஷமில்லையா ?

ம : ஒரு விதத்தில் நீங்கள் சொல்வது வாஸ்தவம் தான். நீங்கள் தெரியாத்தனத்தினால் தவறுகிறீர்கள். அவர்கள் தெரிந்திருந்தும் தவறுகிறார்கள். அவர்கள் குற்றமேதான் ஜாஸ்தியாகத் தெரிகிறது. இருந்தாலும், மற்றொரு விதத்திலும் இதைக்கவனிக்க வேண்டியதை மறந்துவிடக்கூடாது.

அ : அதென்ன ?

ம : செய்யவேண்டிய காரியம் என்னவென்று அவர்கள் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். ஆனால் அதையனுஷ்டானத்திற்கு கொண்டுவரவில்லையென்று

மாத்திரம் ஏற்படுகிறது. நீங்கள் தெரிந்துகொள்ளவும் இல்லை, அனுஷ்டிக்கவும் இல்லை. அவர்களிடம் அனுஷ்டிக்கவில்லையென்ற ஒரு தோஷமிருக்க, உங்களிடம் தெரிந்துகொள்ளவில்லை, அனுஷ்டிக்கவில்லை என்ற இரண்டு தோஷங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆகையால் வாஸ்தவத்தில் கவனித்துப்பார்த்தோமானால் உங்கள் குற்றமேதான் ஜாஸ்தியாகத் தோன்றுகிறது.

அ: அக்ஞானமே தோஷம் என்றிருந்தால் தானே, தாங்கள் சொல்கிறபடியாகும்?

ம: வெறும் அக்ஞானம் குற்றமாகாது. தெரிந்து கொள்ள வேண்டிய கடமையிருக்கும் இடத்தில் அக்ஞானம் தோஷமேயாகும்.

அ: அதெப்படி?

ம: சிறு குழந்தைகளுக்கும், மிருகாதிகளுக்கும் இது ஸரி, இது பிசகு என்ற ஞானம் கிடையாது; அந்த ஞானத்தை ஸம்பாதித்துக்கொள்ள வேண்டிய சக்தியும் கிடையாது; அவர்கள் விஷயத்தில் அக்ஞானம் இருந்தே தீரும்; ஆகையால் அவர்களுக்கு அது தோஷமாகாது. குழந்தை பையனுகி, இது ஸரி, இது பிசகு என்று அறியக்கூடிய சக்தியேற்பட்ட பிறகு, தன்னுடைய கர்மாவுக்கு அவன் பொறுப்புள்ளவனுக ஆகிறுன். பிசகான காரியத்தைச் செய்தால் தோஷமுள்ளவனுக ஆகிறுன்.

அ: வாஸ்தவம். அவனுக்கு அப்பொழுது,.

தான் செய்கிற காரியம் பிசகு என்று தெரிகிறது. அத னால் அவனுக்கு தோஷமேற்படலாம்.

ம: தான் செய்கிற கார்யம் பிசகு என்று அவ னுக்குத் தெரிகிறபடியால் தோஷம் என்று நான் சொல்லவில்லை. பிசகு என்று தெரிந்துகொள்ளக் கூடிய சக்தி ஏற்பட்டிருந்தால் போதும். உங்கள் லௌகிக ராஜ்ய சட்டங்களையே பார்ப்போம். ஒருவன் குற்றம் செய்யும் காலத்தில், அது குற்றமென்று அவ னுக்குத் தெரியாதென்று வியக்தமாய் ஏற்பட்டாலும் கூட, குற்றம் செய்தவனை குற்றவாளியல்லவென்று விட்டு விடுகிறார்களா?

அ: இவை மனிதனால் செய்யப்பட்ட சட்டமாய் இருப்பதால், இதில் ஒருவித கட்டுப்பாடு வைத்துக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. சட்டம் தெரி யாதென்பதும் ஒரு ஸமாதானமாகும் என்று வைத்து விட்டால், எல்லாருமே இதைச்சொல்லவாரம்பிப் பார்கள்; யாரையுமே தண்டிப்பது அஸாத்தியமாகும். ஆகையால் தெரிந்து குற்றம் செய்கிறவனையும், தெரி யாமல் குற்றம் செய்கிறவனையும் ஒரே தரத்தில்தான் வைக்கவேண்டியிருக்கிறது ஆனாலும், ஸாதாரணமாய் தெரியாதவன் விஷயத்தில் தண்டனையை மாத்திரம் கொஞ்சம் குறைப்பதுண்டு. ஈசுவரனால் செய்யப்பட் டிருக்கிற சட்டமாகிய தர்ம விஷயத்தில், இது பாபம், இது புண்யம் என்று தீர்மானிக்கிற அதிகாரத்தை அவரே வஹிக்கிறபடியாலும், அவர் ஸர்வக்ஞரான

படியாலும், இவன் இந்தக் காரியத்தைத் தெரிந்து வேண்டுமென்று செய்தான், இவன் இந்தக் காரியத்தைத் தெரியாமல் அக்ஞானத்தினால் செய்தான், என்று அவருக்கு நன்றாகத் தெரியுமல்லவா ?

ம : தெரியும். அதற்காக அவர் என்ன செய்ய வேண்டுமென்று சொல்கிறீர்கள் ?

அ : தெரிந்து பாபம் செய்கிறவர்களை மாத்திரம் சிக்ஷிக்கவேண்டும். இது பாபம் என்றே தெரியாமல் செய்கிறவர்களைத் தண்டிக்கக்கூடாது.

ம : நெருப்பு சுடும் என்று தெரியாமலே ஒரு குழந்தை நெருப்பைத் தொட்டுவிட்டால், நெருப்பு சுடாதிருக்குமா ?

அ : அசேதனமாயிருக்கிற நெருப்புக்கு இது குழந்தை, இவன் வயதானவன் என்ற அறிவு உண்டா ? அசேதனத்திற்குள்ள நியாயத்தை ஸர்வக்ஞரான ஈசுவரனிடத்தில் உபயோகப் படுத்தலாமா ?

ம : 'நெருப்பு சுடும்' என்பது புதிதாய் ஏற்பட்ட சட்டமல்ல, ஈசுவரனாலேயே ஏற்படுத்தப் பட்டது என்பதை மறந்து பேசுகிறீர்கள்.

அ : ஈசுவரனால் செய்யப்பட்டிருந்த போதிலும், அதை நிறைவேற்றும் பொறுப்பு அசேதனத்தில் அல்லவா இருக்கிறது ?

ம: ஈசுவரன் ஸம்பந்தப்படாமல் தள்ளியிருந்து கொண்டா?

அ: அப்படித்தான் தோன்றுகிறது

ம: அப்படி ஒருநாளும் கிடையாது. ஈசுவரன் எக்காலத்திலும் அவ்விதம் ஒதுங்கவும் முடியாது, தான் அன்னியிலும் இருக்கமுடியாது, தான் தெரிந்து கொள்ளாமலும் இருக்கமுடியாது. குழந்தை சுடப்படும் ஸமயத்திலும் அங்கேயும் தான் இருந்து தன் சட்டத்தைத் தானே நிறைவேற்றுகிறார். அக் குழந்தை முன்னொரு ஜன்மத்தில் பெரியவனாயிருந்த தருணத்தில் ஏதோ ஒரு பாபம் செய்திருப்பான், அதன் பலனை இப்பொழுது சுடுபடவேண்டிய அவசியமேற்பட்டிருக்கிறது.

அ: அசேதன ஸம்பந்தமான சட்டங்களைப் போலவே தர்மமென்ற சட்டமும் ஈசுவரனால் செய்யப்பட்டிருக்கிறபடியால், நிர்தாக்ஷிண்யமாகத்தானிருக்குமென்றால் அக்ஞானம் சரணமாகாது என்பது ஸரியே. ஆனால், ஒரு சிறு குழந்தை தப்பிதம் செய்தால், அதற்குப் பாபம் கிடையாதென்று ஆரம்பத்தில் சொன்னீர்களே? அதெப்படி? தெரியாத்தனத்தினால் தொட்டபோதிலும் நெருப்பு குழந்தையைச் சுட்டே தீருமென்பதுபோல, தெரியாத்தனத்தினால் செய்யப்படும் அதர்மமும் அக்குழந்தையைப் பாதித்துத்தானே தீரவேண்டும்.

ம: பாதிக்கத்தான் பாதிக்கும். ஆகையால்

தான் குழந்தைப் பருவத்திலேயே அதற்கு சக்தி யேற்படும்படியாக, அநேக ஸம்ஸ்காரங்கள் விதிக்கப் பட்டிருக்கின்றன. அந்தக் குழந்தையின் அத்யாத்ம சிரேயஸ்ஸைப் பாதுகாப்பதற்காகவே, பலவிதமான பொறுப்பு பெற்றோர்களுக்குச் சொல்லப்பட்டிருக் கிறது. தானாக ஆஹாரம் எடுத்துக்கொள்ள முடியாமலிருக்கிற குழந்தைக்கு, எப்படி பெற்றோர்கள் ஆஹாரம் கொடுக்கவேண்டுமோ, அதேமாதிரி தன் சிரேயஸ்ஸைத் தானே கவனித்துக்கொள்ள சக்தி யற்றிருக்கிற குழந்தையின் சிரேயஸ்ஸைக் கவனித்துக் கொள்ளவேண்டிய பொறுப்பு பெற்றோர்களைச் சேர்ந்தது. பெற்றோர்கள் லௌகிகப் பொறுப்பை வஹிக்கத்தவறினால், அவர்களுக்குப் பாபம் உண்டு; குழந்தையும் பலஹீனமாயும் வியாதிக்ரஸ்தமாயும் ஆய்விடும். இதுபோல் அத்யாத்ம சிரேயஸ்ஸைப் பெற் றோர்கள் கவனிக்காமலிருந்து விட்டால், அதிலும் பாபம் அவர்களைச்சேரும்; குழந்தைக்கும் க்ஷேமக் குறைவு ஏற்படும். ஆகையால் அதர்மமும் குழந்தை யைப் பாதிக்கவே பாதிக்கும்.

அ: ஆனால், தாங்கள் முன் சொன்னபோது, குழந்தை அக்ஞான தசையிலிருப்பதால், அதற்கு தோஷம் கிடையாது என்று சொன்னீர்களே ?

ம: அப்படிச்சொல்லவில்லை. தெரிந்துகொள்ளச் சக்தியற்றிருப்பதால், பாபம் இல்லையென்று சொன்னேன்.

அ: எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். குழந்தைக்குப் பாபம் இல்லை, ஆனால் துன்பம் மாத்திரம் உண்டு, என்றுதானே ஆகிறது. இதற்கு அர்த்தமென்ன? பாபம் கிடையாதென்றால், அதனால் ஏற்படுகிற துன்பம் மாத்திரம் எப்படியிருக்கலாம்?

ம: வாஸ்தவம். இப்பொழுது ஏற்படும் துன்பம் இப்பொழுது செய்யப்படும் பிசகின் பலன் என்று நான் சொல்லவேயில்லையே? இப்பேர்ப்பட்ட பெற்றோர்களுக்குக் குழந்தையாய்ப் பிறக்கும்படி ஏற்பட்ட மஹத்தான கர்மாவினுடைய அவாந்தர பலன்களில் இந்தத் துன்பமும் ஒன்று. இப்பொழுது பெற்றோர்கள் கவனிக்காமலிருந்தது இந்த துக்கானுபவத்திற்கு ஒரு நிமித்தமே தவிர, முக்யகாரணமல்ல. எப்படி நெருப்புக்கு ஸமீபத்தில் போவது என்பது, சுடுவதற்கு நிமித்தமேதவிர, அத்துக்கத்திற்கு காரணரூபமான கர்மாவாகாதோ, அதேமாதிரி. தெரியாத்தனமாய் நெருப்பைத் தொடுவது காரணம், ஒன்றுமறியாக் குழந்தையின் கை சுட்டுவிடுவது பலன் என்றுவது. பெற்றோர்களின் அஜாக்கிரதை காரணம், யாதுமறியாத குழந்தைக்குவரும் கஷ்டம் பலன், என்றுவது காரணகாரிய ஸம்பந்தத்தை நாம் கற்பித்தோமேயானால், ஈசுவரனுக்கு எது நியாயம், எது நியாயமல்ல என்ற ஞானம் கொஞ்சம்கூட கிடையாதென்றும், வேண்டுமென்றே அவன் குரூரனாகவிருக்கக்கூடியவனென்றும் ஏற்படும்.

அ: வாஸ்தவம். குழந்தைக்கு ஞானமில்லா

தனால், இப்பொழுது செய்யப்படும் கர்மாவினால் ஏற்படும் பாபம் அதனிடத்தில் சம்பந்திக்காது என்றால், முன் ஜன்மங்களில் செய்யப்பட்டிருக்கும் பாபங்களின் பலன்களும் குழந்தைப் பருவத்தில் ஸம்பந்திக்காமலே இருக்கவேண்டியது நியாய மாகாதா?

ம: அது அவசியமில்லை. பாபம் செய்வதற்கு இது ஸரி, இது பிசகு என்று 'பகுத்தறியும் சக்தி' வேண்டும். அந்த சக்தி பிறந்து சில வருஷங்கள் சென்ற பிறகுதான் ஏற்படுகிறது. பாபத்தின் பலனை யனுபவிக்க, அனுபவிக்கிற சக்தி மாத்திரம் போதும். ஸுகதுக்கானுபவ விஷயமான சக்தி குழந்தைக்கு எப்பொழுதுமே உண்டு, கர்ப்பத்திலிருக்கும்போதே உண்டு. அத்துடன் பகுத்தறியக் கூடிய சக்தியும் ஏற்பட்டவுடன், தன் கர்மாக்களுக்குப் பொறுப்பு வஹிக்கும் தன்மையும் ஏற்பட்டுவிடுகிறது. இந்தச் சக்தியை உபயோகிக்காமலே அக்ஞானத்திலிருப்பேன் என்றால் பொறுப்பு நீங்கிவிடாது.

அ: அப்படியானால், தெரியாமல் பிசகு செய்கிற வனுக்கும், தெரிந்து பிசகு செய்கிறவனுக்கும் வித்யாஸமே கிடையாதா?

ம: உண்டு. ஆனால், அவ்வித்யாஸத்தை, தெரிந்து பிசகு செய்கிறவன் கவனிக்கவேண்டியதே தவிர, அதனால் தெரியாமல் பிசகு செய்கிறவனுக்கு எவ்வித அனுகூலமும் கிடையாது. தெரிந்து பிசகு

செய்கிறவனே அதிகக் குற்றவாளி. இதற்காகத் தெரிந்துகொள்ளாமலே இருந்துகொண்டு பிசகு செய்கிறவனுக்கு இது ஸமாதானமும் ஆகாது, இதனால் திருப்தியடையவும் இடமில்லை.

அ: வேண்டுமென்று ஒருவன் தெரிந்து கொள்ளாமலிருப்பானா? வேண்டுமென்று தப்பிதம் செய்வானா?

ம: அப்படி நினைப்பதற்கில்லை. தெரிந்து கொள்ள சக்தி இருந்து, ஞான ஸாதனங்களும் கிட்டக் கூடியதாகவே இருந்து, சொல்லிக் கொடுக்கக்கூடியவர்களும் கிடைக்கக் கூடியவர்களாக இருந்து, ஒருவன் தெரிந்து கொள்ளவில்லையானால், அவன் வேண்டுமென்றே ஞானரஹிதனாயிருக்கிறானென்பதில் என்ன ஸந்தேஹம்?

அ: பொதுவாக இது ஸரியே. தர்ம விஷயம் இவ்வளவு ஸுலபமாய் அறியக்கூடியதா?

ம: ஏன் இல்லை? தீர்க்க தர்சிகளும் மஹரிஷிகளும் இருந்துவந்த பரம்பரையில் ஜன்மமெடுத்திருப்பதால், அதிஸூக்ஷ்மமான விஷயங்களைக்கூட கிரஹிக்க யோக்கியதை பெற்று, உங்கள் புத்தி இன்னும் தீக்ஷ்ணமாக இருந்து வருகிறது. மேலும், உங்கள் பெற்றோர்கள் உங்களுக்கு உபநயனாதி ஸம்ஸ்காரங்களைச் செய்து வைக்கிறார்கள். பல விதமாகத் தர்மத்தைப் போதிக்கக்கூடிய கணக்கிலடங்காத கிரந்தங்கள் இன்னமும் பிரசாரத்தில் இருக்கின்றன. நீங்கள்

வாயைத் திறந்து கேட்டால், உடனே சொல்லிக் கொடுக்கக்கூடிய யோக்கியதை பெற்ற அநேகம் வித்வான்கள் இன்னமும் ஜீவித்தமாயிருக்கிறார்கள். இவ்வளவெல்லாம் இருக்கும்போது, நான் தெரிந்து கொள்ளாமலே இருப்பேன் என்றால் இது யாருடைய குற்றம்?

## 2 சாகூவதமான சங்கம்.

அ: தர்ம விஷயமாக கற்றுக்கொள்ளவேண்டுமென்ற கடமையை மாத்திரம் கவனித்தால், தாங்கள் சொல்வது வாஸ்தவமே. அதேமாதிரி, தெரிந்தவர்களுக்கும் தங்களுக்குத் தெரிந்ததை மற்றவர்களுக்கு சொல்லிக்கொடுக்க வேண்டுமென்ற கடமை கிடையாதா?

ம: அவசியமில்லை. தனக்குத் தெரியவில்லையே என்று உணர்ந்து, தெரிந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் கேட்கிறவர்களுக்கு மாத்திரம்தான், தெரிந்தவர்கள் சொல்லிக்கொடுக்கக் கடமைப்பட்டவர்கள். அக்ஞானமே நல்லதென்று நினைத்துக் கொண்டிருக்கிறவர்களுடைய அக்ஞானத்தைப் போக்கப் பிரயத்தனம் செய்யாதது, தெரிந்தவர்களின் குற்றமேயாகாது.

அ: அக்ஞானமே நல்லதென்று எல்லாரும் இருக்கமாட்டார்கள். தெரிந்து கொள்ளவேண்டிய விஷயங்கள் பல இருக்கின்றனவென்றே தெரியாமல் அநேகம் பேர்கள் இருக்கிறார்கள். உதாஹரணமாக,

அக்னிஹோத்ரம் என்றால் என்ன, ஸோம யாகம் என்றால் என்ன, என்று எத்தனைபேர் தெரிந்து கொண்டிருக்கிறார்கள்? இந்தப்பெயர்களையே காதால் கூட கேட்காதவர்களும் அநேகர் இருக்கிறார்கள். பிராஹ்மணர்களால் அவசியம் செய்யப்பட வேண்டியதாய் இம்மாதிரி கர்மாக்கள் உண்டு என்பதையாவது போதிக்கவேண்டியது வைதிகர் களின் கடமையில்லையா?

ஆ: நாம் பிராஹ்மண ஜாதியில் பிறந்திருக் கிறோமே, நமக்கு ஏற்பட்டிருக்கிற கர்மாக்கள் எவை என்று தெரிந்துகொள்ள, எப்பொழுதாவது இவர்கள் அக்கறைப்பட்டிருப்பது உண்டா? தாங்களும் பிராஹ் மணர்கள் என்று மாத்திரம் சொல்லிக்கொண்டு, தங்கள் பிராஹ்மண தர்மம் என்னவென்று, வேறு பிராஹ்மணர்கள் தங்களுக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டுமென்றல்லவா இவர்கள் எதிர்பார்க்கிறார்கள்! தெரிந்துகொள்ள கொஞ்சமேனும் பிரயத்தினம் செய்யாமலிருந்துகொண்டு, இவ்விதம் எதிர்பார்ப்பது என்ன நியாயம்? அக்னிஹோத்ரம் முதலிய விசேஷ கர்மாக்களைத் தூர வையுங்கள். வெறும் மூடனுக்குக் கூட, பொய் சொன்னால் பாபம் என்று தெரியு மல்லவா? இதையும் சொல்லிக்கொடுக்க ஒரு ஆசார்யர் வேண்டுமா?

அ: வேண்டாம்.

ஆ: பொய் சொல்வது பாபம் என்று தெரிந்து

கொண்டிருக்கிறவர்கள் யாரும் பொய் சொல்லாமல் இருக்கிறார்களா ?

அ: அவ்விதமில்லைதான்.

ம: பொய்சொல்வது பாபம் என்று தெரிந்திருந்தும், ஜனங்கள் பொய் சொல்லிக்கொண்டே யிருக்கிறார்களல்லவா ?

அ; ஆம். அநேகம்பேர் அப்படித்தானிருக்கிறார்கள்.

ம; அவர்கள் பொய் சொல்வதற்குக் காரணம், பொய் சொல்வது பாபமென்று அவர்களுக்கு எடுத்துச் சொல்ல மனுஷ்யர்கள் இல்லை யென்பதில்லை; ஏனென்றால் இவ்விஷயம் அவர்களுக்கே தெரிந்ததுதான்.

அ; வாஸ்தவம்.

ம: இவ்விதம், தான் செய்கிறது பாபம் என்று தெரிந்திருந்தும், மனப்பூர்வமாய் அப்பாபத்தைச் செய்யத்துணிந்திருக்கும் ஜனங்களுக்கு, 'அவர்கள் செய்யும் இன்னும் அநேக காரியங்களும் பாபமே' என்று மற்றவர்கள் சொல்லிக்கொடுக்கவில்லை யென்கிறீர்கள். இதையும் சொல்லிக்கொடுத்துவிட்டதற்காக, அவர்கள் தங்கள் நடவடிக்கைகளை மாற்றிக் கொள்ளப்போகிறதில்லை. இப்பொழுது தெரியாமல் பாபம் செய்கிறார்கள்; அப்புறம் தெரிந்து பாபம் செய்வார்கள். இதுதான் வித்யாஸம்.

அ: ஆகையால், அவர்கள் தெரிந்துகொள்ளாமலிருப்பதே க்ஷேமம் என்று கருதுகிறீர்கள் ?

ம: அப்படியல்ல. முன்சொன்னபடி, தெரிந்து கொள்ள வேண்டிய கடமை அவர்களையே சேர்ந்தது. வேறு யாரோ சொல்லிக்கொடுக்கவில்லை; அதனால் நான் தெரிந்து கொள்ளவில்லை, என்ற ஸமாதானத்திற்கு இடமில்லை.

அ: எப்படியும், இத்தேசத்தில் இப்பொழுது தர்ம விஷயமாயுள்ள அக்ஞானத்தைப் போக்கடிக்கத் தக்க ஏற்பாட்டுடன் பிரசாரம் செய்யவேண்டியது அவசியமென்றே தோன்றுகிறது.

ம: ஏற்பாடான பிரசாரம் என்றால் என்ன?

அ: மதவிஷயமான அறிவு பரவுவதற்காக ஒரு ஸங்கம் ஏற்படுத்தியும், எல்லா முக்கியமான நகரங்களிலும் கிராமங்களிலும் வேலை செய்யக்கூடிய கிளை ஸ்தாபனங்களை ஏற்படுத்தியும், அங்கங்கே வேலை செய்வதற்குத்தக்க மனிதர்களை நியமித்தும் பிரசாரம் செய்யலாம்.

ம: மேற்பார்வைக்கு ஒரு நிர்வாஹ ஸபை, அங்கத்தினர் செலுத்தவேண்டிய சந்தா விபரம், அவர்களுக்குள் அபிப்பிராயபேதம் வந்தால் தீர்மானிக்கிற வழி, அபிப்பிராயம் கொடுக்கிறவர்களின் எண்ணிக்கையைக் கணக்கிட்டு ஒரு தீர்மானத்திற்கு வருதல், முதலான அம்சங்கள் எல்லாம் இருக்கத்தானே வேண்டும்?

அ: ஸங்கம் என்றால் எல்லா அம்சங்களும் வேண்டியதுதான்?

ம: ஸங்கத்தில் புதிதாகச் சேர விரும்புகிறவர்களைச் சேர்க்கவா, வேண்டாமா என்ற அதிகாரம் ஸங்கத்தைத் தொடங்கிய மனுஷியர்களைச் சேர்ந்தது. ஸங்கத்தையே நடத்தி வைக்க யோக்கியதை பெற்றவராயிருந்தாலும், சந்தாத் தொகை கொடுக்க சக்தியற்றிருந்தால், அவரை ஸங்கத்தில் சேர்த்துக்கொள்ள முடியாதென்றும் வருமல்லவா?

அ: அவ்வித யோக்யதை பெற்றவர்களுக்குச் சந்தா இல்லையென்று வைத்துவிடலாம்.

ம: வைக்கலாம். ஆனாலும், அவர்கள் ஸங்கத்தில் சேருவது இதரர்களின் அனுமதியின் பேரிலேயேயொழிய, தங்களுடைய யோக்கியதையை மாத்திரம் பொறுத்ததல்ல.

அ: அது அப்படித்தான்.

ம: இது இப்படியிருக்கட்டும். யோக்கியதையுள்ளவர்கள், மற்றது எதையும் எதிர்பாராமல் தன் யோக்கியதாபலத்தினாலேயே ஏற்கனவே அங்கத்தினராயிருப்பவர்களின் அனுமதியை அபேக்ஷிக்காமலே அங்கத்தினராகக்கூடியதாயும், சங்கத்தில் பிரவேசம் யோக்கியதையைப் பொறுத்ததே தவிர, பிரவேசக் கட்டணத்தைப் பொறுத்திராமலும், யாரும் சந்தாத் தொகை செலுத்தவேண்டிய அவசியமில்லாமலும், எந்தக் காரியமும் ஸரி அல்லது தப்பு என்பது தர்மம் என்ற ஓரே கலப்பற்ற மாற்றத்தக்க நிலையிலிருந்தே தீர்மானிக்கப்படுமேயொழிய, அந்தந்தகாலத்திலுள்ள

அங்கத்தினர்கள் எவ்வளவு நல்ல எண்ணத்துடனிருந்தாலும் மாறக்கூடியதான அவர்களுடைய மனோபாவங்களைக் கணக்கிட்டு எண்ணிக்கை ஜாஸ்தியைக் கொண்டு தீர்மானிக்கப்படாமலும், எக்காரணத்தைக் கொண்டும் யாராலும் உலைக்கவோ, அழித்துவிடவோ முடியாமலும், ஒரு ஸங்கம் இருக்குமேயானல், அந்த ஸங்கம் நீங்கள் சொல்லும் ஸங்கத்தைவிட ஸ்வாபாவிகமாயும், ஸ்தாயியாயும், உபயோகமுள்ளதாயும், நடக்கக்கூடியதாயும் இருக்குமல்லவா?

அ: இருக்கும். ஆனல், அப்படி ஒரு ஸங்கத்தை மனதில் கற்பித்துக்கொள்ளலாமே தவிர, காரியத்தில் காண முடியுமா?

ம: திவ்யமாய் முடியும். நம் பிராஹ்மண ஸமூஹம் என்பது நான் சொல்லிவந்த ஸங்க லக்ஷணம் பொருந்தியதல்லவா? வாஸ்தவத்தில், நம் தேசத்திலுள்ள ஒவ்வொரு ஜாதி ஸமூஹமும் இவ்விதமாய்த் தங்கள் தங்கள் காரியங்களைப் பாதுகாத்துக் கொள்ளக்கூடிய அடக்கமான ஸங்கமேயாகும். இந்த ஜாதி ஸமூஹங்களையெல்லாம் தனக்கு அம்சங்களாக அல்லது கிளைகளாக உடைய பெரிய ஸங்கமே ஹிந்துக்களின் ஜாதி வியவஸ்தையாகும். இந்த ஸங்கங்களில் பிரவேசிப்பது யாரோ ஒருவனுடைய அபிப்பிராயத்தைப் பொருத்ததல்ல. முன் ஜன்மங்களில் ஸம்பாதிக்கப்பட்ட யோக்யதைகளுக்குத் தக்கபடி, அந்தந்த ஸமூஹத்தில் ஜனனம் கொடுத்து, ஸர்வக்ஞ

ஞன ஈசுவரனே ஸமூஹத்தில் பிரவேசம் செய்துவைக்கும் பொறுப்பை வஹிக்கிறார். ஸங்கத்திற்குள்ள சட்டதிட்டங்கள் ஏற்கனவே அனுதினித்தமாக ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில் ஸந்தேஹிப்பதற்கோ, மாற்றுவதற்கோ, கொஞ்சமேனும் இடமில்லை. மனிதனால் கற்பிக்கப்பட்ட நவீன ஸங்கங்களிலல்லவா சட்டதிட்டங்கள் பிரதி நிமிஷமும் மாறிக்கொண்டேயிருக்கும்?

அ: உதாஹரணமாக, நம் பிராஹ்மண ஸமூஹத்தையே எடுத்துப் பார்த்தாலும், தாங்கள் சொல்கிறபடி அதையும் ஒரு ஸங்கம் என்று பாவித்தால், கட்டுப்பாடுள்ள ஸங்கம் செய்ய வேண்டிய பொதுக்காரியங்களைக் கொண்டு செலுத்த அது சக்தியற்று நிற்கிறதே, அதற்கு என்ன காரணம்?

ம: உங்கள் நவீன ஸங்கங்களையே கவனிப்போம். அதிலுள்ள அங்கத்தினர் தன் ஸ்வய நலத்தை மாத்திரம் கருதி, அதற்கே பிராதான்யம் கொடுத்து, அதற்கு விரோதமாய் ஸங்க விதிகள் இருந்தாலும், இருப்பதாய்த் தோன்றினலும் அவைகளை மீறி நடக்க ஸித்தமாய் இருந்தால், எந்த ஸங்கம்தான் எவ்விதப் பிரயோஜனமுள்ள காரியத்தை ஸாதிக்கமுடியும்?

அ: முடியாதுதான். இப்படி அங்கத்தினர் ஆரம்பித்துவிட்டால் ஸங்கமே அதிசீக்கிரத்தில் இல்லாமல் போய்விடும்.

ம: வாஸ்தவம். அதேமாதிரி ஒவ்வொரு பிராஹ்மணரும், பொதுவாக ஒவ்வொரு மனிதனும் தன் தன் சொந்த மனோபாவங்களையும் நோக்கங்களையும் உள்ளடக்கிக் கொண்டு பிராஹ்மணர் அல்லது வேறு ஸமூஹத்தார் என்ற முறையில் தனக்குள்ள கடமைகளைச் செலுத்த வேண்டுமென்று உணர்ந்தால்தான் ஸமூஹத்திற்கு உபயோகப்படுவார்கள். ஆகையால் நம் தேசம் தக்காலம் சிரமப்படுவது கட்டுப்பாடுள்ள ஸங்கங்கள் இல்லாததினால் அல்ல. நம் ஸங்கத்தைவிட சிலாக்கியமான ஸங்கம் ஒன்றை மனதினால்கூட கற்பிக்க முடியாது. அதன் விதிகளின்படி நடக்கத் தயாராயிருக்கிற அங்கத்தினர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. அவ்வங்கத்தினர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்த பிரயத்தினம் செய்யுங்கள். ஸமூஹம் வரவர பலப்படும், யாராலும், தாக்க முடியாமலிருக்கும். உங்கள் பிரயத்தினமெல்லாம் இவ்வழியில் செல்லவேண்டும். புதிதாக நிலையற்ற ஸங்கங்களை ஏற்படுத்த அவசியமுமில்லை; உங்கள் உத்தேசத்தை அவை நிறைவேற்றிக் கொடுக்கவும் பிரயோஜனப்படா.

## 3. வைசிகர் கடமை

அ: இதற்காவது, கொஞ்சம் பிரசாரம் செய்ய வேண்டியது அவசியமில்லையா.

ம: அப்படித் தோன்றினால், செய்யுங்கள்.

அ: நான் பிரசாரம் செய்வதால் என்ன பிரயோஜனம்? தாங்கள் பிரவிருத்தித்தால்தான் காரியம் ஸித்தியாகும்.

ம: அப்படியல்ல; மாற்றிச் சொல்கிறீர்கள். இதுமாதிரி பிரவிருத்திகளை வைதிகர்கள் செய்ய ஆரம்பித்தால் 'இவர்கள் வைதிக விருத்தியைக்கொண்டு பிழைப்பவர்கள். இவர்களுக்கு காலக்ஷேபம் நடக்க வேண்டியதற்காக, நம்மை மதப்பற்று உள்ளவர்களாக்க உத்தேசிக்கிறார்கள். ஆகையால் நமக்கு மதப் பற்றிருக்க வேண்டுமென்று இவர்கள் நினைப்பது அவர்களுடைய ஸ்வயநலத்தைக் கருதியே" என்று நீங்களே சொல்லவாரம்பித்து, அவர்களுடைய வார்த்தைக்கு மதிப்புக் கொடுக்காமல் உதாஸீனம் செய்து விடுவீர்கள். அதே காரியத்தை நான் செய்ய ஆரம்பித்தால், "இவர் ஆசார்ய ஸ்தானம் வஹிக்கிறபடியால், நம்மை மதப்பற்றுள்ளவர்களாக இருக்கச் சொல்லவேண்டியது இவருடைய கடமையைச் சேர்ந்தது. அதனால் தன் ஸ்தான மரியாதைக்காக பேருக்குச் சொல்கிறார்" என்று நினைத்து மறந்துவிடுவீர்கள். இப்படிக்கன்னியில், உங்களைப்போன்ற ஒரு சுத்த லௌகிகப் பிரபு உங்களிடம் வந்து 'தர்மானுஷ்டானம் செய்யுங்கள்' என்று சொன்னால் "எனக்கு மதப் பற்று இருக்கவேண்டுமென்று சொல்கிற இவருக்கு, நான் மதப்பற்றுள்ளவனாக யிருப்பதினால் ஒருவித லாபத்தையும் காணவில்லை. இவருக்கு லௌகிகமாக எவ்விதக் குறைவுமில்லை. நான் மதப்பற்றுடனிருந்

தால், இவருக்குப் பிழைப்பு என்பதுமில்லை. நல்ல அந்தஸ்திலிருக்கிறார், நவீன வாசிப்பும் நன்கு பெற்றிருக்கிறார். தீக்ஷ்ணமான புத்தியும் வாய்ந்தவர். என்னை மதப்பற்றுள்ளவனாக ஆக்குவதில், இவருக்கு எவ்வித ஸ்வயநல உத்தேசமும் இருக்க இடமில்லை. அனாவசியமாய் வார்த்தை செலவழிக்கக் கூடியவருமில்லை. தன் நலம் கருதாத இவர் சொல்லும் உபதேசத்தில் ஏதோ தத்வம் இருக்கவேண்டும்'' என்று மனதில்பட்டு, காதுகொடுத்துக் கேட்டு, அதன்படி நடக்கவும் ஸித்தமாவீர்கள். நடக்கவேண்டிய கிரமத்தை யோசித்தால், பிரசாரம் அவசியமென்றிருந்து, அது உபயோகப்படவும் வேண்டுமானால், தங்களைப் போலுள்ளவர்கள் தான் பிரவிருத்திப்பது அவசியமாகும்.

அ: தாங்கள் சொல்வதின் தாத்பர்யத்தைத் தெரிந்துகொண்டேன். இருந்தாலும், நாங்கள் செய்யும் பிரவிருத்திக்குக்கூட, தங்கள் ஆதரவு இருப்பதாகத் தெரிந்தால், ஜனங்களுக்கு மதிப்பிருக்குமென்றே தோன்றுகிறது.

ஸ: ஸாக்ஷாத்தாக ஈசுவரனே தன் ஆக்ஞைகளை அழிவற்ற வேத ரூபமாக வெளியிட்டிருந்தும், அவர் சொல்லியபடி கேட்க ஜனங்கள் தயாராயில்லை. ஜனங்களின் ஸரியான நடத்தையை உத்தேசித்தே, பிராசீன மஹரிஷிகள் ஸ்மிருதிகளை ஏற்படுத்திக் கொடுத்தும் கூட, அவைகளையும் ஜனங்கள் மீறியே நடக்கிறார்கள். இப்படியிருக்க, என் பெயரையும் சேர்த்துச் சொன்ன

தற்காக மாத்திரம், ஜனங்கள் அவ்வாக்ஞைகளின்படி நடப்பார்களென்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

அ: ஈசுவரனையும் மஹரிஷிகளையும் தத்காலத்தில் யாரும் நேரில் பார்க்க முடியாது. ஜனங்களின் விசுவாசத்திற்கு ஆஸ்பதமாயிருக்கிற தாங்களோ பிரத்யக்ஷ தைவமாயிருக்கிறீர்கள். ஆகையால் புஸ்தகங்களில் காணப்படும் வைதிக தர்மங்களைவிட தாங்கள் சொல்லும் வார்த்தைக்கே அதிக கவனம் கொடுப்பார்கள்.

ம: அப்படியேயிருக்கட்டும். இனி நீங்கள் எங்கபோனாலும் ஜனங்களிடத்தில் "ஈசுவராக்ஞாரூபமான வேதங்கள் உங்களுக்கு இவ்விதம் கட்டளையிடுகின்றன. அந்த கட்டளைகளை மஹரிஷிகளின் ஸ்மிருதிகளும் எடுத்துக்கூறுகின்றன. அதை ஸரியாய் நடத்தி அதன் பலனையடையுங்கள். அப்படியே செய்யும்படி ஆசார்யரும் சொல்கிறார்கள்" என்று சொல்லுங்கள். சுருதி ஸ்மிருதிகளின் பிராமாண்யத்தை நான் எடுத்துச் சொல்லவில்லையென்ற காரணத்திற்காக, ஜனங்கள் அதர்மத்தில் உழலவேண்டாம். சுருதி ஸ்மிருதிகளில் சொல்லிய விஷயங்களையே, அதைப் பின்பற்றி நானும் எடுத்து உபதேசிக்கிறேன். அவைகளில் சொல்லியபடி நடக்கவேண்டியதே கடமையென்று நானும் சொல்கிறேன், என்று தாராளமாய்ச் சொல்லுங்கள். என் ஆக்ஞைக்கு ஏதோ விசேஷ மஹிமையிருப்பதாகக் கருதுகிறீர்களே.

அ: இது போதுமா? தர்மப்பிரசாரத்தைத் தாங்களே முன் நின்று நடத்தினால்தான் நன்றாக இருக்கும்.

ம: நான் முன்னமேயே சொல்லியிருக்கிறேன். இந்தக் காரியம் அதர்மம் என்று தெரிந்திருந்தும்கூட, அந்த அதர்ம காரியத்தைச் செய்துவரும் ஜனங்களிடம் என்ன பிரசாரம்தான் பலிக்கப்போகிறது? அந்தப்பிரசாரத்திற்கும் பலன் ஏற்படலாமென்று வைத்துக்கொண்டாலும், நல்ல அந்தஸ்து வஹிக்கிற உங்களைப்போலுள்ள லௌகிகர்கள்தான் முன்வர வேண்டும். மதமே இவர்களுக்கு விருத்தியென்று நினைக்கப்படுகிற எங்களால் பிரயோஜனமேற்படாது. மேலும், இது விஷயமாக விசேஷப்பொறுப்பை என்னிடம் ஏற்ற நினைக்கிறீர்களே, என்ன காரணமென்று தெரியவில்லை. இதற்குமுன் அதர்மப்பிரசாரம் ஒன்றும் நான் செய்ததாகத் தெரியவில்லையே; அப்படி ஏதேனும் செய்திருந்தால், என்னால் உண்டான கெடுதலைச் சீர்திருத்த வேண்டிய பொறுப்பு எனக்கு ஏற்படலாம். வாஸ்தவத்தில், உங்களைப்போலுள்ளவர்கள்தான், ஜனங்களுக்கு லௌகிக ஸம்பத்தில் மோஹத்தை யுண்டுபண்ணி, ஸன்மார்க்கத்திலிருந்து நழுவச் செய்திருக்கிறார்கள். தர்மத்தின் பெருமையை இப்பொழுது அறிந்துள்ள நீங்கள்தான், மறுபடியும் அவர்களை ஸரியான மார்க்கத்தில் கொண்டுவர வேண்டும். ஆகையால், விசேஷப் பொறுப்பு உங்களுக்குத்தானிருக்கிறது. ஸாமான்ய ஜனங்கள்

தேசத்தில் சிரேஷ்டர்களாக உங்களைத்தான் எண்ணு கிறார்கள். கீதையில் பகவான் சொல்லியபடி சிரேஷ்டன் எதைதை அனுஷ்டிப்பானோ, அதையே மற்றவர்களும் கைக்கொள்வார்கள்.

அ: ரொம்பவும் வாஸ்தவமே. பகவான் சொன்ன அர்த்தத்தில், நான் சிரேஷ்டன் என்று சொல்லிக்கொள்ள எனக்கு எவ்வித யோக்கியதையு மில்லையென்பதை நன்கு உணர்வேன். இருந்தாலும், பால்யத்தில் புண்ட்ரதாரணம், ஸந்த்யா வந்தனம் முதலான காரியங்களில் நான் அவ்வளவு கவனமில் லாதபொழுது, என் கீழ் வேலை செய்துவந்த குமாஸ் தாக்களும், இவ்விஷயங்களில் கொஞ்சம் கொஞ்சமாக சிரத்தைக் குறைவைக் காட்டி வந்தார்கள். இப் பொழுது, வெளி வேஷத்திலாவது நான் கொஞ்சம் வைதிகன் மாதிரித் தோன்றும் காலத்தில், அவர்கள் தங்கள் வீட்டில் எப்படியிருந்தபோதிலும், என் முன் வரும்போதாவது பிரகாசமாய் நெற்றிக்கு இட்டுக் கொண்டு வருகிறார்கள். என்னைப்போல் நடந்தால், என்னைத் திருப்தி செய்யலாமென்பது அவர்களின் எண்ணம் போலும்.

ம: அவர்கள் உத்தேசம் எப்படி வேண்டுமானு லும் இருக்கட்டும். நீங்கள் மத சிரத்தையுடனிருந் தால், கிருஹத்திலோ, உத்தியோக முறையிலோ உங் களைப் பெரியவர் என்று நினைப்பவர் யாவரும், தாங் களும் மத சிரத்தையுடனிருக்க ஆரம்பிப்பார்கள்.

அ: வாஸ்தவம்

ம: மத சிரத்தையுடன் நீங்கள் இருந்து வந்தால் நீங்கள் உங்கள் சிரேயஸ்ஸை ஸம்பாதித்துக் கொள்கிறீர்கள் என்பது மாத்திரமல்லாமல், மற்றவர்களுக்கு ஒரு நிதர்சனமாயிருந்துகொண்டு, அவர்களும் சிரேயஸ்ஸையடைய நீங்களே காரணமாகிறீர்கள்.

அ: வாஸ்தவம்.

ம: இவ்விதமாக, நீங்கள் மத சிரத்தையுடனிருப்பதில் இரண்டுவிதப் பிரயோஜனம் கிடைக்கிறது. சிரத்தையுடனிருப்பதால் ஸாக்ஷாத்தாக உங்களுக்கு அனுகூலம், மற்றவர்களை சிரத்தையுடனிருக்கச் செய்வதால் ஏற்படும் புண்யம், ஆக இரண்டும் கிடைக்கிறது.

அ: வாஸ்தவம்.

ம: மாற்றிக் கவனிப்போம். இதேமாதிரி, நீங்கள் மத சிரத்தையில்லாமலிருந்தால் உங்களுக்கு இரண்டுவித நஷ்டம். மத சிரத்தையற்றிருப்பதால், ஸாக்ஷாத்தாக உங்களுக்கு ஏற்படுகிற தோஷம்; உங்களை நிதர்சனமாக வைத்துக்கொண்டு இதரர்கள் மதப்பற்றற்றிருக்கும்படி செய்த பாபம், ஆக இரண்டும் ஏற்படும்.

அ: உண்மையே.

ம: ஸாமான்ய ஜனங்கள் தாங்கள் செய்கிற கர்மாக்களின் பலன்களை மாத்திரம் அடைவார்கள்.

இதரர்களுடைய நடத்தையை மாறுபடுத்தக்கூடிய பெரிய அந்தஸ்திலுள்ளவர்களுக்கு இரட்டிப்புப் பொறுப்பு உண்டு. அவர்கள் தங்களுக்கு மாத்திரம் ஜவாப்தாரியென்றிராமல், மற்றவர்களுக்கும் பொறுப்பாளியாகிறார்கள். தர்ம மார்க்கத்தில் இருந்தால் எப்படிப் புண்யம் ஜாஸ்தியோ, அப்படியே அதர்ம வழியிலிருந்தால் பாபம் ஜாஸ்தியே. இவ்விருவிதப் பொறுப்பையும் உங்களைப்போலுள்ளவர்கள் நன்கு உணர்ந்தார்களேயானால், தர்ம விஷயமான அஞ்ஞானத்திலிருந்து அஞ்சி, அந்த க்ஷணம் முதற் கொண்டே ஞானஸம்பாதனத்திற்காக பிரயத்தினம் செய்து, தங்கள் நடத்தையினாலும் உபதேசத்தினாலும் மற்றவர்களை நன்னடத்தையில் நிறுத்த உதவுவார்கள். அப்புறம் தர்மப் பிரசாரத்தைப்பற்றித் தனியாக விசாரப்பட அவசியமேயிராது. இவ்விதமாக, நம் தேசத்தின் க்ஷேமமே வாஸ்தவத்தில் உங்களைப் போலுள்ளவர்கள் கையில்தானிருக்கிறது. இதை நன்கு அறியுங்கள். நன்கு உணர்ந்ீர்களேயானால், அப்புறம் கவலைக்குக் காரணமே கிடையாது.



அத்யாயம் 9

# கடவுளின் உபயோகம்

## 1. ஜகத் காரண வஸ்து

நவீன வித்யாப்பியாஸத்தின் நிதர்சன பூதரா யிருந்த ஒரு தனிகர், எப்படியோ ஸ்ரீ மஹா ஸ்வாமிக ளவர்களின் ஸன்னிதிக்கு பாக்யவசத்தால் இழுக்கப் பட்டு வந்துசேர்ந்தார். அப்பொழுது நடந்த ஸம்பா ஷணையில்:—

ம: உங்களுக்கு ஸாவகாசம் ஜாஸ்தி இருப்பதா கத் தெரிகிறது. அதை எப்படி உபயோகிக்கிறீர்கள்?

த: "நான்" உபயோகிக்கிறேனென்று சொல் வதற்கில்லை. அதுவாகவே போகிறது.

ம: பொழுது போகவில்லையே யென்று குறை சொல்லிக்கொண்டிருக்கிறவர்களின் ஜாபிதாவில் நீங் கள் சேரவில்லையென்று தெரிகிறது.

த: இல்லைதான்.

ம: மிகவும் ஸந்தோஷம். நம் ஆயுஸ்ஸில் ஒவ் வொரு க்ஷணமும் எவ்வளவு விலையுயர்ந்ததென்று நாம் அறிந்துகொண்டால், பொழுது போகிறதே, அதுவும் அதிசீக்கிரமாய்ப் போய்விடுகிறதே, என்று தான் வாஸ்தவமாகக் குறை சொல்லிக்கொள்ள வேண்டும்.

ந: பொழுது போகிற விஷயத்திலும் நான் கவலைப்படுகிறதில்லை.

ம: பொழுதை வீணுக்குகிறவர்கள் தான் பொழுது போகிறதேயென்று விசாரப்படுவார்கள். நன்றாகவே தன் காலத்தை செலவழிக்கிறவர்கள் இப்படி விசாரப்படமாட்டார்கள். நீங்கள் இந்த ஜாப்தாவில் சேர்ந்தவர்கள் போலும்.

ந: அதுவுமல்ல. காலம் போகவேண்டுமென்பது மாத்திரம் எனக்குத் தெரியும். நன்றாகவோ, நல்லதன்னியிலோ, எப்படிச் செலவழித்தாலும் காலம் போயே தீரும். தவிரவும் எப்படிச் செலவழித்தால் நல்லது, எப்படியானால் நல்லதல்ல, என்று சொல்வதற்கு யாதொரு பிரமாணமும் தெரியவில்லை,

ம: வாஸ்தவம். ஆனாலும் நம்முடைய மனோநிலையையாவது, மற்றொருவருடைய மனோநிலையையாவது விகாரப்படுத்தாமலிருக்கும் வழியில், எப்படியோ காலத்தைச் செலவழித்தால் மனது அமைதியாயிருக்கிறதல்லவா?

ந: மனது கலக்கமற்று அமைதியை யடைவது தூக்கத்தில் தான் முடியும்.

ம: வாஸ்தவம். ஆனால், எப்பொழுதும் தூங்கிக் கொண்டிருக்க முடியவில்லையே? விழித்துக்கொண்டு இருக்கும் போதும் அமைதியை வேண்டுகிறோமல்லவா? மனதில் ஒருவித விருத்தியும் தோன்றுமல்

சூன்யமாக உட்கார்ந்திருக்க முடியாது. மனதிற்கு ஏதாவது ஒரு வேலை கொடுத்தாகவேண்டும். நம் மனதின் சாந்தியைக் கெடுக்கக்கூடியதான பொய்யாகவோ, நிஜமாகவோ உள்ள விஷயங்களைப்பற்றி யாவது, நம்மை ஸம்பந்தப்படுத்தி, நம்மிடத்தில் காமக்ரோதாதிகளைக் கிளப்பிவிடக்கூடிய விஷயங்களைப்பற்றியாவது சிந்திப்பதைவிட, ஜகத்தின் உத்பத்திமுதலான தத்வவிஷயங்களைச் சிந்தித்தால் கெடுதலுக்கே இடமில்லையல்லவா ?

ந: அதெல்லாம் வேறும் ஆகாசப்பந்தல்தானே.

ம: இருக்கட்டுமே. அதனால் என்ன? அதனால் யாருக்கும் பாதகமில்லை, உங்கள் மனதிற்கும் பாதகமில்லாமல் ஒரு வேலை கிடைக்கிறது. அதனால் அநுகூலம்கூட உண்டு என்று என்னைப்போல் சிலர்கள் நினைக்கிறார்கள். நாங்கள் நினைப்பது சரியா, இல்லையா வென்பது பிரகிருதமில்லை. இவ்வித ஆலோசனையில் கெடுதல் உண்டென்று நீங்கள் சொல்லமுடியாது.

ந: அப்படியே யிருந்தாலும், இதனால் என்ன பிரயோஜனம்?

ம: பொழுதுபோக்கவே ஸாதனமாகிறது. இதற்குமேல் என்ன பிரயோஜனம் உங்களுக்கு வேண்டும்? நாங்கள் சொல்லுகிறபடி வேறு பிரயோஜனமும் இருந்தால் நல்லதுதான். இல்லையானாலும், உங்களுக்கு நஷ்டமில்லை. ஆகையால் சிறிது காலத்

தையாவது தத்வ விசாரத்திலும், அது ஸம்பந்தமான விஷயங்களிலும், பொழுதுபோக்கும் நோக்கத்துட னுவது செலவழிக்கக்கூடாதா ?

ந: சில புஸ்தகங்கள் வாசித்திருக்கிறேன். ஆனால் அவை எல்லாம் வெறும் சப்தஜாலமாகவே யிருக்கின்றன.

ம: புஸ்தகங்களில் வேறு என்ன இருக்க முடி யும்? உங்கள் சொந்த ஆலோசனையையும் அவை களுடன் சேர்த்துக்கொள்ள வேண்டும். இந்த விஷய மாக சில கிரந்தங்களைப் பார்த்திருப்பதாக நீங்கள் சொல்வதினால், ஜகத்தின் உத்பத்தி, ஈசுவரனின் உண்மை முதலான விஷயங்கள் ஸம்பந்தமாய் உங் களுக்கு ஒருவிதமான மனோபாவம் ஏற்பட்டிருக்க வேண்டுமே?

ந: இப்படித்தான் என்ற நிச்சயமான மனோ பாவம் புஸ்தகங்களிலிருந்து ஏற்படுகிறதில்லை. ஒவ் வொரு கிரந்த கர்த்தாவும் ஒவ்வொருவிதமாகப் புத்தி யைச் செலுத்திப்பார்க்கிறார். மற்றவர்களின் வழியை விட, தன் வழியே உயர்ந்ததென்று காட்ட முயலு கிறார்கள். மேலும், வஸ்துஸ்திதியில், இதுபோன்ற விஷயங்களில் குறிப்பாக இப்படித்தான் தத்வம் என்று ஏற்படவே முடியாது. ஸந்தேஹத்திற்கிட மில்லாமலிருக்கும்பொருட்டு, ஒரு கிரந்தகர்த்தா எவ் வளவோ சிரமப்பட்டு நிர்வசனம்செய்தாலும், அதுவே முடிவான தீர்மானமென்று சொல்லிவிட முடியாது. அவரைவிட புத்திசாலியாக இன்னொருவர் கிளம்பி,

இதை ஆதாரமற்றதென்று நிர்வசனம் செய்து விடலாம்.

ம: யுக்தியினால் மாத்திரம் தீர்மானிக்க யத்தனித்தால் இப்படித்தான் இருக்கும். சில்லரையான அவாந்தர விஷயங்களில் உள்ள வித்யாஸங்களைப் பாராட்டாமல், இந்த ஜகத்திற்கு உத்பத்தியுண்டென்றால், வேற்றுமையில்லாத ஒரே காரண வஸ்துவினிடமிருந்தே இந்த ஜகத் உண்டாயிருக்கவேண்டும் என்ற விஷயத்தையாவது, நவீன தத்வ ஆராய்ச்சிக்காரர்கள் ஏகமனதாய் ஒப்புக்கொள்கிறார்களா?

ந: அக்காரண வஸ்துவின் தன்மையைப்பற்றிப் பலவிதமான கொள்கைகள் இருந்தபோதிலும், ஒரு காரண வஸ்து உண்டு என்ற விஷயத்தில் அதிகமாக அபிப்பிராய பேதம் இல்லை. ஸ்ருஷ்டிக்கு முன் ஸ்வரூபமற்று எல்லாம் அணுஸமூஹமாயிருந்ததென்று அவர்கள் நினைக்கிறார்கள்.

ம: அப்படியேதான் நம் தார்க்கிகர்களின் அபிப்பிராயமும். ஸ்ருஷ்டிக்கு முன், அவ்வணுக்கள் அசைவற்று இருந்தனவா, அல்லது சலித்துக்கொண்டேயிருந்தனவா?

ந: இப்பொழுதுள்ள பௌதிக சாஸ்திரிகள் "அணுக்கள் ஒரு சமயத்திலும் அசைவற்றிருக்காது. எப்பொழுதும் சக்தி நிறைந்து இடைவிடாது சலித்துக்கொண்டேயிருக்கும் ஸ்வபாவம் உள்ளவைகள்" என்று சொல்கிறார்கள்.

ம: இவைகளுக்கு வெளியிலிருக்கிற வேறு ஒரு சக்தி, இவைகளைச் சலிக்கும்படி செய்கிறதென்று நினைக்கிறீர்களா அல்லது வேறுவிதமாகவா?

ந: அணுவுக்குள் அடங்கியிருக்கும் அனந்த சக்தியே, ஸ்தூல ரூபம் தரிக்கும்போது அணுவாகிற தென்று, இப்பொழுது கடைசியாய்ச் சொல்லு கிறீர்கள்.

ம: எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும். அணுவுக்கு சக்தியைக் கொடுத்து, அதை ஒரு வஸ்து வாக்கி, அதன் சேஷ்டைகளுக்குக் காரணமாயிருப்பது ஒரு சக்தியென்று அறிந்திருக்கிறீர்களல்லவா?

ந: ஆம்.

ம: எல்லா அணுக்களிலும் இருக்கும் அந்தச் சக்தி ஏகரூபமாயும், அளவிடக்கூடியதாயும் இருக்க வேண்டுமென்பதையும் ஒப்புக்கொள்ளத்தானே வேண்டும்?

ந: ஆம்.

ம: சக்தி பலவித பரிணமத்தையடையக்கூடிய தாகையால், ஒரு அணுவிலுள்ள மூல சக்திக்கும், இன்னொரு அணுவிலுள்ள மூல சக்திக்கும் வித்யாஸ முண்டென்று சொல்ல நியாயமில்லையே?

ந: இல்லைதான்.

ம: ஆகையால், அனந்தமான யோக்யதை வாய்ந்து, சிற்சில ஸந்தர்ப்பங்களில் அணுக்களாகத்

தோன்றும் மூல சக்தி ஒன்றே என்று வைத்துக் கொண்டால் ஸௌகர்யமில்லையா ?

த: மேற்கு தேசத்திய தத்வ சாஸ்திரிகளும், வர வர இந்தத் தீர்மானத்திற்கே நெருங்கி வருகிறார்கள்.

ம: யுக்தியென்றால், அப்படித்தான் வரும். இந்த அனந்த சக்தியே ஜகத்தின் மூலகாரணமான 'பிரகிருதி' என்ற பதார்த்தம் ஆகும்.

த: ஆம்.

ம: ஆனால், ஜகத் என்பது அணுக்களின் காரியமான அசேதனம் மாத்திரம் அடங்கியதல்ல. நீங்களும் நானும் இருக்கிறோம். நம்முடைய சரீரங்கள் அசேதன வர்க்கத்தில் சேர்ந்தவைகள்தான். இவைகளைத் தவிர, அசேதன வர்க்கத்தில் சேர்க்க முடியாததான ஒரு சேதன ரூபமான அறிவுப் பிரகாசம் நம்மிடமிருக்கிறது. ஜகத்துப் பூராவையும் பரிசீலனை செய்கிறதானால், இப்பிரகாசத்திற்கும் காரணம் சொல்ல வேண்டும். நவீன விமர்சகர்கள் இதற்கு என்ன சொல்கிறார்கள் ?

த: ஸாதாரணமாக, பௌதிகப் பிரபஞ்சத்தைப் பற்றி மாத்திரம்தான் அவர்கள் விசாரிக்கிறார்கள்.

ம: மற்றொரு அம்சத்தையும் சிலர்களாவது விசாரித்திருக்க வேண்டுமே ?

த: சிலர்கள் விசாரித்திருக்கிறார்கள். ஆனால், நம்மிடமுள்ள சேதனும்சங்களுக்கெல்லாம் ஒரு மூல-

காரணம் உண்டென்று அவர்கள் சொல்வதாகத் தெரியவில்லை. அவ்வம்சங்கள் நம் சரீரங்களைவிட வேருக இல்லையென்ருவது, அல்லது அநாதி ஸித்தமாய் மற்ருெரு காரணத்தையபேக்ஷிக்காமலேயிருக்கின்றன வென்ருவது, வைத்துக்கொண்டிருக்கிருர்கள்.

ம: அப்படியே ஜகத்துக்கும் ஆதியும் கிடையாது, வேறு காரணமும் கிடையாது, என்று வைத்துக் கொள்வதற்கென்ன?

ந: ஜகத்தில் தோன்றும் பலவித வேற்றுமை களுக்கு ஸமாதானம் சொல்லவேண்டாமா?

ம: அப்படியாளுல், ஜீவர்களிடம் தோன்றும் வேற்றுமைகளுக்கும் ஸமாதானம் சொல்லவேண்டிய துண்டல்லவா?

ந: வெளிப்படையான அம்சங்களைத்தள்ளிவிட்டுப்பார்த்தால், ஒரு ஜீவனுக்கும் மற்ருெரு ஜீவனுக்கும் வித்யாஸமுண்டென்று எப்படிச் சொல்ல முடியும்?

ம: அப்படியேதான் பௌதிகப் பிரபஞ்சத்திலும் வெளிப்படையான அம்சங்களைத் தள்ளிவிட்டுப்பார்த்தால், ஒரு அணுவுக்கும் மற்ருெரு அணுவுக்கும் வித்யாஸமுண்டென்று சொல்லவும் நியாயம் கிடையாது. வாஸ்தவத்தில், நீங்களே எல்லா அணுக்களும் பேதமற்ற ஒரு மூலகாரணமான சக்தியிலிருந்து வந்தவைகளென்று சொல்லவில்லையா?

ந: ஆம்.

ம: நான் கேட்பதென்னவென்றால், அதேமாதிரி அதே யுக்தியையனுஸரித்து, வெவ்வேறாக தோன்றும் அனந்தமான ஜீவர்களுக்கும் மூலகாரணமாக ஓர் ஆதிசேதன பதார்த்தம் உண்டென்று ஒப்புக் கொள்வது ந்யாயமல்லவா என்பதுதான்.

ந: அப்படியே வைத்துக்கொள்வோம்.

ம: அப்படியானால், நவீன தத்வ சாஸ்திரிகளின் விசாரணைக் கிரமத்தையனுஸரித்துப் பார்த்தாலே, பௌதிகப் பிரபஞ்சத்திற்கு மூலகாரணமாக ஒரு சக்தியும், ஜீவப்பிரபஞ்சத்திற்கு மூலகாரணமாக ஒரு சேதனமும் உண்டென்று ஏற்படுகிறது. அவ்விரண்டு மூலகாரணங்களும் அனந்தமாக விஸ்தாரத்தையடையும் யோக்கியதையுடையவைகள் என்றும் சொல்ல வேண்டும்.

ந: அப்படியே.

ம: இப்படியிருக்க, இரண்டு மூலகாரணங்கள் இருக்கவேண்டுமென்று வைத்துக்கொள்வதைவிட, ஒரே காரண வஸ்துதான் உண்டு, அதையே சைதன்யத்துடன்கூடின சக்தியென்றாவது, சக்தியுடன்கூடின சைதன்யமென்றாவது வியவஹரிக்கலாமென்றால் இன்னம் ஸௌகர்யம் ஏற்படுகிறதில்லையா?

ந: ஆமாம்.

ம: நம் ஸித்தாந்தத்தில் இதைத்தான் சொல்

கிறோம். மூலகாரணத்தை சைதன்யத்துடன் கூடிய ஒரு சக்தியென்று வியவஹரிக்கும்போது சக்தியென்றும், சக்தியோடு கூடின சைதன்யமென்று வியவஹரிக்கும்போது சித் என்றும் சொல்கிறோம்.

ந: தெரிந்துகொண்டேன்.

ம: இப்படிச் சொல்வதிலும், சக்தியும் சைதன்யமும் ஒன்ருகக் கலந்திருந்தபோதிலும், இரண்டும் தனித்தனி அம்சங்களாகவே தோன்றுகின்றனவல்லவா?

ந: ஆம்.

ம: ஆகையால், இன்னமும் ஸௌகர்யத்தை யபேக்ஷிக்கும்போது, மூலகாரணத்தில் சக்தி, சித் இவ்விரண்டுக்கும் ஸமானமான ஒரே தர்மம் தானிருப்பதாக வைத்துக்கொண்டு விடலாம். அத்தர்மமே பௌதிகப்பிரபஞ்ச ரீதியாய்ப்பார்க்கும்போது சக்தியாகவும், ஜீவப்பிரபஞ்ச ரீதியாய்ப்பார்க்கும்போது சைதன்யமாகவும் தோன்றுகிறது. அதாவது அம்மூலகாரணம் தன்னிடத்தில் அம்சமற்ற சித்சக்தியென்று சொல்லலாம். அதையே பிரஹ்மம் என்கிறோம். சித்தும் சக்தியும் அதன் அம்சங்களேயாவதால், அதை "இருக்கிறது" என்றுதான் சொல்லலாம். ஆகையால் அதற்கு வெறும் 'ஸத்' என்று பெயரிட்டிருக்கிறோம்.

ந: ஆனலும், இதெல்லாம் வெறும் மனக் கற்பனைதானே?

ம: இது வாஸ்தவமென்று சொல்லி கோஷிக்கிற

வேதங்களாகிய சாசுவதமான பிரமாணத்தைக் கவனிக்காத பக்ஷத்தில், கற்பனையேதான். கற்பனை யாயிருந்தால்தான் என்ன? முன் சொன்னபடி, இதனால் யாருக்கும் எவ்விதக் கெடுதலும் இல்லை.

ந: நம் புத்திபலத்தை இதில் செலவழிப்பதற்கு இந்தக் காரணம் போதுமா?

ம: வேறு விஷயங்களில் செலவழிப்பதைவிட, இதில் செலவழிப்பது எவ்வளவோ மேலாகும். தவிரவும், இதில் ஓர் அனுகூலமிருக்கிறது.

ந: அதென்ன?

## 2. நற்றேழன்.

ம: நடக்க பலமற்று ஒரு மனிதன் இருக்கிறு னென்று வைத்துக் கொள்வோம். இன்னொருவன பலசாலியாகவிருந்து தன்னை வழிகாட்டியழைத்துப் போவானென்று தெரிந்தால் அவனுக்கு ஸந்தோஷமா யிருக்காதா? தான் கடுமையான வியாதியினால் பீடிக்கப்பட்டவனாக இருக்கும்போது, தன்னைக் கவனித்துப் பிரியமாய் வைத்யம் செய்யக்கூடிய ஒரு வைத்தியர் ஸமீபத்திலிருக்கிறாரென்று தெரிந்தால் கொஞ்சம் ஆறுதல் ஏற்படாதா? தாரித்திரியத்தினால் மிகவும் வருந்திக்கொண்டிருக்கிற ஸமயத்தில், தன் வறுமையைத் தீர்த்துக் கொடுக்கக்கூடிய ஓர் அன் புள்ள பணக்கார பந்து ஸமீபத்திலிருக்கிறாரென்று தெரிந்து கொண்டால், சிரமம் கொஞ்சம் குறைவு படாதா?

ந: வாஸ்தவம்.

ம: நம் ஆயுட்காலத்தில் பிரதி க்ஷணமும் வியாதி, தாரித்திரியம் முதலான கணக்கிட முடியாத துக்க காரணங்கள் ஸம்பவித்துக்கொண்டேயிருக்கின்றன. அப்படியிருக்க, அந்தத் துக்க ஹேதுக்களை நிவிருத்திசெய்து, கேட்கும்போது ஆறுதலைக் கொடுக்கக்கூடியவனாக ஒருவன் ஸமீபத்திலிருப்பதாகத் தெரிந்து உணர்ந்தால் நமக்கு ஸந்தோஷமாயிராதா?

ந: இருக்கும்தான்.

ம: நாம் வியாதியினால் பீடிக்கப்படும்போது நம்மைப்போல் வியாதியுள்ள வேறொருவனையும், தரித்திரனாயிருக்கும்போது இன்னொரு தரித்திரனையும், நினைத்தால் என்ன பிரயோஜனம்?

ந: இல்லைதான்.

ம: பலசாலியாய் அரோகமாயிருப்பவனையோ, பணக்காரனையோ நினைப்பதுதான் உசிதமாகும்.

ந: ஆம்.

ம: வியாதி, தாரித்திரியம் இவைகளுடன் நம் சிரமம் நின்றுவிடுகிறதில்லை.

ந: நமக்குள்ள சிரமங்களுக்கு கணக்கேயில்லை.

ம: ஒவ்வொரு சிரமத்திலும், அந்த சிரமத்திலிருந்து விடுவிக்கக்கூடிய ஒரு சிநேஹிதர் இருக்கிறாரென்று தெரிந்தால் ஆறுதல் உண்டாகும்.

ந: ஆம்.

ம: ஆகையால், நமக்கு ஏற்படக்கூடிய சிரமங்களுக்கெல்லாம் தக்கபடி அந்தந்த சிரமங்களில்லாத மனுஷியர்களைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

த: அதெப்படி முடியும்? நம் சிரமங்கள்தான் அனந்தமாயிருக்கின்றனவே?

ம: வாஸ்தவம். ஆகையால், ஒருவித சிரமத்திற்கும் உட்படாத ஒருவன் கிடைத்துவிட்டால் நமக்குப் போதுமல்லவா?

த: வாஸ்தவம். ஆனால் அப்படி யார் எங்கே அகப்படுகிறார்கள்?

ம: இந்த லோகத்தில் மரணம் ஒரு சிரமம்?

த: ஆம்

ம: அப்படியே ஜனனமும் சிரமம்தான்.

த: வாஸ்தவமே. மற்ற சிரமங்களுக்கெல்லாம் இதுவே மூலகாரணமாகும்.

ம: ஆகையால், ஜனனத்திற்காவது மரணத்திற்காவது தான் உட்படாமலிருந்துகொண்டு, நம்மையும் இந்த சிரமங்களிலிருந்து விடுவிக்கக்கூடியவராக ஒரு ஸ்நேஹிதர் அகப்பட்டால் நன்றாயிருக்கும் அல்லவா?

த: யுக்திக்கு ஸரிதான்.

ம: நாம் ஸாதாரணமாக, சிரம நிவிருத்தியை மாத்திரம்தான் அபேக்ஷிக்கிறோமென்பதில்லை. நம்

மனோரதங்களும் பூர்த்தியாகவேண்டுமென்று நினைக்கிறோம். அம் மனோரதங்களோ கணக்கில் அடங்காதவைகள். ஆகையால், நம் மனோரதங்கள் எல்லாவற்றையும் நிறைவேற்றிக் கொடுக்கக்கூடிய ஒரு ஸ்னேஹிதரும் வேண்டியிருக்கிறது. நம்முடைய ஆசைகள் எண்ணிக்கையிலடங்காமல் இருப்பதுடன் எல்லையற்றுமிருக்கின்றன. எவ்வளவு பணக்காரனுயிருக்கும் பந்துவும், நம் ஆசைகளைப் பூர்த்திசெய்து கொடுக்கும் பொறுப்பை யேற்றுக்கொள்ள முடியாது. அவனுக்கு மனது இருந்தபோதிலும், அதிசீக்கிரம் அவன் சொத்தே காலியாகிவிடும். ஆகையால், நம் ஸ்னேஹிதருக்கு அக்ஷயமான சொத்துமிருக்கவேண்டும். கணக்குப்படி உங்கள் சிநேகிதர் பெரிய பணக்காரராகவேயிருந்தாலும், உங்களுக்கு அவசியமேற்படும் பொழுது அவர் கைவசம் ரொக்கமில்லையானல் உங்களுக்கு உதவமுடியாது. ஆகையால், பணம் ஏராளமாயிருந்தால் மாத்திரம் போதாது. எப்பொழுதும் அப்பணம் அவருடன்கூடவே இருக்க வேண்டும். தன்னுடைய கஜான்ஜீ வரவேண்டுமென்றிருந்தாலும், இரும்புப் பெட்டியின் சாவி தவறியிருந்தாலும், உடனே உங்களுக்கு உதவிசெய்ய முடியாது. அப்படி ஒரு ஸ்னேஹிதர் மதுரையில் இருந்தால், நீங்கள் அவரையும் கூடவே அழைத்துப்போனுலொழிய, அவர் உங்களுக்கு மைஸூரில் உதவமாட்டார். நீங்கள் அழைத்துப்போகிற சிரமங்கூட இல்லாமல், உங்களுக்கு வேண்டிய இடத்திலெல்லாம்

அவர் இருக்கக்கூடியவராயிருந்தால் மிகவும் ஸௌகர்யமில்லையா ? இவ்விதமாகவே ஆலோசனை செய்து கொண்டுபோனால், உங்களுக்கு உதவிசெய்ய எப்பொழுதும் ஸித்தராய், உங்கள்கூடவே எங்கு மிருக்கக்கூடியவராய், உங்களுக்காக எதையும் செய்யக்கூடியவராய் எதையும் அறிந்தவராய், தான் எவ்வித சிரமமுமற்றவராய், உங்களுடைய அபேக்ஷைகளைப் பூர்த்தி செய்யவும், குறைகளை நீக்கவும் மனமும் சக்தியும் வாய்ந்தவராய், ஒரு ஸ்நேஹிதர் இருக்கிறாரென்ற பாவனை உங்களுக்கிருந்தால், மிக்க ஆறுதல் இருந்துதானே தீரும்.

நீ: இப்படிப்பட்ட ஒரு ஸ்நேஹிதரை வெறும் மனோராஜ்யத்தில்தான் காணலாம்.

ம: இருக்கட்டுமே. வாஸ்தவமாகவோ, தவறுதலாகவோ, இப்படியொரு ஸ்நேஹிதர் இருக்கிறாரென்று நினைத்தால் ஆறுதலிருக்கிறதென்பது வாஸ்தவமல்லவா ? நம் ஸ்நேஹிதரிடம் இருக்கவேண்டியதாக நாம் தீர்மானித்திருக்கிற குணங்களைக் கவனிக்கும்போது, அவருக்கு ஸர்வ வியாபித்வம், ஸர்வ சக்தத்வம், ஸர்வக்ஞத்வம் முதலானவைகளெல்லாம் வேண்டுமென்று ஏற்படுகிறது. நம்முடைய குறுகின புத்தியினால், மனோராஜ்யத்தைத் தவிர வேறு வழியில் இப்பேர்ப்பட்ட ஸ்நேஹிதரை ஊஹித்துக்கூடப் பார்க்க முடியாது. அப்படியிருக்க, அவ்வித ஸ்நேஹிதரை ஸாக்ஷாத்கரிப்பது எப்படி ஸாத்தியமாகும்? ஆகையால், நம்மிடம் மிகவும் அக்கரைகொண்டவ

ராகவும், தெரிந்ததாகச் சொல்லிக்கொள்கிறவராகவும் நாம் விசுவாஸம் வைக்கக்கூடியவராகவும், ஒருவர் வந்து மேலே சொல்லியபடி ஒரு ஸ்நேஹிதர் இருக்கிறு ரென்று உறுதி சொல்லும் விஷயத்தில், நாம் அவரிடம் மிகவும் நன்றி பாராட்டவேண்டியதுண்டு. நம் புத்தி பரிச்சின்னமாயிருக்கிற காரணத்தினுலேயே, அவர் சொல்லும் விஷயம் வாஸ்தவமில்லையென்று ருசுப் படுத்தவும் நம்மால் முடியாது. இவ்விதம் நமக்குச் சொல்லும் ஆப்தரிடத்தில் நமக்குள்ள நம்பிக்கையைத் தளரச்செய்ய எவ்விதக் காரணமும் இல்லை. ஆகை யால், ஸர்வ சக்தராக ஒரு ஸ்நேஹிதர் இருக்கவே இருக்கிருரென்கிற எண்ணத்தைக் கெடுக்கவும் முடியாது. அப்படி ஒரு ஸ்நேஹிதர் எல்லாம் அறிந் தவராக, ஸகல வல்லமையும் வாய்ந்தவராகயிருந்து, காலம் வந்தபோது நம்முடைய ஸகலவிதத் துக்கத் தையும் விலக்க ஸித்தமாயிருக்கிருரென்கிற நம்பிக்கை ஒருவனுக்கு த்ருடமாயிருந்தாலும், முதலில் இல்லாம லிருந்து பின்னுல் அவ்வித நம்பிக்கையை ஸம்பாதித் துக்கொண்டாலும், அவனுக்கு அதைர்யம் ஏற்பட இடமேது? தான் நினைக்கிறபடி உடனே துக்கம் விலகாமல் போனுலும்கூட, ஒருகால் அந்த ஸர்வக்ஞ ரான ஸ்நேஹிதரின் தீர்மானத்தில், இத்தருணத்தில் அந்தத் துக்கமேதான் சிரேயஸ்கரமென்றிருக்கலா மென்று ஸமாதானம் செய்துகொள்வான். ஆகை யால், ஈசுவரன் என்று நாங்கள் சொல்கிற அவ்வித மான ஒரு ஸ்நேஹிதர் இருக்கிருரென்று ருசுப்படுத்த முடியுமா, நேரில் காட்டமுடியுமா, என்ற கேள்விகளை

தூரவைத்து விட்டாலும்கூட, அப்படி ஒருவர் இருக்கிறாரென்று நம்பினால், அனுபவத்தில் பெரிய அநுகூலமிருக்கிறதென்பதை ஆக்ஷேபிக்க முடியாது.

ந: இருக்கிறாரென்றுகூட ருசுப்படுத்தமுடியாது. ஒருவர் விஷயத்தில் எப்படி நம்பிக்கை ஏற்படும்?

ம: இருக்கிறதாக ருசுப்படுத்தப்பட்ட விஷயங்களை மாத்திரம்தான் நாம் நம்புகிறோமென்ற நியமம் உண்டா? நம் நம்பிக்கையை அவ்வளவுக்குள் அடக்கிக்கொண்டால், உலகத்தில் ஒரு கார்யமும் செய்ய முடியாது. நம்முடன் ஸம்பந்தப்படுகிறவன் யாராயிருந்தாலும், அவன் வார்த்தையை நம்பித்தான் தீர வேண்டும். ஒரு வீட்டை உத்தேசித்து நீங்கள் தேடிக்கொண்டிருக்கையில், ரஸ்தாவில் நிற்கும் ஒருவன் உங்கள் வேண்டுகோளின்பேரில் உங்களுக்கு வழி காட்டினால், உடனே அவன் யோக்கியனா, அவன் நன்கு தெரிந்து சொல்கிறானா, என்று விசாரிக்க ஆரம்பிக்கிறீர்கள்? அவன் வார்த்தை தவறுதலாயிராதென்று உடனே நம்பி அவ்வீட்டுக்குப் போவீர்கள். அங்கு போனபிறகு, அது நீங்கள் தேடின வீடாக இல்லாமலிருந்தால், அப்புறம் அவன்பேரில் குற்றம் சொல்ல நியாயமுண்டு. அப்படியன்னியில், நீங்கள் அவன் வார்த்தையை நம்புவதற்கே, 'நான் ஸரியாகத்தான் சொன்னேன் என்று அவன் ருசுப்படுத்தட்டும்' என்று ஆரம்பித்தால், அப்படி ருசுப்படுத்த ஒரு வழிதான் உண்டு; உங்களைக் கையைப்பிடித்து அழைத்துக்கொண்டு அவ்வீட்டில் கொண்டுபோய்

விடவேண்டும்; அதற்கும் நீங்கள் அவன்கூடவே போகத்தயாராயிருக்கவேண்டும். நானும் ஒரு அடி கூட எடுத்துவைக்கமாட்டேன், அவனும் தன் வார்த்தையை ருசுப்படுத்தவேண்டும், என்றால் ஒருகாலும் நடக்காது. அதேமாதிரி, ஈசுவரன் உண்டென்று நம் பிராசீன அறிஞர்கள் சொல்லியிருப்பதை நம்பாமல் இருக்க எவ்விதக் காரணமும் கிடையாது, அவர்களுடைய வார்த்தையில் த்ருடமான விசுவாஸம் வைத்துத்தான் தீரவேண்டும். அவர்கள் சொல்லியபடி நடந்துபார்த்துக் கடைசியில் அவர்கள் சொன்னது தவறு என்று உங்களுக்குத் தெரிந்தால், அப்பொழுது அவர்கள் பேரில் குற்றம் சொல்லலாம். அதுவரை சொல்வது நியாயமாகாது.

நீ: அந்த ரிஷிகளும் நம்மைப்போல் மனுஷியர்கள்தானே? நமக்குத் தெரியாமலிருக்க, அவர்கள் மாத்திரம் ஈசுவரனைப்பற்றி எப்படித் தெரிந்து கொண்டார்கள்?

ம: அதற்குக் காரணம், அவர்கள் தங்கள் குருக்களிடம் த்ருடமான விசுவாஸம் வைத்து, ஈசுவரனை அறிய வேண்டியதற்குள்ள உபதேசங்களைப் பெற்று அதன்படி நடந்து வந்தார்கள் என்பதுதான்.

நீ: இதுவே ஸமாதானமாயிருந்தால், அந்தக் குருக்களுக்கு எப்படித் தெரிந்தது என்ற மேல்கேள்வி வரும். இப்படிக் கேட்டுக்கொண்டேபோனால், முடிவன்னியில் அனவஸ்தையாகவல்லவா ஏற்படும்?

ம: இன்னொருவரிடமிருந்து அறிந்துகொள்ள அவசியமன்னியில், தானே தெரிந்தவராக ஓர் ஆதி புருஷனை ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில், அனவஸ்தை தான்.

ந: அந்தப் புருஷன் யார்?

ம: நம் பழைய ஸ்நேஹிதராகிய ஸர்வக்ஞரான ஈசுவரனே. வேதங்கள் அவருடைய மூச்சுக் காற்று. அவைகளே ஸகல நல்லறிவுக்கும் மூலஸ்தானம். ஆகையால், ஈசுவரனிடத்திலும், அவருடைய வாக்கிலும், அவருடைய பக்தர்களிடத்திலும் நம்பிக்கை வையுங்கள். அதிசீக்கிரத்தில் மிகவும் ஆறுதலைக் காண்பீர்கள். உங்கள் கூடவே அவர் எப்பொழுதும் ஸித்தமாயிருக்கிறாரென்ற எண்ணமே மிகவும் பெரும் ஸமாதானத்தைக் கொடுக்கும். அவருடைய ஸன்னிதியை உணரவும் ஆரம்பித்து விட்டீர்களேயானால், இதற்குமுன் அனுபவித்திராத ஓர் ஆனந்தம் தோன்றும். எப்படியாவது காலத்தைச் செலவழிக்க வேண்டியதுதானே என்ற எண்ணம் போகும். அந்த சாந்தி ஸுகத்தை தேடியனுபவிப்பதிலேயே காலத்தை நன்கு உபயோகப்படுத்தவேண்டுமென்று தோன்றும். அதிருப்திகரமான எவ்விதத்தோற்றமும் அப்புறம் தோன்ற இடமிராது. ஆயுட்காலம் பிரயோஜனமற்ற ஒரு வெட்டவெளியென்ற பாவனை போய்விடும்.



அத்யாயம் 10

## ஸந்த்யோபாஸனை

### 1. ஸூர்ய தேவதை

ஒரு சமயம் கல்வி இலாகாவில் பெரிய பதவி வகிக்கும் உத்யோகஸ்தர் ஒருவர் வந்து ஸ்ரீ மஹா ஸ்வாமிகளை தர்சனம் செய்துவிட்டு பின்வருமாறு விக்ஞாபனம் செய்தார் :—

க : நான் என் உத்யோக கார்யமாக பல பள்ளிக் கூடங்களைப் பார்வையிடச் செல்லும்பொழுது, அப் பள்ளிக்கூடங்களிலுள்ள சிறு பையன்களுடன் நெருங் கிப்பழக எனக்கு அடிக்கடி ஸந்தர்ப்பம் ஏற்படுகிறது. அங்கு அநேகமாகப் பிராஹ்மணப் பையன்களே ஜாஸ்தியாயிருக்கிறார்கள். அவர்களில் ஸந்த்யாவந் தனம் செய்கிற பையன்கள், ஏதோ பேருக்குப் பண்ணுகிறார்களே தவிர, அது ஒரு கடவுள் வழிபாடு என்றுகூட உணர்வதாகத் தோன்றவில்லை. அவர் களுக்கு உபயோகப்படும்படியாக ஏதேனும் சில உப தேசங்களைச் சொல்வீர்களேயானால், அவர்களுக்கு நானே போதிக்க ஸௌகரியமாயிருக்கும்.

ம : சோதித்துப் பார்க்கவேண்டியதென்ற ஸர்க் கார் காரியத்துடன் மட்டுமிருந்துவிடாமல், பையன் களையும் முன்னுக்குக்கொண்டுவர இது ஒரு ஸந்தர்ப்ப மென்று, நீங்கள் உபயோகிக்க நினைப்பதை அறிந்து மிகவும் ஸந்தோஷப்படுகிறேன். உபாத்யாயர்களோ

மேல் அதிகாரிகளோ, வித்யாப்யாஸ ஸம்பந்தமான எல்லா உத்யோகஸ்தர்களுமே, இச்சிறுவர்களுக்கு, நன்கு பதியக்கூடிய இளம் மனது வாய்ந்த காலத்தில், நல்ல பயிற்சியைக் கொடுக்கவேண்டியதான பெரிய பொறுப்பை வஹிக்கிறோமென்று ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருந்தால் நன்றாகவிருக்கும். பள்ளிக்கூடத்தில் ஏற்பட்ட பாடங்களைச் சொல்லிக்கொடுப்பதுடன் நிறுத்திக்கொண்டு, சிறுவர்களின் நடத்தை, அத்யாத்ம சிரேயஸ் முதலியவைகளைக் கொஞ்சமேனும் கவனிக்காமலிருந்தால், பெரும் குற்றமாகும். அதிலும், பையன்களின் இளம் மனதை மாற்ற ஸௌகரியம் கிடைத்ததென்று, தங்களுக்குக் கிடைத்திருக்கும் ஸந்தர்ப்பங்களை விபரீதமாக உபயோகப் படுத்திக்கொள்பவர்கள் மிகவும் குற்றவாளிகளாவார்கள்.

க: இதே கொள்கையை எப்பொழுதும் மறவாமலே யிருந்துவருகிறேன். எங்கு போனாலும், அங்குள்ள பையன்களைத் தருவித்து, ஏதேனும் நல்ல விஷயங்களை உபதேசம் செய்து விட்டுத்தான் போகிறதென்று வைத்துக்கொண்டிருக்கிறேன். அந்தக் காரியத்தை நன்கு நடத்த உத்தேசித்தேதான், தங்களிடம் அதற்கு உபயோகப்படக்கூடிய சில உபதேசங்களை யபேக்ஷித்தேன்.

ம: இவைகளைக் கேட்டுப் பையன்களுக்கு அனுகூலமில்லையென்றாலும் கூட, தங்களுக்கு நிச்சயமாய்ப் பிரயோஜனமிருக்குமே?

க: அப்படியேதான்.

ம: ஆகையால், பையன்களைப் பொருட்படுத் தாமல், உங்களுக்கே உபயோகப்படக்கூடியதான கேள்விகளையே கேளுங்கள்.

க: முதலில் ஸந்த்யோபாஸனை விஷயமாய்த் தங்கள் உபதேசம் மூலம் தெரிந்துகொள்ள வேண்டு மென்று தோன்றுகிறது. இந்த ஸந்த்யோபாஸனையில் உபாஸ்ய தேவதை யார்?

ம: அதற்குமுன், ஸாதாரணமாய், "ஸந்த்யோ பாஸனை" யென்பதற்கு நீங்கள் என்ன அர்த்தம் தெரிந்துகொண்டிருக்கிறீர்கள், என்பதைச் சொல் லுங்கள்

க: உதயமாகிற ஸூர்யன், அஸ்தமனமடைகிற ஸூர்யன், உச்சியிலிருக்கிற ஸூர்யன் இவர்களை உபாஸிப்பதுதான் ஸந்த்யோபாஸனமென்பது.

ம: மிகவும் ஸரி. சேர்த்துச் சொன்னால் ஸூர்யனை உபாஸிப்பது என்றாகுமல்லவா?

க: ஆம்

ம: ஸந்த்யோபாஸனம் என்றால் ஸூர்யனை உபாஸிப்பது என்று சொல்லிக்கொண்டே, ஸந்த்யை யில் உபாஸ்யன் யார் என்று கேட்கிறீர்களே. இது அனாவசியக் கேள்வியில்லையா?

க: அப்படிப் பார்த்தால் அனாவசியக் கேள்வி

தான். வாஸ்தவமாக நான் கேட்க உத்தேசித்தது உபாஸிக்கப்படுகிற ஸூர்யன் யார் என்பதுதான்.

ம: ஸாதாரணமாய் ஸூர்யன் என்றால் யார் என்று கிரஹித்திருக்கிறீர்கள்?

க: ஆகாசத்தில் பிரகாசமாய்த் தோன்றும் மண்டலமே ஸூர்யன்.

ம: அப்படியானால், அந்த பிரகாச மண்டலமே உபாஸிக்கப்படுகிறது.

க: ஆனால் பௌதிக சாஸ்திரரீதியாக, அந்த தேஜோமண்டலம் எப்பொழுதும் மிகவும் உக்கிரமாக எரிந்துகொண்டிருக்கிற ஒரு அசேதன வஸ்து என்றல்லவா சொல்கிறார்கள்? சேதனர்களான நம்போல் உள்ளவர்களால் உபாஸிக்கப்படும் யோக்கியதை, அதற்கு எப்படியேற்படும்? நம் பிரார்த்தனைகளைக் கேட்கவாவது, நம் அபீஷ்டங்களை நிறைவேற்றவாவது, அம்மண்டலத்திற்கு எப்படி முடியும்? மேற்கு தேசத்திலுள்ள சில வித்வான்கள், நம் முன்னோர்கள் எரிந்துகொண்டிருக்கிற ஓர் அசேதன பிம்பத்தைக் குறித்தே ஸ்துதிசெய்ததாகச் சொல்கிறார்கள். அப்படி நம் முன்னோர்கள் மூடர்களென்று நான் நம்பத் தயாராயில்லை.

ம: மிகவும் வாஸ்தவம். அவர்கள் ஒருகாலும் அப்படி மூடர்களில்லை.

க: அப்படியானால், அவர்கள் தாங்கள் ஸ்துதி

செய்யும்படியாக ஸூர்யபிம்பத்தில் என்ன விசேஷத்தைக் கண்டார்கள்?

ம: அசேதனத்தைப் பார்த்து ஸ்துதி செய்வது நியாயமாகாதென்று நீங்களே இப்பொழுது சொன்னீர்களே?

க: ஆம்.

ம ஸ்துதி செய்யவேண்டுமானால், ஸ்துதிசெய்யப்படுகிறவன் எப்படியிருக்க வேண்டும்?

க: அசேதனமாயில்லாமல், சேதனனாயிருக்க வேண்டுமென்பது முதலில் அவசியம்.

ம: இரண்டாவதாக?

க: நம் பிரார்த்தனையைக் காதுகொடுத்துக் கேட்டுப் பூர்த்திசெய்து கொடுக்கச் சக்தியுமிருக்க வேண்டும்.

ம: வாஸ்தவம். நம் முன்னோர்கள் மூடர்களுமில்லை. ஆனால், ஸூர்யனைப் பார்த்து ஸ்துதி செய்தார்கள். நம்மையும் ஸ்துதிசெய்யச் சொல்கிறார்கள். ஆகையால், அவர்களுடைய பார்வையில், ஸூர்யன் என்பது வெறும் பிரகாசமுள்ள மண்டலம் என்பதை விட, வேறாகவே தோன்றியிருக்க வேண்டுமல்லவா?

க: ஆம். அதற்கு சைதன்யமும், நம் பிரார்த்தனையைக் கேட்கக்கூடிய சக்தியும், நமக்கு உதவி செய்யக்கூடிய திறமையும் இருக்கிறதாகவே பாவித்திருப்பார்கள்.

ம: இப்பொழுது "நாம்" என்று சொன்னீர்களே, அந்த வார்த்தை இப்பொழுது ஸ்துதி செய்வதற்காகக் கையைத் தூக்கியிருக்கிற, இப்பொழுது ஜீவித்திருக்கிறவர்களை மாத்திரம் குறிக்காமல், சென்ற காலத்திலும், இனி வரப்போகும் காலத்திலுமுள்ள அனந்தமான பரம்பரைகள் யாவற்றையுமே அந்த "நாம்" என்பதில் சேர்க்கவேண்டுமல்லவா?

க: ஆம்.

ம: ஆகையால், ஸூர்யனென்று உபாஸிக்கப்படுகிறவரின் ஞானத்திற்காவது, சக்திக்காவது, தேச காலங்களினால் எல்லையிட முடியாதல்லவா?

க: அப்படியே.

ம: ஸந்த்யையில் உபாஸிக்கப்படுகிறவர் யார் என்று நீங்கள் கேட்ட கேள்விக்குப் பதில் கிடைத்து விட்டது. நம் பிரார்த்தனைகளைக் கேட்டு உதவக் கூடிய, ஸர்வக்ஞமாயும், ஸர்வ சக்தமாயும் இருக்கும் ஒரு சேதன வஸ்து என்று பதில் கிடைக்கிறது.

க: அப்படியானால், ஸூர்ய மண்டலத்தில் வஸிக்கும் ஒரு தேவன் என்று அர்த்தமா?

ம: அப்படியே. ஸூர்ய மண்டலம் அவருக்கு வாஸஸ்தானம் என்பது மாத்திரமல்ல; அது அவருக்கு ஸ்தூல சரீரமுமாகும்.

க: நம் ஸ்தூல சரீரங்களுக்கு உயிர் கொடுத்துக் கொண்டு நாம் எப்படியிருக்கிறோமோ, அதேமாதிரி

அந்த தேவன் ஸூர்ய மண்டலத்திற்கு உயிர் கொடுத்துக்கொண்டிருக்கிறன் என்று?

ம: ஆம்.

க: அப்படியானல், நம்மைப்போல் அவனும் சரீரியேயாவான். நம்மால் உபாஸிக்கப்படும் தன்மையை எப்படியடைந்தான்? நாம் ஸேவிக்கும்படியான உயர்ந்த ஞானமும் சக்தியும் அவனுக்கு எப்படி ஏற்பட்டது?

ம: முன் ஜன்மாவில், அதற்குத் தகுந்த கர்மாவையும், உபாஸனையையும் செய்ததிலேயே அப்பதவியை அடைந்திருக்கிறர்.

க: ஸூர்யதேவனும் நம்மைப்போலவே முன்னொரு காலத்தில் மனுஷ்யனயிருந்து, தன் பிரயத்தினத்திலேயா இந்த ஸ்தானத்தை யடைந்திருக்கிறன்?

ம: ஆம்.

க: அப்படியானல், நம்மைப்போல் அவனும் ஒரு ஜீவனேயாகும். தாரதம்யம் எவ்வளவு இருந்தாலும், ஒரு ஜீவன் இன்னொரு ஜீவனுக்கு ஏன் நமஸ்காரம் செய்யவேண்டும்?

ம: உங்கள் பையனும் சிஷ்யனும் உங்களுக்கு ஏன் மரியாதை காட்டவேண்டும்? உங்கள் மேல் அதிகாரிகளுக்கு நீங்கள் ஏன் மரியாதை காட்டுகிறீர்கள்? எல்லாருமே ஜீவர்கள்தானே?

க: வாஸ்தவம். ஆனால், அவர்கள் நினைத்தால், நமக்கு உதவிசெய்யவோ, நம்மைக் கெடுக்கவோ அவர்களால் முடியுமாதலால், மரியாதை காட்ட வேண்டியிருக்கிறது.

ம: இந்தமாதிரி மரியாதை செய்வது ரொம்ப மட்டமானது. அதையே எடுத்துக்கொண்டாலும் கூட, ஸூர்யதேவதைக்கு நம்மைக் கெடுக்கவோ, நன்மை செய்யவோ திறமையிருப்பதால், அவர் இஷ்டப்பட்டால், நமக்குக் கெடுதலையோ நன்மையையோ செய்யக்கூடுமானதால், நாம் அவருக்கு மரியாதை காட்டியே தீரவேண்டும்.

க: வாஸ்தவம்.

ம: உங்கள் மேல் அதிகாரிகளைப்போல ஸூர்யதேவனும் ஜீவனுயிருக்கிறபடியால், நீங்கள் உதவி செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தால் உதவி செய்வார்; அவரை உதாஸீனம் செய்து வெறுத்தால், கெடுதலும் செய்வார். ஆகையால், உங்கள் நன்மையை உத்தேசித்தே, நீங்கள் அவரை உபாஸித்து, அவருடைய நல்ல எண்ணத்தைப் பெறவேண்டியது அவசியம்.

## 2. கடவுள் வழிபாடு.

க: ஆனாலும், என் உத்யோகத்திற்கு ஏற்பட்ட கடமைகளைத் தவறாமல் நான் செய்து வந்தேனேயானால், என்னுடைய மேல் அதிகாரியின் திருப்தியையாவது, அதிருப்தியையாவது நான் கவனிப்பானேன்?

கடமையைச் சரிவர செலுத்துவதினால் கிடைக்கக் கூடிய அனுகூலம் எனக்குப்போதும்; கடமையிலிருந்து நழுவாமலிருந்தால் நான் யாருக்குப் பயப்பட வேண்டும்?

ம: வாஸ்தவம்.

க: இந்த நிலையை நான் காப்பாற்றி வந்தால், மேல் அதிகாரியின் திருப்தியை நான் எதிர்பார்க்க வேண்டியதற்கு அவசியமில்லையே?

ம: இல்லை.

க: அதேமாதிரி, சாஸ்திரங்களில் எனக்கு விதிக்கப்பட்டிருக்கும் கடமைகளைத் தவறாமல் நான் செய்து வந்தேனேயானால், எனக்குமேல் அந்தஸ்துள்ள தேவன் உட்பட எந்த ஜீவனுடையவும் திருப்தியையாவது, கோபத்தையாவது நான் கவனிக்கவேண்டியதில்லையே.

ம: வாஸ்தவம்.

க: அப்படியானால், ஸூர்யதேவனுடைய உபாஸனையை விட்டுவிடலாமா?

ம: விட்டு விடலாம். ஆனால், ஒன்று மாத்திரம் கவனித்துக்கொள்ள வேண்டும். உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் கடமைகளில், அந்த உபாஸனையும் சேர்ந்திருந்தால் விடுவது ஸாத்தியமில்லை.

க: அதென்ன?

ம: யோக்கியமாய் ஒழுங்காய்த் தன் கடமைகளை

நடத்தி வருகிற உத்தியோகஸ்தர், தனக்கு அடுத்த மேலதிகாரியினுடைய திருப்தியையாவது, அதிருப்தியையாவது கவனிக்க வேண்டாமென்பது வாஸ்தவமே. ஆனால், தனக்கு ஏற்பட்ட கடமைகளை ஸரிவர நடத்தக் கடமைப்பட்டிருக்கிறோம், அவைகளை அவசியம் நடத்தியே தீரவேண்டும், என்று நினைப்பதிலிருந்தே, இந்த மேல் அதிகாரி இல்லாமல்போனாலும், அவருக்கும் தனக்கும் மேலாக இன்னொரு அதிகாரி இருக்கிறாரென்ற பாவனையும், அவருடைய திருப்தியை ஸம்பாதிக்க வேண்டும், அவருக்கு அதிருப்தி ஏற்படாமலிருக்க வேண்டும், என்ற எண்ணமும் உள்ளூர இருப்பதாகவே தெரிகிறது. அந்த மேலான அதிகாரியை நேரில் பார்த்திருக்கவேண்டுமென்பதில்லை. ராஜாவாக இருக்கட்டும்; ஸர்க்காராக இருக்கட்டும்; தனக்குமேல் சக்திவாய்ந்தவனாக ஒருவன் இருக்கிறானென்ற எண்ணம் உத்யோக முறைகளை நடத்தும்போதெல்லாம் கூடவேயிருக்கும். இவனுடைய வேலையைக் கண்டு ஒப்பவும், தவறுதல்களை கண்டிக்கவும், அந்த மேல் அதிகாரிக்கு வல்லமையுண்டு; அந்த மேல் அதிகாரியே இவனுக்கும், இவனுக்கடுத்த மேல் அதிகாரிக்கும் நியந்தாவாகிறார். உனக்கடுத்த மேல் அதிகாரி விஷயமாய் நீ இப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று அந்த அதிகாரி கட்டளையிட்டால், அதை மீறி நடக்க முடியாது. மீறினால், தனக்கடுத்த மேல் அதிகாரியின் அதிருப்தியுடன், அந்த அதிகாரியின் அதிருப்தியும் ஏற்படும்.

க: வாஸ்தவம்.

ம: அதேமாதிரி, உங்களுக்கும் ஸூர்யனுக்கும் மேற்பட்டு இருவரையும் ஆளக்கூடிய சக்திபெற்ற ஒருவர், ஸூரியன் விஷயமாய் நீங்கள் இவ்விதம் நடக்க வேண்டுமென்று சொன்னால், அதை நீங்கள் உதாஸீனம் செய்ய முடியாது; அதன்படி நடந்தே தீரவேண்டும்; இல்லையென்றால், ஸூரியனுடைய அதிருப்தியுடன், அந்த மேலானவருடைய அதிருப்தியையும் ஸம்பாதிக்க நேரிடும்.

க: ஸரி. அப்படியானால், ஆதித்யனைப்பார்த்து நான் வந்தனம் செய்தாலுங்கூட, என் கருத்து அந்த மேலானவனைத் திருப்தி செய்விப்பதில் அல்லவா இருக்கும்? ஆதித்யனுக்கு வழிபாடு செய்வதும், அந்த மேலானவனையே வழிபாடு செய்வதாகாதா?

ம: அதிலென்ன?

க: ஆதித்யனைவிட மேலானவர் ஒருவர் உண்டு என்று நினைத்துக்கொண்டு, வாஸ்தவத்தில் அவருடைய திருப்தியையே நோக்கமாகக்கொண்டு, வெளிப்பார்வைக்கு ஆதித்யனுக்கு செய்யப்படும் வழிபாடுகள் எல்லாமே அந்த மேலானவரைத்தானே உபாஸித்ததாகும்?

ம: அப்படித்தான்.

க: அப்படியிருக்க, உபாஸ்யன் "ஆதித்யன்" என்று சொன்னீர்களே?

ம: ஆம். அந்த மேலானவனைப்பற்றித் தெரிந்து கொள்ளாத மனுஷ்யர்களுக்கு நான் சொன்னதே ஸரி. தெரிந்துகொள்ள சக்தியுள்ளவர்களுக்கு, உபாஸ்யன் அந்த மேலானவனேயாவான். அவருக்கே "ஹிரண்ய கர்ப்பர்" என்று பெயர். அவரே ஆதித்யனிடத்திலும் மற்ற எல்லாத் தேவதைகளிடத்திலும் இருந்து கொண்டு அவர்களுக்கு ஸ்திதியைக் கொடுக்கிறார். அவர் ஸூர்ய மண்டலத்தில் மாத்திரமிருக்கிறா ரென்பதில்லை; ஸகல பதார்த்தங்களிலுமிருந்து வரு கிறார். ஸகல பூதங்களுக்கும் ஸர்வாத்மாவாக விளங்கு கிறவர் அவரே.

க: நமக்கு நம் ஸ்தூல சரீரத்தில் "நான்" என்ற பாவனையிருப்பதுபோல, இந்த ஸர்வ சரீரியான புருஷ ருக்கு ஸர்வ ஜகத்திலும் "நான்" என்ற புத்தியிருக்கு மல்லவா?

ம: ஆம்.

க: அப்படியானால், அவருக்கும் எனக்கும் வித் யாஸம் "நான்" என்ற புத்தி இருக்கிறதா, இல்லையா வென்ற அம்சத்தில் இல்லை. ஆனால், எவ்வளவு தீவிர மாக, எவ்வளவு தூரம், எவ்வளவு பெரிதாக அந்தப் புத்தி இருக்கிறதென்பதில் மாத்திரம்தான் வித்யாஸ மென்று தோன்றுகிறது. என் "அஹம் பாவனை" சிறியது, அவருடையது பெரியது—இவ்வளவுதானே?

ம. ஆம்.

க: அஹம்பாவனையுள்ளவர் ஜீவன் என்றிருந்தால், இவரும் என்னைப்போல் ஜீவரேயாவார்?

ம: அப்படித்தான். இவரை "பிரதமஜன்" –முதலில் தோன்றினவன்–என்றும் சொல்வார்கள்.

க: இந்த மேலான புருஷன்கூட என்னைப்போல ஜீவகோஷ்டியிலேயே சேர்ந்தவராயிருந்தால், ஆதித்ய தேவரை உபாஸிப்பதற்கு நான் சொன்ன ஆக்ஷேபணைகள் இவருக்கும்தானே பொருந்தும்?

ம: நீங்கள் உபாஸ்யனாக யார்தான் இருக்க வேண்டுமென்று நினைக்கிறீர்கள்?

க: ஜீவகோஷ்டியில் சேராத, மேலான ஒரு சக்தியாக இருக்கவேண்டும்.

ம: ஸந்த்யையில் உபாஸிக்கப்படுவது அப்படிப்பட்ட ஒரு சக்தி என்றே வைத்துக்கொள்ளுங்கள். அதையே ஈசுவரனென்றும், அந்தர்யாமியென்றும் சொல்கிறோம்.

க: ஆளப்படுகிற அல்லது நியமனம் செய்யப்படுகிற ஜகத்துடன் ஸம்பந்தப்படுத்தி, அவரைப்பற்றி வியவஹரிக்கும் ஸமயத்தில்தான் 'ஈசுவரன்', 'அந்தர்யாமி' என்ற சப்தங்கள் உசிதமாகுமென்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

ம: வாஸ்தவம்.

க: ஜகத்துடன் ஸம்பந்தப்படுத்தாமல், அவ

ருடைய தத்வத்தைத் தெரிந்துகொள்ள முடியாது' என்று இராது. ஜகத்தின் ஸம்பந்தம் அவருக்கு வெளிப்பட்டதேயாகும். இன்னொரு பதார்த்தத்துடன் எவ்வித ஸம்பந்தமுமன்னியிலேயே தனக்கு ஸ்வதந்திர மாக ஸ்வரூபநிலை ஒன்று இருந்தே தீரவேண்டும்.

ம: மிகவும் வாஸ்தவம். அந்த ஸம்பந்தப் படாத ஸ்வரூப ஸத்தையே பிரஹ்மம் என்கிறோம்.

க: அப்படியானால், ஜகத்தையபேக்ஷித்து வியவ ஹரிக்கப்படும் ஈசுவர தத்வத்தைவிட, அந்த பிரஹ் மத்தை உபாஸிப்பதுதானே நியாயமாகும்?

ம: நீங்கள் சொல்கிறபடியேதான். ஸந்த்யை யில் உபாஸிக்கப்படுவது அந்த நிர்விசேஷ ப்ரஹ்மமே.

க: தாங்கள் சொல்வது எனக்கு அர்த்தமாக வில்லை. முதலில் ஸூர்யமண்டலமே உபாஸ்யமென்று சொன்னீர்கள். அது ஜடமல்லவாவென்று நான் கேட்டபிறகு, உபாஸ்யன் ஆதித்யதேவனேயாவான் என்றீர்கள் அவரும் நம்மைப்போல பரிச்சின்ன ஜீவன்தானே என்று கேட்டதும், ஸர்வசரீரியாயிருக் கிற ஹிரண்யகர்ப்பரே உபாஸ்யர் என்று சொன்னீர் கள். ஸர்வசரீரியாயிருந்தாலும், அஹம்பாவனையிருப் பதால் அவரும் ஒரு ஜீவன்தானே என்று கேட்ட பிறகு, ஜகந்நியந்தாவான ஈசுவரன்தான் வாஸ்தவ மான உபாஸ்யர் என்று சொன்னீர்கள். அவரும் பிரஹ்மத்தின் ஸாபேக்ஷிகமான அம்சம்தானே என்று

நான் சொன்னதும், உபாஸ்யம் அந்த ப்ரஹ்மம்தான் என்று சொல்கிறீர்கள்.

ஜ: ஆமாம்.

சி: இத்தனை வாக்கியங்களையும் எப்படி ஒழுங்கு படுத்துவதென்று தெரியவில்லை.

ஜ: அதில் எங்கே சிரமம்?

### 3. உபாஸ்ய பேதம்

சி: ஒரு உபாஸனையில் உபாஸ்யம் ஒன்றுதானே இருக்க முடியும்? ஸூர்யமண்டலம் அல்லது ஆதித்ய தேவன் அல்லது ஹிரண்ய கர்ப்பர் அல்லது ஈசுவரன் அல்லது ப்ரஹ்மம் என்று இம்மாதிரி எப்படி இருக்க முடியும்?

ஜ: ஸூர்யமண்டலம் அல்லது ஆதித்யதேவன் அல்லது என்று இம்மாதிரியாக நான் சொல்லவே யில்லையே?

சி: அப்படியானால், ஸூர்ய மண்டலமும், ஆதித்ய தேவனும், ஹிரண்யகர்ப்பரும், ஈசுவரனும், ப்ரஹ்மமும் எல்லாம் சேர்ந்து உபாஸ்யம் என்பது தங்கள் அபிப்பிராயமா?

ஜ: அப்படியும் நான் சொல்லவில்லை.

சி: தங்கள் வாக்கியங்களை நான் எப்படித்தான் அர்த்தம் பண்ணிக்கொள்கிறது?

ஜ: உபாஸ்யன் ஆதித்யதேவன் என்று நான் எப்பொழுது சொன்னேன்?

க: ஸ்தூலமாயும், ஜடமாயும், எப்பொழுதும் எரிந்து கொண்டுமிருக்கிற கோளக பிண்டம் உபாஸ்ய மாகாது என்று நான் சொன்னவுடன் தாங்கள் சொன்னீர்கள்.

ம: நீங்கள் அவ்விதம் சொல்வதற்குமுன், அப் பிண்டமே உபாஸ்யமென்று சொன்னேன் அல்லவா?

க: ஆம்.

ம: ஸூர்ய மண்டலமோ அல்லது ஆதித்ய தேவனோ உபாஸ்யனுகிருன், என்று விகல்பமாக நான் சொல்லவேயில்லை. உள்ளிருக்கிற சேதனனை அறிய முடியாதவனுக்கு, ஸ்தூலமான பிம்பமே உபாஸ்யம். அசேதனத்தை உபாஸ்யமாக ஒப்புக்கொள்ளத் தயாராயிராதவனுக்கு, ஆதித்யதேவனே உபாஸ்யன். ஆகையால், எப்பொழுதும் உபாஸ்யம் ஒன்றுதான். உபாஸனை செய்யும் ஸாதகனுடைய யோக்கியதைக் குத்தக்கபடி, உபாஸ்யத்தின் தன்மை மாறியிருக்கும். இன்னம் கொஞ்சம் விசாரித்து, ஆதித்ய தேவனையும் உபாஸ்யனுகை ஒப்புக்கொள்ளாத பக்தனுக்கு, உபாஸ்ய வஸ்து இன்னம் ஸூக்ஷ்மமாகும்போது, ஹிரண்ய கர்ப்பர் என்கிறோம். இதுவும் போதாது, திருப்திகரமா யில்லையென்று நினைக்கும் பக்தனுக்கு 'நீ உபாஸிப்பது பரமேசுவரனே' என்போம். ஈசுவரத்தன்மையும்கூட அவரைப் பரிச்சேதப்படுத்துகிறதென்று நினைக்க ஆரம்பிக்கும்போது, அபரிச்சின்னமான பிரஹ்மமே தான் உபாஸ்யம் என்று சொல்கிறோம்.

க: இதனால், ஸந்த்யையில் உபாஸனைக்கு விஷய மானவர் யாரென்று தீர்மானமாக சொல்ல முடியாது, உபாஸகனுடைய மனப்பரிபாகம், புத்தியின் பரிசுத்தி முதலியவைகளைக் கவனித்துத்தான் சொல்லமுடியும் என்று தாங்கள் சொல்வது ?

ம: உபாஸகனை விட்டுவிட்டால் உபாஸ்யம் ஏது? உபாஸகனின் தன்மையை வைத்துத்தான் உபாஸ்யத்தின் தன்மையைத் தீர்மானிக்கவேண்டும்.

க: அதெப்படி ?

ம: உதாஹரணத்திற்காக, என்னையே எடுத்துக் கொள்வோம். நீங்கள் எல்லோரும் என்னிடம் மரி யாதை காட்டுகிறீர்கள். உங்களுடைய மரியாதைக்கு விஷயம் பொதுவாக நான் என்றிருந்தாலும், உங்கள் மனோபாவத்திற்குத் தக்கபடி அது வெவ்வேறாகும். ஸாமான்ய ஜனங்கள், பளபளவென்று பிரகாசிக்கிற பிருதுகளால் சூழப்பட்டிருக்கிற என்னைப் பார்த்து ஸந்தோஷித்து மரியாதை செய்கிறார்கள். அவர் களுடைய மனோபாவமும், மரியாதையும் அந்த பிருது களுக்கே சேர்ந்தன ; என்வரை வரா. ஏனென்றால், நான் இல்லாமல் வேறு யாரேனும் இதே பிருது களுடன் வந்தாலும், இதே மரியாதையைக் காட்டு வார்கள். ஆகையால், அவர்கள் செய்யும் மரியாதை வாஸ்தவத்தில் எனக்கில்லை, என் பிருதுகளுக்கே. சிலர் நான் வஹிக்கும் ஸ்தானத்திற்காகவும், நான் இருக்கும் ஆசிரமத்திற்காகவும் என்னை மதிப்பார்கள்.

இந்த ஸ்தானத்திலாவது, இந்த ஆசிரமத்திலாவது வேறு யார் வந்து இருந்தாலும், இதே மரியாதையை அவரிடமும் வைப்பார்கள். ஆகையால், அவர்கள் செய்யும் மரியாதை, இந்த ஸ்தானத்திற்கும், இந்த ஆசிரமத்திற்குமே தவிர எனக்கில்லை. மற்றும் சிலர், இந்த ஸ்தானத்தையாவது, ஆசிரமத்தையாவது கவனிக்காமல், நான் எங்கே போனாலும், எப்படியிருந்தாலும், சுசுருஷை செய்வார்கள். அவர்களுடைய மரியாதைக்கு விஷயம் என் ஸ்தூல சரீரம். இன்னும் சிலர், என் சரீரம் கருப்பாகவோ, அவலக்ஷணமாகவோ, வியாதியினால் பீடிக்கப்பட்டோ, எப்படியிருந்தாலும், அதைப் பொருட்படுத்தாமல், என் மனது சுத்தமாய், நல்ல ஸ்வபாவத்துடனும், என் புத்தி தெளிவாய், நல்ல வைதுஷ்யம் அல்லது மேலான யோக்கியதையுடனும் இருப்பதாகத் தோன்றினால் அதற்காக என்னிடம் மதிப்பு வைப்பார்கள். உங்கள் எல்லாரிடத்திலும் இருப்பதுபோல, என்னிடத்திலும் பிரகாசிக்கிற சைதன்யாம்சத்திற்காக என்னிடம் மரியாதை வைக்கிறவர்கள் மிகவும் சிலரே.

க: தங்களிடம் வருகிற எல்லா பக்தர்களுக்கும், ஒரே மாதிரி மனது பக்குவமடைந்திருக்க முடியாது என்பது வாஸ்தவமே.

ஸ்ரீ: அப்படியே, ஸாமான்யமாகக் கவனித்தால், பிருதுனுக்காக மரியாதை செய்பவர்களும், ஸ்தானம் ஆசிரமத்தை யுத்தேசித்து மரியாதை செய்பவர்களும், என் சரீரத்திற்கு மரியாதை செய்பவர்களும், மனோ

புத்திகளுக்கு மரியாதை செய்பவர்களும், உள்ளிருக்கிற சைதன்யாம்சத்திற்கு மரியாதை செய்பவர்களும், எல்லாருமே, தங்கள் தங்கள் மரியாதையைக் காட்டும் பொருட்டு வந்தனம் செய்வது ஒரே விதமாகத்தானிருக்கும். அவர்களைப்பற்றி கவனிக்காமலே, அவர்கள் வந்தனம் செய்வது யாருக்கு என்று சொல்லுங்கள்.

ந: பதில் சொல்வது மிகவும் சிரமம்தான்.

ம: இதேமாதிரிதான் எல்லா உபாஸனையிலும். வெளிப்பார்வையில், பிருதுகளுக்காக என்னிடம் மரியாதை வைக்கிறவனுக்கும், ஆத்ம சைதன்யத்திற்காக மரியாதை வைக்கிறவனுக்கும், வித்யாஸம் தெரியாது. அப்படியே, மூடபக்தியுடன் ஸூர்ய ஜ்யோதிஸ்ஸைப் பார்த்து பிரார்த்திக்கிற பக்தனுக்கும், அபரிச்சின்னமாயிருக்கும் ப்ரஹ்மத்திற்கு இது ஒரு வெளிப்படையான ப்ரதீகம் (குறிப்பு) என்று அதே ஜ்யோதிஸ்ஸை உபாஸிக்கிற பக்தனுக்கும், வெளிப்பார்வையில் வித்யாஸம் தெரியாது. ஆகையால் ஸந்த்யையில் உபாஸ்யன் யார் என்ற கேள்விக்கு, நான் சொல்லிக்கொண்டு வந்தவிதமாகத்தான் பதில் சொல்லமுடியும். அதாவது, பிரகாசித்துக்கொண்டிருக்கிற மண்டலத்திற்கு மேல் யோசிக்க சக்தியற்றவனுக்கு, அம்மண்டலமே உபாஸ்யம்; எவ்வளவு பிரகாசமாயிருந்தாலும், அது அசேதனம்தானே, அதை உபாஸிப்பதாவென்று நினைப்பவனுக்கு, ஆதித்யதேவதையே உபாஸ்யம்; அவரையும் தன்னுடன் பரிச்சின்ன ஜீவகோஷ்டியில்

சேர்க்கிறவனுக்கு, ஸர்வசரீரியான ஹிரண்யகர்ப்பரே உபாஸ்யர்; எவ்வளவு பெரியவராயிருந்தாலும், அவரும் ஜீவன்தானே என்று நினைப்பவனுக்கு உபாஸ்யர் ஈசுவரனேயாவார்; ஈசுவரனும் ஸவிசேஷர்தானே யென்று நினைப்பவனுக்கு பிரஹ்மமே உபாஸ்யமாகும்.

க: ஸந்த்யோபாஸனை என்று சிறிதாகத் தோன்றுகிற இந்த கர்மாவிலேயே, மேல் மேல் போவதற்கு வேண்டிய எல்லாப் படிகளும் அமைக்கப்பட்டிருக்கின்றனவென்று இப்பொழுதுதான் நன்கு தெரிந்துகொண்டேன்.

ம: இது மாத்திரமல்ல. இன்னம் கொஞ்ச தூரம் ஆலோசித்துப் பார்த்தால், கர்மம், பக்தி, ஞானம் என்ற மூன்று ஸாதனங்களுமே இந்த நித்ய கர்மாவில் அங்கங்கு அமைக்கப்பட்டிருக்கின்றன வென்று நன்கு உணர்வீர்கள். ஆனல் இது வேறு விஷயம். ஸந்த்யாவந்தனம் சிறிதாகத் தோன்றின போதிலும், அதுவே உத்தமமான மேல்ப் படிகளுக்குக் கொண்டுபோய்விடப் போதுமானது. ஸாமான்யர்களுக்கு எப்படி உபயோகமோ, அப்படியே மேல்படியிலிருக்கும் ஸாதகனுக்கும் உபயோகமாகும். இதன் பெருமையை உணராமலிருப்பதும், கார்யத்தில் உதாஸீனம் செய்வதும் பெரும் அசட்டுத்தனமாகும்.



## அத்யாயம் 11

## உண்மையான பக்தி

### 1. பஜனையும் பக்தியும்

ஒரு நாள் ஸாயங்காலம், ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் முன்னிலையில், பொதுவாக நடந்துவந்த ஸம்பாஷணை மத்தியில், ஸங்கீதத்துடன் பத்ததியாய் நடந்துவரும் பஜனை விஷயமான 'பேச்சு வந்தது. அப்பொழுது அங்கிருந்த ஒரு பக்தர் பின்வருமாறு தன் அபிப்பிராயத்தை வெளியிட்டார்:—

ப: கண்டபடியல்லயும் நம் மனதுக்கு, இது மாதிரி பஜனை செய்வது மிகவும் உத்ஸாஹத்தையும் சாந்தியையும் கொடுக்கிறது. இப்பொழுது ஒவ்வொரு கிராமத்திலும், நகரத்திலும் பஜனைக் கோஷ்டிகள் ஜாஸ்தியாகிக்கொண்டு வருவதைப் பார்க்க மிகவும் திருப்தியாயிருக்கிறது.

ம: எனக்கும் மிகவும் திருப்திதான். ஆனால், இதன் மூலம் நம் வைதிக கர்மானுஷ்டானமும் குறைந்துகொண்டே வருகிறதாமே? அதெப்படி இருக்கலாம்?

ப: ஸாமான்ய ஜனங்களுக்கு வைதிக கர்மத்தில் நம்பிக்கை குறைந்திருக்கிறதை முக்கியகாரணமாகக் கொண்டுதான், ஈசுவரனைத் திருப்திசெய்யப் பஜனையைக் கையாளுகிறார்கள்.

ம: பஜனையில் ப்ரவிருத்திக்கிறவர்களில் சிலர், ஸந்த்யாவந்தனம் முதலான நித்ய கர்மாக்களைக்கூட கவனிக்காமலே விட்டுவிடுகிறார்களென்று தெரிகிறது.

ப: பஜனை செய்துகொண்டிருக்கும் சமயத்தில் ஸந்த்யாகாலம் வந்தால், பஜனையை நிறுத்தவேண்டிய அவசியமில்லை யென்றும், ஸந்த்யாவந்தனத்தையே விட்டுவிடலாமென்றும், சொல்கிறார்கள். பஜனையே மேலான வழிபாடாயிருப்பதால், இன்னொரு வழி பாடாகிய கர்மா அனாவசியமுமாகுமென்பது அவர்களின் அபிப்பிராயம்.

ம: பொது நியாயமாக, பெரியதில் சின்னது அடங்கினது என்பது வாஸ்தவம். ஆனால், பகவானைத் திருப்தி செய்துவைக்கும் விஷயத்தில், கர்மாவைவிட பஜனைக்கு ஜாஸ்தி சக்தியுண்டென்று எப்படித் தெரியும்?

ப: ஸாக்ஷாத்தாகவே பகவானைப் பிரார்த்திப்பது பஜனை. கர்மா என்பது வைதிக கிரியா கலாபங்கள் மூலமாய்த்தானே பிரார்த்திப்பதாகும்?

ம: பகவானை நாம் யாரும் நேரில் பார்த்ததில்லையே?

ப: இல்லை

ம: அவரை நாம் நேரில் கேட்டுத் தெரிந்து கொள்ள ஸாத்தியமில்லாததினாலும், அவராகவே வந்து நம்மிடம் நேரில் சொல்லாததினாலும், அவருக்கு

எது திருப்திகரமாயிருக்குமென்று நாம் தெரிந்து கொள்ள வழியில்லையே?

ப: இருந்தாலும், பகவானுடைய ஆக்ஞைகள் அடங்கிய வேதங்களிலிருந்து ஸுலபமாகத் தெரிந்து கொள்ளலாமல்லவா?

ம: ஸ்மிருதிகளையும் சேர்த்துக் கொள்ளுங்கள். முக்கியமாக, பகவத்கீதையையும் சேர்த்துக் கொள்ளுங்கள். ஈசுவரனோடு மானஸிகமாகவும், நேருக்கு நேராகவும், ஸாக்ஷாத்தாக ஸம்பந்தம் வைத்துக்கொள்ள பாக்கியமடைந்த பெரியோர்கள் பகவானுடைய அபிப்பிராயங்களை ஸந்தேஹமறத் தெரிந்துகொண்டு ஏற்படுத்தியவைகள் அல்லவா ஸ்மிருதிகள் என்பது?

ப: ஆம்.

ம: அவைகள் நமக்கு என்ன போதிக்கின்றன?

ப: அதில் பக்தியைக் குறைவாகச் சொல்லியிரா.

ம: வாஸ்தவம். ஆனால், பக்தி என்றால் என்ன என்ற கேள்விக்கு என்ன பதில்? நீங்கள் சொல்லும் பஜனையா அல்லது கர்மாவா?

ப: கர்மா எப்படி பக்தியாகும்?

ம: வாஸ்தவத்தில், கர்மாதான் பக்தியாகும் என்றும், கர்மாவிற்கு விருத்தமாகவாவது, கர்மாவை விட்டாவது செய்யும் பஜனை பக்தியேயாகாதென்றும், நீங்கள் அறிந்துகொள்ளவேண்டும்.

ப: அதெப்படி?

ம: பகவத் கீதையில், "स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानवः ॥" (அ° १८. श्लो° ४६.) "ஸ்வகர்மானுஷ்டானத்தினுல் மனுஷ்யன் அவரை (ஈசுவரனை) ஆராதித்து ஸித்தியை அடைகிறுன்" என்று ஸந்தேஹத்திற்கு இடமன்னியில் பகவானே சொல்கிறுர். இங்கு அவரவர்களுக்கு ஏற்பட்ட கர்மாவை அனுஷ்டிப்பதே தன்னை ஆராதனம் செய்யும் வழி என்ற தத்வத்தை விளக்கியிருக்கிறுர்.

ப: பகவானிடத்தில் பக்தியைக் காட்டுவதற்கு கர்மானுஷ்டானமென்ற ஒரே வழிதானுண்டா?

ம: கர்மா யாருக்கெல்லாம் விதிக்கப்பட்டிருக்கிறதோ, அவர்களுக்கெல்லாம் இந்த ஒரே வழிதான் உண்டு.

ப: ஈசுவரனைப் பிரார்த்தித்துக்கொண்டு, தியானம் செய்வதிலேயே காலத்தைக் கழிக்கின்ற பக்தன், பாஹ்யமான கர்மாக்களைச் செய்வதில் வேகமுள்ள பக்தனைவிட மேலானவன் இல்லையென்று வைத்துக் கொண்டாலுங்கூட, அவனுக்கு ஸமானமாகவாவது இருக்கமாட்டானு?

ம: தாரதம்யம் சொல்வதற்கே இடமில்லை. ஒருவனுக்குக் கர்மா கட்டாயமாக விதிக்கப்பட்டிருக்கும்போது, அதை உதாஸீனம் செய்துவிட்டு, மானஸிகமாகப் பிரார்த்தனையோ, தியானமோ செய்கிறேனென்முல், அவன் பக்தனுகவே ஆகமாட்டான்.

ப: ஏன் அப்படி?

ம: ஸாமான்யமாக ஒரு யஜமானனையும் அவரிடம் வேலை செய்யும் ஸேவகர்களையும் கவனிப்போம். ஒரு ஸேவகன், எப்பொழுதும் யஜமானருக்கு முன்னால் நின்றுகொண்டு, அவரை ஸ்துதி செய்துகொண்டேயிருக்கிறானென்று வைத்துக்கொள்வோம். எப்பொழுதாவது அவனைப் பார்த்து, அடுத்த அறையிலிருக்கும் ஒரு ஸாமானை எடுத்து வரும்படி யஜமானர் சொன்னால், அதைக்கேட்ட அந்த ஸேவகன் "ஸ்வாமி! ஒரு க்ஷணம்கூட தங்கள் ஸன்னிதியை விட்டுப் பிரிந்து போக ஸஹியேன். பெருந்தன்மை பொருந்திய அதிரமணீயமாயிருக்கிற தங்களுடைய முகாரவிந்தத்தைப் பார்த்துக்கொண்டேயிருப்பதால் கிடைக்கும் ஸந்தோஷத்தையும், பாக்கியத்தையும், ஒரு நிமிஷம்கூட என்னால் இழக்க முடியாது. எப்பொழுதும் உங்கள் கூடவேயிருந்துகொண்டு, உங்கள் முகத்தையே பார்த்துக்கொண்டு, தங்களுடைய சிலாக்கியமான குணங்களைப்பாடித் தங்களை துதித்துக்கொண்டிருக்கவே நான் பிரியப்படுகிறேன். என்னை இந்த இடத்திலிருந்து அசையச் சொல்லாதீர்கள்" என்று பதிலளிக்கிறான் என்றும் வைத்துக்கொள்வோம்.

மற்றொரு ஸேவகன் யஜமானருக்கு முன்னால் வருவதே கிடையாது; யஜமானரால் நேரிலோ, வேறு மனுஷியர் மூலமாகவோ கட்டளையிடப்பட்டிருக்கிற ஸகல காரியங்களையும், கொஞ்சம்கூடத் தவறாமல், மிகவும் ஜாக்கிரதையாகச் செய்து வருகிறான். யஜ

மானர் எங்கு திரும்பிப் பார்த்தாலும், தன் கட்டளையை பூர்ணமனதுடன் மிகவும் திருப்திகரமாக இந்த ஸேவகன் நடத்தியிருக்கிறானென்பதையே காண்பார்; ஆனால் தன் முன்னால் ஒரு நிமிஷம்கூட அவன் வீணாக நிற்பதைப் பார்த்ததில்லை. இவ்விரண்டு ஸேவகர்களில் எவனுக்கு யஜமான விசுவாஸம் ஜாஸ்தி? எவனிடம் யஜமானருக்கு ஜாஸ்தி திருப்தியிருக்கும்?

ப: பின்னால் சொன்னவனிடத்தில்தான்.

ஸ: ஒரு பையன், தன் தகப்பனாரின் மடியிலேயே உட்கார்ந்துகொண்டு, அவர் என்னச் சின்னக் காரியம் சொன்னாலும் செய்ய மறுத்துக்கொண்டும், இன்னொரு பையன் எது சொன்னாலும் அதை அப்படியே நடத்தி வைக்க உடனே வெளியில் ஓடிக்கொண்டும் இருந்தால், அவருக்கு யாரிடத்தில் பிரீதி ஜாஸ்தியேற்படும்?

ப: சொன்னபடி கேட்கிறவனிடத்தில்தான்.

ஸ: யஜமானர், அல்லது தகப்பனாருடைய முன்னிலையை விட்டு நகரமாட்டேனென்று சொல்கிற ஸேவகனுக்கோ, அல்லது பையனுக்கோ, கொஞ்சமாவது பக்தியிருக்கிறதென்று சொல்ல முடியுமா? அவர்கள்தான் எது சொன்னாலும் கேட்கத்தயாரில்லையே?

ப: சொன்னபடி கேட்காமலிருப்பதற்கும், பக்திக்கும் நேர் விரோதம்தான்.

ம: அப்படியேதான். எந்த விதமாய்ப் பார்த்தாலும், பக்திக்கு முதல் அடையாளமே சொன்னபடி கேட்பதுதான். ஏன் என்று கேட்காமல் ப்ரியத்துடன் சொன்னபடி நடக்கவேண்டும். தர்க்கம் செய்துகொண்டும், முணுமுணுத்துக் கொண்டும் செய்வது பக்தியில் சேராது.

ப: வாஸ்தவம்.

ம: "சுருதியும் ஸ்மிருதியும் என்னுடைய ஆக்ஞைகள்" என்று பகவான் சொல்கிறார். இந்த ஆக்ஞைகளை உல்லங்கனம் செய்துகொண்டோ, அல்லது இந்த உல்லங்கனத்தையே அடிப்படையாக வைத்துக்கொண்டோ நடந்துவந்தால், அந்த சமயம் அவனிடம் பக்தி என்பது இருக்கமுடியுமென்று யாராலும் சொல்லமுடியுமா?

ப: கர்மாவுக்குப் பதிலாக பஜனை உபயோகப் படாதென்று இப்பொழுது தெரிந்துகொண்டேன்.

ம: ஒருநாளும் பதிலாகாது.

ப: அப்படியானால் பஜனைக்குத்தான் என்ன உபயோகம்? அவ்வளவும் வீணா?

ம: யஜமானரால் கொடுக்கப்பட்ட கட்டளைக ளெல்லாவற்றையும் யதாக்கிரமமாய் செய்து முடித்து விட்டு. ஒழிந்த வேளைகளில் யஜமானனுக்கு ஸமீபத்தில் போய் வேண்டுமானால் நிற்கட்டும். வேலை பாக்கி யிருக்கும்போது அவ்விதம் போய் நிற்கக்கூடாது.

அதேமாதிரி, தனக்கு ஏற்பட்ட ஸகல கர்மாக்களையும் செய்துமுடித்துவிட்டு, அப்புறமும் அவகாசமிருந்ததே யானல், ஈசுவரனைப் பிரார்த்தனை செய்யலாம், அவ னுடைய குணங்களை ஸ்துதித்துப் பாடலாம். கிடைத்த அவகாசத்தை இவ்விதம் நன்ருக உபயோகித்துக் கொள்ளலாம். ஆகையால், கர்மானுஷ்டானத்திற்குப் போக இடைவேளைகளில் கிடைக்கக்கூடிய அவகாசங் களுக்காக ஏற்பட்டதுதான் பஜனை என்பது.

ப: சுருதி ஸ்மிருதிகளால் விதிக்கப்பட்ட எல் லாக் கர்மாக்களையும் சரிவர முடித்துக்கொண்டு, அப் புறம் தான் பஜனை செய்கிறதென்ருல், பிராஹ்மண னுக்குப் பஜனைசெய்ய அவகாசமே இராதென்று தோன்றுகிறது.

ம: அப்படியல்ல. சோம்பேரிகளுக்குத்தான் பொழுது போதாது என்று தோன்றும். காரியஞ் செய்துகொண்டிருப்பவர்களுக்கு எப்பொழுதும் அவ காசம் கிடைக்கும்.

ப: எப்படியும், வைதிகக் கர்மாக்களுக்குப் போக மீதமுள்ள வேளையில்தான் பஜனை செய்ய வேண்டுமென்ருல், பிராஹ்மணரைத் தவிர இதர ஜாதியார்களுக்கே, ஜாஸ்தி அவகாசம் கிடைக்கும் என்று தோன்றுகிறது. அவர்களுக்கு வைதிகக் கர்மாக்கள் மிகவும் குறைவு. ஆகையால், பஜனைக்கு அவர்களே முக்கியமான அதிகாரிகளாவார்களென்று தோன்றுகிறது.

ம: அப்படியேதான். பஜனையென்பது பிராஹ்மணர்களைத் தவிற மற்றவர்களுக்கே முக்கியமாய் ஏற்பட்டது.

ப: இவ்விஷயத்தில் பிராஹ்மணர்களுக்கு மற்றவர்களுடன் ஸமமான அதிகாரம் கூட கிடையாது என்பது நியாயமாகுமா?

ம: முன் சொல்லியபடி, அவர்களுக்கு அதிகாரமில்லையென்று யாரும் சொல்லவில்லை. அவகாசம் கிடைக்கும்போது வைத்துக்கொள்ளலாம். மேலும், பகவானை ஸ்தோத்திரம் செய்வதைவிட, அவருடைய ஆக்ஞையை நிறைவேற்றுவதே மேலான பக்தி என்பதை மறந்துவிடாதீர்கள். இன்னொரு விதமாகவும் கவனித்துப்பாருங்கள்.

ப: எப்படி?

ம: யஜமானர் இட்ட வேலையைச் செய்வதை விட, அவருடைய முகத்தைப் பார்த்துக்கொண்டேயிருக்க நினைக்கும் ஸேவகன், அவ்விதம் பார்த்துக் கொண்டிருப்பதில் தனக்கு ஸுகமிருக்கிறது, வேலை செய்யப்போனால், இந்த ஸுகம் போய்விடுமேயென்று பயப்படுகிறான்.

ப: அப்படியே.

ம: ஆகையால், தான் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று நிச்சயம் செய்வதில், தன்னுடைய திருப்தியைப் பெரிதாகப் பாராட்டிக்கொள்கிறானே தவிர, யஜமானரின் திருப்தியைக் கருதவேயில்லை.

ப: ஆழ்ந்து கவனித்தால், அப்படியேதான் ஆகும்.

ம: யஜமானரின் திருப்தியைவிடத் தன் சொந்தத் திருப்தியே மேலானதென்று கருதி, யஜமானரின் திருப்தியை கவனிக்காமலோ, அலக்ஷியம் செய்தோ இருந்துவருகிற ஸேவகனை, எவ்விதத்தில் பக்தியுள்ளவனென்று சொல்ல முடியும்?

ப: முடியாதுதான்.

ம: அதேமாதிரி, பக்தன் என்று சொல்லிக்கொண்டு, பகவானின் ஆக்ஞைகளைக் கவனிக்காமல், உதாஸீனம் செய்து, விட்டுவிட்டு, மனோஹரமான ஸங்கீதத்துடன் அவருடைய குணாதிசயங்களைப்பாடி வருகிறேன் என்றால் அவனை பக்தன் என்று எப்படிச் சொல்ல முடியும்?

ப: சொல்ல முடியாதுதான்.

ம: தவிரவும், அவன் பகவானைத் தன்னுடைய ஸுகானுபவத்திற்காக ஏற்பட்ட, மிகவும் ரமணீயமான ஒரு போக்யப்பதார்த்தம் என்றே நினைத்திருக்கிறானல்லவா? ஸர்வக்ஞனாய், ஸர்வசக்தனாயிருக்கும் ஈசுவரனை, இவனுடைய ஸந்தோஷத்திற்காக ஏற்பட்ட ஒரு விளையாட்டு ஸாமானாக இறக்கி மதித்து விட்டால், இதைவிட அபசாரம் என்ன வேண்டும்? ஈசுவரனைப்போக்ய வஸ்துவாக்கி அனுபவிக்க நினைப்பது பெரும் அபசாரமாகும். அப்படி நினைப்பவன் ஒரு

நாளும் பக்தனாகமாட்டான். அவருடைய கட்டளைகளை அப்படியே நிறைவேற்றுவதுதான் வாஸ்தவமான பக்தி. காரியத்தில் அவருடைய வார்த்தையை உல்லங்கனம் செய்துகொண்டு, வாயால் மாத்திரம் பக்தனென்று சொல்லிக்கொள்வது மஹத்தான அபசாரமாகும். லஞ்சம் வாங்கின பணத்தை மடியில் வைத்துக்கொண்டே, நான் லஞ்சம் வாங்கவில்லையென்று வியவஹாரம் செய்கிறவனுடைய யோக்கியதைதான் இவனுக்கும். பக்தியென்றால் வாக்கு, மனஸ், காயம் இம்மூன்றிலும் ஏகரூபமாய் ஒருமைப்பாடு இருக்கவேண்டும்.

## 2. ஈசுவர தத்வம்

ப: பக்திவிஷயமாக இன்னொரு கேள்வி கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். கேட்கலாமா?

ம: கேளுங்கள். என்ன விஷயம்?

ப: அநேக பக்தர்கள் சிரத்தையுள்ளவர்களாகவும், ஸாத்விகர்களாகவும் இருந்துவந்தபோதிலும், தன்னுடைய உபாஸ்ய தேவதையைத் தவிர வேறு எந்தத் தேவதையையும், தன் காது கேட்க யாராவது ஸ்துதித்தால், உடனே வியவஹாரத்திற்கும், வசவுக்கும் ஆரம்பித்துவிடுகிறார்களென்பதைக் கவனித்திருக்கிறேன். இதைப் பொறுத்துக்கொள்ள முடியாமலிருக்கும் மனோபாவம், வாஸ்தவமான பக்தியுடன் பொருந்துமா?

ஶ: பொருந்தாது. ஸந்தேஹமேயில்லை. இம் மனோபாவம் நல்ல பக்தர்களிடமிராது. பக்தியின் ஸ்வரூபமின்னதென்று அறியாமலும், தங்களால் உபாஸிக்கப்படுகிறதாய்ச் சொல்லப்படுகிற ஈசுவர னின் ஸ்வரூபம் எப்படியுள்ளதென்று தெரிந்துகொள் ளாமலும், இருக்கிறவர்களிடம்தான் இந்த மனோ பாவம் காணப்படும். ஜகந்நியந்தாவாய், ஸர்வேசுவர னாய், இருக்கும் பரவஸ்துவானது எல்லாத் தனித்தனி நாமங்களையும் ரூபங்களையும் கடந்து நிற்கிறது. நாம மும் ரூபமும் அசேதனமான பிரகிருதியைச் சேர்ந் தவைகளே. கொஞ்சமாவது பிரகிருதி ஸம்பந்தம் கற்பிக்காமலிருக்கும் வரை, ஈசுவரனுக்குச் சொந்த மாக ஒரு நாமமும் ஒரு ரூபமும் கிடையாது. 'पादोऽस्य विश्वा भूतानि' என்று புருஷஸூக்தத்தில் சொல்லியபடி நாமரூபாத்மகமான ஸகல பிரபஞ்சமுமே அவருடைய பாதமாத்திரம்தான் ஆகும். ஈசுவர தத்வத்தில் இதற்கு மேலாகப் பெரியதாக இருக்கும் பாகத்தை நாம் ஒருபொழுதும் நேரில் அறிந்துகொள்ள முடியாது. அவருடைய பாதம்தான் நமக்குத்தெரியக்கூடும். அவருடைய பாதத்தை ஸேவிப்பது மூலமாகத்தான் அவரை ஸேவிக்கவேண்டியிருக்கிறது. பிரபஞ்சத்தி லுள்ள தேவர்கள், பிதிருக்கள், மனுஷியர்கள், மிருகங்கள் முதலானவை யடங்கிய இதராம்சங்கள் விஷயத்தில், நாம் எப்படி நடந்துகொள்ளவேண்டு மென்றும், நம்மையும் எப்படி நடத்திக்கொள்ள வேண்டுமென்றும், சாஸ்திரங்களில் சொல்லியபடி

சரியாக நடந்துகொள்வதுதான் கர்மா எனப் படுகிறது. அதுவே ஈசுவரனின் பாதஸேவை. அந்தப் பாதத்தில் ஊக்கத்துடன் இடைவிடாது ஸேவை செய்து, நம் பக்தியினுல் ஈசுவரனுக்குத் திருப்தியேற் பட்டு, நம்மைக் கைதூக்கி விட்டு நிறுத்தி, அவருடைய முகத்தையே நேரில் பார்க்கக்கூடிய பதவியைக் கொடுத்தாரேயானுல், அப்பொழுது அவர் நெற்றியில் இருப்பது கோபீ சந்தனமா, விபூதியாவென்று பார்த் துக்கொள்ளலாம். இப்பொழுது நாம் ஏணியின் அடிப் படியிலிருக்கிறேம். பகவானுடைய பாதத்தின் பிரகாசமே நமக்குக் கொஞ்சமேனும் புலப்படவில்லை. அப்படியிருக்க, அவருடைய முகத்தின் தன்மையைப் பற்றி ஊஹிக்கவும் வியவஹாரம் செய்யவும் எதற்காக நாம் காலத்தையும் பலத்தையும் வீணுகச் செலவழிக்க வேண்டும்? வாஸ்தவமான பக்தியுள்ளவன் இந்த வழிக்கு எப்பொழுதும் போகவேமாட்டான். ஈசுவரன் என்றுல், ஜகத்தை ஸ்ருஷ்டி செய்து, காப்பாற்றி, உபஸம்ஹாரம் செய்கிறவர் என்ற சுருக்கமான லக்ஷணம் அந்தப் பக்தனுக்குப் போதுமானது. அவ ருக்கு எந்தப் பெயர், எந்த ரூபம் கொடுத்தாலும் ஆக்ஷேபணையில்லை; ஏனென்றுல், அவை ஈசுவரனின் தத்வத்தில் சேர்ந்தவையல்லவென்றும், அந்தந்தப் பக்தர்களின் க்ஷேமத்தை யுத்தேசித்து அவை அவலம் பிக்கப்படுகிறவைதானென்றும் அவன் நன்கு அறி வான். தன்னைக் குறித்து பகவானுல் கட்டளையிடப் படும் ஆக்ஞைகள் அடங்கியதே வேதமென்றும், அவ்

வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மாக்களை ஒழுங்காகச் செய்வதே, பகவானுடைய அனுக்ரஹத்தை ஸம்பாதிக்க வழியென்றும், பகவதாராதனம் செய்வதற்குத் தன்னால் ஸாத்தியப்படும் மார்க்கம் இது ஒன்றே தானென்றும், அறிந்திருப்பான்.

ப: சிவபக்தனாயிருப்பவன், ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹாரங்களைச் செய்கிறவர் சிவனேயென்றும், விஷ்ணு பக்தனாயிருப்பவன் விஷ்ணுதானென்றும், அதேமாதிரி மற்றவர்களும் சொல்கிறார்களே ?

ம: மேல்பார்வைக்கு அவ்விதம் தோன்றலாம். சிவபக்தனுடைய எண்ணத்தைக் கவனித்தால், ஜகத்தை ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹாரம் செய்வது ஒருவர் தான் என்றும், அந்த ஒருவரே சிவன் என்றும் ஏற்படும். ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாவாக, விஷ்ணுவோ, வேறு யாருமோ இருப்பதாக அவன் ஒப்புக்கொள்ளமாட்டான். அந்த லக்ஷணம் பொருந்திய பரவஸ்து ஒன்றுக்குமேல் பல உண்டென்றாவது, அப்பலருக்குள் தன்சிவன் உத்கிருஷ்டமானவர் என்றாவது சொல்வது கிடையாது. அவன் நம்புவதும் சொல்வதும் என்னவென்றால், ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கெல்லாம் ஒரே கர்த்தாவாக இருக்கிறவரே சிவன் என்பதுதான். அநேக ஈசுவரர்களை யாரும் ஒப்புக்கொள்கிறதே கிடையாது. ஒரு ஈசுவரர்தான் உண்டு; அவர்தான் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்து, ரக்ஷித்து, உபஸம்ஹாரம் செய்கிறார். அவருடைய பெயர் சிவன், என்றுதான் அபிப்ராயம்.

ப: வாஸ்தவம். ஆனால், விஷ்ணுபக்தனும் இந்த மாதிரிதானே தன் விஷ்ணுவைப்பற்றி நினைக்கிறான், அப்படியேதான், கணேசர், ஸுப்ரஹ்மண்யர், தேவீ முதலானவர்களுடைய பக்தர்களும் பாவிக்கிறார்கள். இவர்களில் யார் சொல்வது ஸரியென்று ஒப்புக் கொள்கிறது? எல்லாருடைய எண்ணமும் ஸரியா யிருக்க முடியாதென்பது ஸித்தம்.

ம: எந்தப் பக்தரும், அநேக ஈசுவரர்கள் உண்டு என்று சொல்வதில்லையென்பது ஸரிதானே?

ப: ஆம்.

ம: எல்லாருமே ஈசுவரன் ஒருவன்தான் உண்டு என்று சொல்கிறார்களல்லவா?

ப: ஆம்.

ம: ஈசுவரனைப்பற்றிச் சொல்லும்போது, அவர் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்து, ரக்ஷித்து, உபஸம்ஹாரம் செய்கிறாரென்ற லக்ஷணத்தையும், எல்லாரும் ஏகரூப மாக ஒப்புக்கொள்கிறார்களல்லவா?

ப: ஆம்.

ம: ஆனால், அந்த ஈசுவரனுக்கு பெயர் என்ன, ரூபம் என்ன, என்பதில் மாத்திரம் வித்தியாஸப் படுகிறார்கள்.

ப: அப்படியே.

ம: அவர்கள் சொல்லும் ஈசுவர லக்ஷணத்தில் தவறுதல் இல்லை. ஸரியாகவே ஏகரூபமாய் சொல் கிறார்களல்லவா?

ப: ஆம்.

ம: உங்கள் முன்னிலையில் ஒரு மணியரிசி இருக்கிறதென்று வைத்துக்கொள்ளுங்கள். அரிசிக்குள்ள லக்ஷணங்களெல்லாம் அதனிடத்திலிருப்பதாக நீங்கள் கவனித்துத் தெரிந்து கொண்டு, அது அரிசியே என்று தீர்மானிக்கிறீர்கள். அந்த ஸமயத்தில், தமிழ் தெரிந்தவன் ஒருவன் வந்து அதற்குப் பெயர் அரிசியென்றும், ஒரு கன்னடஸ்தன் அதற்கு பெயர் அக்கியென்றும், ஸம்ஸ்கிருதம் தெரிந்த பண்டிதர் ஒருவர் அதற்குப் பெயர் தண்டுலம் என்றும், சொன்னால் உங்களுக்கு என்ன பாதகம்?

ப: பாதகமில்லைதான்.

ம: நாமங்கள் பதார்த்தத்தின் ஸ்வரூபத்தில் சேராத பாஹ்யமான அம்சங்கள் என்று தெரியவில்லையா? நாமரூபமயமானப் பிரபஞ்சத்தில் வியவஹாரவிஷயத்தில் அந்த நாமங்களுக்கு உபயோகமிருக்கலாம். அதேமாதிரி, ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹார கர்த்தா என்கிற லக்ஷணமிருந்ததேயானால், சிவன் என்று சொன்னால் என்ன, விஷ்ணு என்றாலென்ன, தேவி என்று கூப்பிட்டால்தானென்ன? பெயர்கள் வித்யாஸப்பட்டாலும், லக்ஷ்யமாயிருக்கிற பதார்த்தம் ஒன்றுதானே. கன்னடம், ஸம்ஸ்கிருதம் தெரியாத தமிழன் அரிசியென்றுதான் சொல்லவேண்டும், அக்கியென்றாவது, தண்டுலம் என்றாவது ஒருகாலும் பெயரில்லையாதென்று மிகவும் உறுதியாய்ச் சொல்வான். அவனுக்குப் பழக்கமுள்ள தமிழ் பாஷையில், அந்தப்

பெயர்கள் கிடையாததினால் அவன் ஸம்பந்தப்பட்ட மட்டில் அவன் சொல்வது ஸரியே. ஆலோசனை செய்து செய்து பதார்த்தத்திலிருந்து பெயரைப் பிரித்துப்பார்க்கக் கற்றுக்கொள்ளும்வரை, அவனுக்கு அப்பெயரே அப்பதார்த்தமாகும். அப்பெயரில்லை யென்று நீங்கள் சொன்னால், அப்பதார்த்தத்தையே மறுக்கிறீர்களென்று நினைப்பான். ஈசுவர தத்வத்திலிருந்து ஒவ்வொரு நாமத்தையும் ரூபத்தையும் பிரித்துப் பார்க்கச் சக்தியற்ற பக்தன்தான் சண்டைக்கு வருவான். அவன் மனோநிலைக்கு அது ஸரிதான். ஆனால், ஈசுவரன் ஸகல விதமான நாமரூபங்களுக்கும் அதீதன்; வாக்குக்கு எட்டாத ஸ்வரூபத்தோடு கூடிய ஈசுவரனைக் குறிக்கவே, நாமங்கள் ஸாதனங்களாகின்றன; அபரிச்சின்னமாய் இருக்கிற ஈசுவர தத்வத்தைப் பரிச்சின்னமாக்கிக்காட்ட உபயோகப்படுவதே ரூபம், என்று உணர்ந்திருக்கிற உத்தம பக்தனுக்கு இவன் எவ்வளவோ கீழேதான்.

## 3. மூர்த்தி பேதம்

ப: இதுமாதிரி அசட்டு வியவஹாரங்களுக்கு ஸ்ரீ வியாஸரேதான் ஜவாப்தாரியோ யென்றுகூடத் தோன்றுகிறது. இவர் அந்தந்த தேவதைகளைக் குறித்து, தனித்தனியாக, அநேக புராணங்களை எழுதியிருக்கிறார். ஒவ்வொரு புராணத்திலும், அதில் வர்ணிக்கப்படும் தேவதையே பரவஸ்து என்று சொல்லியிருப்பதால், ஸ்ரீ வியாஸருடைய அபிப்பிராயத்தில்

யார்தான் பரவஸ்து என்று தீர்மானிக்க எந்த சிரத்தாளுக்கும்கூட முடியாமலிருக்கிறது.

ம: ஸ்ரீ வியாஸர் மூடரில்லையென்பதும், ஜனங்களை ஏமாற்றுவதற்காக ஒரு காரியமும் அவர் செய்கிறதில்லையென்பதும் வாஸ்தவமில்லையா?

ப: அதில் என்ன ஆக்ஷேபணை?

ம: எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கிற பரவஸ்து ஒன்றாகத்தானிருக்கவேண்டுமென்ற ஸாமான்ய நியாயம் அவருக்குத் தெரிந்திருக்குமல்லவா?

ப: தெரிந்துதான் இருக்கும். அதனாலேதான் எனக்கு சிரமம் ஒவ்வொரு தேவதையையுமே பரவஸ்து என்று அவர் சொல்வது எனக்கு அர்த்தமாகிறதில்லை.

ம: ஸ்ரீ வியாஸர், ஒவ்வொரு தேவதையையும் பரவஸ்து என்று சொல்லவேயில்லை, பரவஸ்துதான் ஒவ்வொரு தேவதையும் என்றுதான் சொல்கிறார், என்று தெரிந்துகொண்டால் சிரமமேயிராது.

ப: அதெப்படி?

ம: பரதத்வத்திற்குச் சொந்தமாக நாமமும் ரூபமும் கிடையாது. அதுவே உபாஸ்யமாகும்போது, ஏதேனும் ஒரு நாமத்தையும், ரூபத்தையும் எடுத்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. அதற்கு ஸ்வபாவமாக எவ்வித ரூபமுமில்லாததினால், பரமார்த்ததசையில்

அரூபம் என்றே சொல்லவேண்டும். வியாவஹாரிக தசையில் எல்லா ரூபங்களும் அவருடையதேயாகும்.

ப: இது எனக்கு அர்த்தமாகிறது. ஆனால், ஸ்ரீ வியாஸர் ஒரு வியக்தியை, உதாஹரணமாக சிவனைப் பற்றி சொல்லும்போது, பரதத்வத்திற்குரிய விசேஷணங்களையெல்லாம் அம்மூர்த்திக்குக் கொடுப்பதுடன் நிற்காமல், இதர தேவதாமூர்த்திகளுக்குள்ள விசேஷணங்களையும் இவருக்கே உள்ளவைபோல சொல்கிறார். பரதத்வத்தின் உபஸம்ஹார அம்சமாகச் சிவனை வர்ணிக்காமல் விஷ்ணுவும், பிரஹ்மாவுமே இவர்தான் என்றும், விஷ்ணுவும், பிரஹ்மாவும் இவருடைய அம்சம், அல்லது ஸந்ததியேயாவர்கள் என்றும் சொல்லிவிடுகிறார்.

ம: குடும்பத்தில் நடக்கும் ஒரு ஸாமான்ய ஸம்பவத்தை கவனித்துப் பார்ப்போம். ஒரு பிரபுவுக்கு நான்கு குழந்தைகள். அதில் ஒருகுழந்தைக்குப் பிறந்த நாள் கொண்டாடப்படுகிறதென்று வைத்துக் கொள்வோம். அன்று "உபாஸ்ய" மூர்த்தி அக்குழந்தையே. வீட்டின் நடுக்கட்டில் உயர்ந்த ஆஸனம் போட்டு அக்குழந்தையை உட்காரவைத்திருப்பார்கள் விலையுயர்ந்த வஸ்திரங்களையுடுத்தி, நகைகளால் அலங்கரித்திருப்பார்கள். அன்று அந்தக் குழந்தையை விசேஷமாக அலங்கரிக்கும் பொருட்டு, தாயாரும் மற்றக் குழந்தைகளும் கூட, தாங்கள் நித்தியம் போட்டுக் கொண்டிருக்கிற நகைகளை அன்று தாத்காலிகமாக அக்குழந்தைக்குப் போடுவதும் வழக்கமில்லையா?

ப: அப்படி வழக்கம் உண்டு

ம: தங்கள் நகைகளைக் கொடுக்கவேண்டியிருக்கிறதே என்று, தாயாரும் மற்றக் குழந்தைகளும் கொஞ்சமேனும் வருத்தப்படுகிறதுண்டா? இன்று எல்லா நகைகளையும் இக்குழந்தை தரித்துக்கொண்டு இருக்கிறதே என்று அவர்கள் அஸூயைப்படுகிறதாவது உண்டா?

ப: கிடையாது.

ம: இதேமாதிரி தங்களுக்குப் பிறந்த நாள் வரும்போது, இக்குழந்தை ஸாதாரணமாகத்தரிக்கும் நகைகள் உட்பட எல்லோருடைய நகைகளையும், இது போல் தங்களுக்கும் போட்டு நன்முக அலங்கரிப்பார்கள், என்று அக்குழந்தைகளும் அறிந்திருக்கிறார்களல்லவா?

ப: ஆம்.

ம: இன்றையதினம் இக்குழந்தை தாயாரிடத்திலிருந்தும், மற்றக் குழந்தைகளிடத்திலிருந்தும், நகைகளைப்பிடுங்கிக் கொண்டதென்று, யாரேனும் குற்றம் சொல்வார்களா? இன்று "உபாஸ்ய" மாக இக் குழந்தை சோபிக்கவேண்டுமென்பதற்காக, இதரர்களுடைய நகைகளையும் கழற்றிப்போட்டு இதற்கு இன்று பிராதான்யம் கொடுத்தது பக்ஷபாதம் என்று தகப்பனரை யாரேனும் குற்றம் சொல்ல ஸாத்தியப்படுமா?

ப: முடியாது.

ம: இத்தனை நகைகள், இவ்வளவு அலங்காரம் எல்லாம் யாருக்குச் சொந்தம், யாருடைய ஆளுகையிலிருக்கிறது?

ப: தகப்பனாருடையதுதான்.

ம. அப்படியே. ஆனாலும், அவர் எப்பொழுதாவது இந்த உடைகளையும் ஆபரணங்களையும் தரிப்பதுண்டா?

ப: கிடையாது.

ம: அதாவது, எல்லாம் அவருக்கே சொந்தமாயிருந்தபோதிலும், அவர் ஒன்றையும் தனக்கு உபயோகித்துக்கொள்கிறதில்லை; அந்தந்த ஸமயத்தில் அவசியம்போலத் தன் குழந்தைகளை அலங்கரித்துப் பார்ப்பதிலேயே ஸந்தோஷமடைகிறார்.

ப: அப்படித்தான்.

ம: ஆகையால், எல்லா நகைகளும் அவருக்கே பாத்தியப்பட்டிருந்தபோதிலும், அவர் அவைகளை தரிப்பதில்லை.

ப: ஆம்.

ம: தன் ஸ்வாதீனத்தில் பத்திரமாக இரும்புப் பெட்டியில் வைத்திருக்கும்போதுதானா, இந்த நகைகள் அவருக்கு சொந்தம்? குழந்தை தரித்துக்கொண்டிருக்கும்போதுகூட பாத்தியதை அவரையே சேர்ந்ததுதான்.

ப: வாஸ்தவம்.

18: இப்பொழுது பிரகிருத விஷயத்தைக் கவனிப்போம். பரம்பொருளாயிருக்கிற, ரூபமற்ற பிரஹ்மம் இந்தத் தகப்பனார்போல, தான் ஒருநாளும், ஒரு விசேஷணத்தையும் ஏற்றுக்கொள்கிறது கிடையாது. ஆனால் ஒவ்வொரு தேவதையும் வஹித்து வரும் எல்லா விசேஷணங்களும் இந்த பிரஹ்மத்திற்கே பாத்தியப்பட்டவைகள். ஒரு பக்தனின் சிரேயஸ்ஸை உத்தேசித்து, ஒரு புராணத்தில் ஒரு தேவதையை உபாஸ்யமென்று சொன்னால், அதில் அந்த தேவதைக்கே அக்கிராஸனம். குழந்தையைப் பார்த்து ஸந்தோஷித்துக் கொண்டிருக்கிற தகப்பனும் ஒதுங்கிப் பின்பக்கம் நிற்கவேண்டியதுதான். இதர தேவதைகளுக்கு ஸாமான்யமாய்ச் சொல்லப்படும் விசேஷணங்களையும் இந்த தேவதைக்கே கொடுத்து அலங்கரிக்கப்படும். ஒரு புராணத்தில் ஒரு தேவதைக்கு பிராதான்யம் கொடுக்கப்பட்டிருக்கிறதென்பதினால், பக்ஷபாதம் என்ற தோஷத்திற்குக் கொஞ்சமேனும் இடம் கிடையாது. இதர புராணங்களில் மற்றத் தேவதைகளைப்பற்றி சொல்ல ஏற்படும்போது, அங்கே அவர்களுக்கு பிராதான்யம் கொடுக்கப்படும் ஒவ்வொரு புராணத்திலும் ஸ்ரீ வியாஸருடைய எண்ணம் இப்படியே. பரம்பொருளுக்கு எவ்வித விசேஷணமாவது, எவ்வித நாமமாவது, ரூபமாவது கிடையாதென்று அவருக்கு தெரியும். இருந்தாலும், அந்தப் பாவனை ஏதோ சிலரைத்தவிர, ஸாதாரணமாக எல்லாருக்கும் ஏற்படுவது ஸாத்திய

மில்லை யென்பதையும் நன்கு உணர்ந்தவராதலால், பக்தர்களின் உபாஸனைக்காக பல தேவதாமூர்த்திகளைச் சொல்லியிருக்கிறார். சுத்த பிரஹ்மத்தின் அம்சபூதர்களாகவே இம்மூர்த்திகள் இருந்தபோதிலும், தாத்காலிகமாக வியவஹாரத்தில் இவைகளை பரம்பொருள் என்று பாவித்துச் சொல்லியிருக்கிறார். அவர் புராணங்கள் எழுதியிருக்கிற மாதிரியில் ஒரு தேவதையைத் தீவிரமாய்ப்பக்தியுடன் உபாஸித்துவரும் பக்தனுக்கு, மற்ற தேவதைகளைத் தனித்தனியே உபாஸிக்க அவசியமன்னியில், அவ்வுபாஸனைகளின் பலனையும் சேர்த்து அடையும்படி ஸௌகர்யம் செய்திருக்கிறார். ஒரே தேவதையை உபாஸிப்பதின் மூலமாகவே, மேல் யத்னம் செய்தால், பரப்ரஹ்மத்தையும் அறியும் யோக்கியதையை அடையலாம். சிரமத்தைக் குறைத்துப் பலனை அதிகப்படுத்திக் கொடுப்பதிலும், பரம்பொருளின் தத்வத்திற்கு பாதகமன்னியில் பக்தனின் யோக்கியதைக்குத் தக்கவாறு, ஸாதனங்களைக் கற்பித்துக் கொடுப்பதிலும், ஸ்ரீ வியாஸருக்கு ஸமமாக யாரும் கிடையாது. அவரை நன்கு தெரிந்துகொள்ளாமல், நமக்குள் வியவஹாரம் செய்துகொண்டால், குற்றம் நம்முடையதே தவிற அவருடையதாகாது. வாஸ்தவத்தில், நாம் அவருக்கு மிகவும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டு இருக்கிறோம்.

---

அத்யாயம் 12

# அத்வைதம்

## 1. அத்வைதம் என்றால் என்ன ?

வேதாந்தக் கிரந்தங்களில் பரிசயமுள்ள ஒரு பிரபு ஒரு நாள் ஸ்ரீ மஹா ஸ்வாமிகளவர்களைப் பார்த்துப் பின்வருமாறு கேட்டார் :—

பி : அத்வைத ஸித்தாந்தத்தை அறிந்துகொள்ள வேண்டிய ஆவலுடன் பல கிரந்தங்களை வாசித்துப் பார்த்ததில், அநேக ஸந்தேஹங்கள் அடிக்கடி ஏற்பட்டுக்கொண்டேயிருக்கின்றன. அவைகளை என்னால் நிவர்த்தி செய்துகொள்ள முடியவில்லை. நான் ஸந்தித்த பல பண்டிதர்களின் உதவியினாலும், அவை நிவர்த்தியாகாமலேயிருக்கின்றன. தாங்கள் தயவு செய்து அத்வைத தத்வத்தை எனக்கு உபதேசிப்பீர்களேயானால், மிகவும் கிருதார்த்தனாவேன்.

ம : ஸாத்தியமானால், அவ்விதமே செய்வதில் எனக்கும் மிகவும் திருப்திதான். ஆனால், என்னால் ஸாத்தியமில்லாமலிருக்கிறதே.

பி : விளையாட்டாகச் சொல்கிறீர்களென்று நினைக்கிறேன். அத்வைத தத்வத்தைப்போதிக்க தங்களுக்கு யோக்கியதையில்லையென்று தாங்கள் சொல்லிவிட்டால், இந்த ஜகத்தில் வேறு யார்தான் அதை நன்கு அறிந்து உபதேசிக்கப் போகிறார்கள்? அதிலும், போதிக்க வல்லமை யாருக்குத்தானிருக்கும் ?

ம: நாம் என்ன செய்யலாம்? விஷயத்தின் தன்மை அவ்விதமிருக்கிறது. அறிந்தேன் என்று சொல்கிறவன் அறியாதவனே என்று உபநிஷத் கோஷிக்கிறது. அத்வைதம் கற்றுக்கொள்ளக்கூடிய விஷயம் இல்லை. ஆகையால் சொல்லிக்கொடுக்கக் கூடிய விஷயமும் இல்லை. தன்னாலேயே அறிந்து கொள்ள வேண்டியதுதான் அதன் தன்மையாகும். ஆகையால், உங்களுக்குச் சொல்லிக் கொடுப்ப தென்பது ஸாத்தியமில்லை. ஆனால், நீங்கள் வேதாந்த கிரந்தங்களை வாசித்து வந்திருப்பதில், எங்கேயாவது மூலத்திலோ வியாக்கியானத்திலோ, ஏதேனும் வாக்கியத்திற்கு அர்த்தம் புரியாமலிருந்து, அதைச் சொல்ல வேண்டுமென்று நீங்கள் கேட்டீர்களேயானால், என்னால் முடிந்தவரையில் அர்த்தம் சொல்லப்பார்க்கிறேன். வார்த்தைகளுக்கு அர்த்தம் சொல்லலாம்; பல வார்த்தைகள் சேர்ந்த வாக்கியத்திற்கும் அர்த்தம் சொல்லலாம்; வாக்கியங்களால் சொல்லப்படும் விஷயங்களைத் தெளிவாகச் சொல்லலாம். இதற்குமேல், அத்வைத தத்வம் இன்னதென்று உங்களுக்குத் தெரியும்படியாய்ச் சொல்லிக் கொடுப்பது ஸாத்தியமேயில்லை. அது வாக்குக்கு விஷயமல்ல; மனதிற்கும் விஷயமல்ல; இவ்விரண்டுக்கும் அதீதமாயிருக்கும் கேவல அனுபவ ரூபமே அது. தித்திப்பு என்றால் என்னவென்று எனக்குத் தெரியாமலிருந்தால், எனக்குத் தெரியும்படி உசிதமான வார்த்தைகளைக்கொண்டு உங்களால் சொல்லமுடியுமா?

பீ: முடியாதுதான்.

ம: தித்திப்பாயிருக்கிற ஒரு பதார்த்தத்தை என் நாக்கில் வைத்தால்தான், தித்திப்பின் தன்மை எனக்குத் தெரியமுடியும்; வார்த்தைகளினால் சொல்லிக்கொடுக்க முடியாது. இன்னொருவரிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்ளவும் முடியாது. ஸாக்ஷாத் அனுபவத்தினாலேயே அதைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஸர்வஸாதாரணமாக இருக்கிற இந்தத் தித்திப்பே வாக்குக்கு எட்டாமலிருக்கும்போது, ஸர்வோத்கிருஷ்ட ரஸமான அத்வைதம் எவ்வளவு மேற்பட்டிருக்கவேண்டும்? கொஞ்ச நாளைக்கு முன்பு இங்கு வந்த ஒரு பிரபுவின் ஞாபகம் வருகிறது. பிராஹ்மணராகப் பிறந்திருந்தபோதிலும், அவருடைய ஸம்ஸ்காரங்களெல்லாம் நவீன மார்க்கத்திலேயே ஏற்பட்டிருந்தனவாகத் தெரிந்தது. பெயருக்குத்தான் பிராஹ்மணர். ஸந்தர்ப்பங்கள் ஒத்துக்கொண்டபடியால், லௌகிகத்தில் நல்ல அந்தஸ்தையும் அடைந்துவிட்டார்; இவ்விடத்திற்கு அவர் வந்தது அதுவே முதல்தடவை; இங்கு நதியிலுள்ள ஸ்வச்சமான தீர்த்தமும், பக்கத்தில் வனராமணீயகமும், சாந்தமான ஸந்நிவேசமும், மற்றும் உள்ள விஷயங்களும் அவர் மனதை மிகவும் கவர்ந்திருப்பதாகத் தெரிந்தது. அவர் என்னிடத்தில் வந்து தன் ஸந்தோஷத்தைத் தெரிவிக்கும்போது "இதென்ன! பிரஹ்மாநந்தமாயிருக்கிறதே!" என்றார். அவருக்கு பிரஹ்மத்தின் ஆனந்தத்தைப்போல இருக்கிறதென்று

தான் தாத்பர்யம். நம் பிராசீன ஸம்பிரதாயத்திற்கு விருத்தமான ஸம்ஸ்காரங்களும், பழக்க வழக்கங்களுமே அவருக்கு ஏற்பட்டிருந்த போதிலும்கூட, எல்லா ஆனந்தங்களுக்குள்ளும் பிரஹ்மானந்தமே மேலானதென்றும், வாக்கால் சொல்ல முடியாத ஒரு ஸந்தோஷத்திற்கு உபமானம் சொல்லவேண்டுமானால், பிரஹ்மானந்தத்தைத்தான் சொல்லலாமென்றும் ஓர் எண்ணம் அவர் மனதில் இன்னம் அழியாமலே இருக்கிறதென்று தெரிந்தது. இதை எதற்காகச் சொல்கிறேனென்றால், ஸாமான்யமான விஷய ஸுகத்தை வர்ணிக்கக்கூட, வார்த்தைகள் போதாதென்று நமக்குத் தோன்றும்போது, ஸரியானபடி போதுமானதாய் ஒரு திருஷ்டாந்தம் வேண்டுமானால், பிரஹ்மானந்தத்தையே உதாஹரிக்கிறோம். பிரஹ்மானந்தமும் அத்வைதமும் ஒன்றே. ஆகையால், அத்வைதமும் வாக்குக்கு எட்டாதென்பது யாவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயம். ஆகையால், அத்வைதத்தைச் சொல்லிக்கொடுக்க வேண்டுமென்று கேட்காதீர்கள். அது ஸாத்தியமேயில்லை. ஆனால், ஏதேனும் ஒரு வாக்கியத்தில் அன்வயம் தெரியவில்லையென்றால் கேளுங்கள். ஸித்தாந்தத்தில் எங்கேயாவது யுக்தியில் ஸந்தேஹம் இருந்தால் கேளுங்கள். பதில் சொல்கிறேன். இவ்வளவுதான் என்னால் செய்யமுடியும்.

பி: தங்கள் அபிப்பிராயம் நன்கு அறிந்துகொண்டேன். வியாகரணம், வாக்கியான்வயம், உப

பத்தி இவைகளிலுள்ள ஸந்தேஹத்திற்காகத் தங்களை சிரமப்படுத்துவது உசிதமாகத் தோன்றவில்லை.

ம: அதனால் பாதகமேயில்லை. இந்த ஸந்தேஹ நிவிருத்தியும் அத்வைதானுபவத்திற்கு உபயோகப் படுமானால், அவசியம் நிவிருத்தி செய்ய வேண்டியது தான்.

பீ: இப்பொழுது நான் புஸ்தகம் ஒன்றும் கொண்டுவரவில்லை. எனக்கு அர்த்தமாகாத வாக்கியங்களை ஞாபகத்திலிருந்து சொல்வதற்கு எனக்குச் சக்தி போதாது.

ம: அப்படியானால் அதை இன்னொரு ஸந்தர்ப்பத்தில் வைத்துக்கொள்வோம். புஸ்தகத்தை திருப்பிப்பார்க்க அவசியமில்லாத ஏதேனும் ஒரு விஷயத்தைப்பற்றி இப்பொழுது விசாரிப்போம்.

பீ: தங்கள் அபிப்பிராயம்போலவே செய்கிறது.

ம: "அத்வைதம்" என்றால் என்னவென்று முதலில் பார்ப்போம். நீங்கள் எப்படி அர்த்தம் நிரூபித்திருக்கிறீர்கள்?

பீ: த்வி என்றால் இரண்டு. த்விதா என்றால் இரண்டாயிருக்கும் தன்மை. த்வைதம் என்றாலும் த்விதா என்றுதான் அர்த்தம். எதில் இரண்டாயிருக்கும் தன்மை கிடையாதோ அதுவே அத்வைதம்— என்று இவ்வாறு நிர்வசனம் செய்யக் கேட்டிருக்கிறேன்.

ம: இது ஸரியே. இரண்டாயிருக்கும் தன்மை யற்றது என்றீர்களே. அது எது?

பி: பிரஹ்மம்தான்.

ம: மிகவும் ஸரி. அதாவது, எந்த ஸத்பதார்த் தத்திலிருந்து இந்த ஜகத்து இருப்பை அடைகிறதோ, எதினால் இருந்துவருகிறதோ, எதில் லயத்தை அடை யுமோ, அதைத்தானே பிரஹ்மம் என்கிறீர்கள்.

பி: ஆம்.

ம: பிரஹ்ம சப்தத்தையும், அதன் தாத்பர்யத் தையும் இப்பொழுது கொஞ்சம் மறந்து பேசுவோம். பொதுவாக, ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம் ஹாரத்திற்குக் காரணமாயிருக்கிற தத்வத்தை அத் வைதம் என்று சொல்கிறீர்கள்.

பி: ஆம்.

ம: அந்தத் தத்வத்தில் இரண்டாயிருக்கும் தன்மை கிடையாது என்கிறீர்கள்.

பி: ஆம்.

ம: அதாவது, அந்தத் தத்வம் ஒன்றுதான் என்கிறீர்கள்.

பி: ஆம்.

ம: அதாவது, அவ்விதம் இரண்டு தத்வங்கள் கிடையாது என்கிறீர்கள்.

பி: ஆம்.

ம: அவ்விதம் இரண்டு தத்வங்கள் கிடையா தென்று சொல்வதினாலேயே, நம் ஸித்தாந்தத்திற்கு அத்வைதம் என்ற பெயர் மிகவும் பொருந்தியிருக்கிறதென்று தங்கள் அபிப்பிராயம்.

பி: ஆம்.

ம: ஸரி. சற்று இதர ஸித்தாந்தங்களைக் கவனிப்போம். கிறிஸ்துவ மதம், மகமதிய மதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம், தர்க்கம், யோகம், முதலானவைகளையும், இன்னம் இதுபோல் ஜகத்துக்கு ஸ்ருஷ்டி ஸ்திதி கர்த்தா ஒருவர் உண்டென்று ஒப்புக்கொள்கிற மற்ற சித்தாந்தங்களையும் பார்ப்போம். அந்த ஸித்தாந்தங்களில் யாராவது இரண்டு தத்வங்கள் உண்டென்று சொல்கிறார்களா? அல்லது, ஒரேமாதிரியாக எல்லாருமே ஒரு தத்வம்தான் உண்டென்று சொல்கிறார்களா?

பி: அநேக ஈசுவரர்கள் உண்டென்று எந்த மதவாதியும் சொல்கிறதில்லை. நம்மைப்போல் ஸ்ருஷ்டிக்கப்பட்ட கோஷ்டியில் சேர்ந்தவர்களான தேவர்கள் அநேகர் என்று சொல்லலாம். பரம்பொருளில் அநேகம் உண்டென்று சொல்வார் ஒருவருமில்லை. அது எப்பொழுதும் ஒன்றே.

ம: ஸரி. ஆகையால், ஈசுவரன் ஸம்பந்தப்பட்டமட்டில், இரண்டு உண்டென்று எந்த ஸித்தாந்தியும் சொல்லவில்லை.

பி: இல்லை.

ம: ஆகையால், இரண்டு ஈசுவரர்கள் கிடையா தென்று சொல்கிற அந்த மதவாதிகள் எல்லாருக்குமே, தங்களால் சொல்லப்படும் தத்வம் அத்வைதம் என்றும், தங்கள் மதமும் "அத்வைதம்" என்றும், சொல்லிக்கொள்ள பாத்தியமில்லையா? அப்படியிருக்க, உங்கள் பரதத்வத்திற்கும், உங்கள் ஸித்தாந்தத்திற்கும் மட்டும் அத்வைத சப்தத்தை உபயோகித்துக் கொள்ள என்ன நியாயம்?

பி: தாங்கள்தான் தெளிவுபடுத்த வேண்டும்.

ம: இன்னொரு சிரமமும் இருக்கிறது. அத்வைத ஸித்தாந்தத்தில்தான், வியாவஹாரிகமாக ஸகுண பிரஹ்மம் என்றும், பாரமார்த்திகமாக நிர்க்குண பிரஹ்மம் என்றும் சொல்கிறோம்.

பி: ஆம்.

ம: இந்த வித்யாஸத்தை இதர மதஸ்தர்கள் ஒப்புக்கொள்கிறதில்லை. பிரஹ்மத்தில் இரண்டுவிதம் உண்டென்று அவர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள்.

பி: வாஸ்தவம்

ம: ஆகையால், உங்களைத்தவிர இதர மதஸ்தர்களெல்லாரும் பரவஸ்து ஒன்றே என்கிறார்கள், நீங்கள் மாத்திரம்தான் ஸகுணம் நிர்க்குணம் என்று இரண்டு பிரஹ்மம் உண்டென்று சொல்கிறீர்கள். நன்கு கவ

னிக்கும்போது, எல்லா ஸித்தாந்தங்களுமே அத்வைதம் என்ற பெயரை வஹிக்க லாயக்குள்ளவைகளாக இருக்கின்றனவென்றும், ஈசுவரன் விஷயமாக அநேகத்வம் சொல்லும் காரணத்தினால் அத்வைதம் என்ற பெயருக்குப் பொருந்தாமல் ஒரு ஸித்தாந்தமிருக்குமேயானால், அது உங்கள் மதம்தான் என்றுமல்லவா ஏற்படுகிறது? இவ்விதமாக, அத்வைத மதம் என்று சொல்லப்படும் ஸித்தாந்தம், அப்பெயரைத் தனக்குமாத்திரம் வைத்துக்கொள்ள பாத்தியமுடையதில்லையென்பதுடனிராமல், அந்தப் பெயரை வைத்துக்கொள்ளவே நியாயமில்லையென்றும் தெரிகிறது. இப்படியிருக்க, அத்வைதம் என்று உங்கள் மதத்தை எப்படிச் சொல்கிறீர்கள்.

பி: இதற்கும் தாங்கள்தான் ஸமாதானம் சொல்லவேண்டும்.

ம: அப்படியல்ல. நீங்களே ஸுலபமாய்ச் சொல்லலாம்.

பி: எப்படி?

## 2. இரண்டற்ற தத்வம்

ம: ஸாதாரணமாக, ஒரு பதார்த்தத்திற்கு ஒரு பெயரைக் கொடுக்கவேண்டுமானால், அப்பெயரால் சொல்லப்படும் லக்ஷணம் அப்பதார்த்தத்தில் மாத்திரம் இருந்தால்தான் நியாயமாகும். அநேக பதார்த்தங்களுக்குப் பொதுவாயிருக்கிற ஒரு லக்ஷணத்தைக் குறிக்கக்கூடிய ஒரு பெயரை, அவைகளில் ஒரு பதார்த்தத்திற்கு மாத்திரம் கொடுக்கலாமா?

பி: கூடாதுதான்.

ம: ஆகையால், ஒரு பெயரால் குறிக்கப்படும் லக்ஷணம் எந்தப்பதார்த்தத்தில் மாத்திரம் இருக்கிறதோ, அப்பதார்த்தத்திற்கே அப்பெயரைக் கொடுக்க வேண்டும்.

பி: வாஸ்தவம்.

ம: இதர ஸித்தாந்தங்களில் இல்லாமல் நம் ஸித்தாந்தத்தில் மாத்திரம் காணப்படும் விசேஷமென்ன?

பி: மாயா நிர்வசனத்தைச் சொல்லலாம்.

ம: அப்படியே. அதையும் அதைச் சேர்ந்தவை களையும்.

பி: அதைச் சேர்ந்தவைகள் எவை?

ம: அதிருக்கட்டும். மாயை என்றால் என்ன?

பி: ஜகத்தில் வேற்றுமைக்குக் காரணமாயிருக்கிற பேதக தத்வம் என்று சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

ம: அசேதனப் பிரபஞ்சத்திலா, சேதனப் பிரபஞ்சத்திலா?

பி: இரண்டிலும். திருக், திருசியம் இரண்டிலுமே நாநாத்வத்திற்கு மாயையே மூலகாரணம்.

ம: மாயை இல்லையானால் நாநாத்வமே இருக்க முடியாது?

பி: அப்படித்தான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ம: அதாவது, மாயை இல்லையானல், ஜடமான பிரபஞ்சம் தனித்து இருக்கமுடியாது.

பி: அப்படியே.

ம: அதேமாதிரி, மாயை இல்லையானல், நாம் இப்பொழுதிருக்கிறமாதிரி, தனித்தனியாக இருக்க முடியாது.

பி: அப்படித்தான்.

ம: அதாவது, பேதத்தை உண்டுபண்ணுகிற தாக மாயை என்று ஒரு தத்வத்தை ஒப்புக்கொள் ளாத விஷயத்தில், பரதத்வமான ஈசுவரனுக்கு எப் படியோ அதேமாதிரி தனக்கும் தனியாக ஸத்தை யுண்டென்று ஜட ஜகத்தும் சொல்லத் தலைப்படும். மண்ணிலிருந்து குடம் செய்கிற குசவனுக்கு ஸமான மான ஸத்தை குடத்திற்குக் காரணமாயிருக்கிற மண் ணுக்கும் இருப்பதுபோல.

பி: வாஸ்தவம். சில ஸித்தாந்தங்களில் இந்தக் குசவனுடைய ஸ்தானத்தையே ஈசுவரனுக்குக் கொடுத்துவிட்டு, ஜகத்திற்கு உபாதான காரணமாக பிரதானம், அணு, அல்லது வேறு எதையாவது சொல்கிறார்கள்.

ம: சில ஸித்தாந்தங்களில், அசேதனத்திற்கு தனியாக ஸத்தை கிடையாதென்றும், ஈசுவரனே

நிமித்த காரணமாயிருப்பதுபோல உபாதான காரண மாயுமிருக்கிறுரென்றும் சொல்கிறுர்கள். அதாவது, அவன் குசவன் மாத்திரம் அல்ல, மண்ணும் அவனே.

பி: ஆம். விசிஷ்டாத்வைதிகள் அவ்விதம் சொல்கிறுர்களென்று நினைக்கிறேன்.

ம: வேறு மதங்களிலும் இவ்விதம் சொல்லப்படு கின்றது. ஜகத்திற்கு ஈசுவரனே நிமித்த காரணம், அவரே உபாதான காரணம் என்று சொன்னுலும் கூட, ஜீவர்கள் அசேதனமில்லாததினுல் ஜீவர்களுக்கு உபாதான காரணமாக ஈசுவரனைச் சொல்வதற்கில்லை. ஜீவர்கள் உண்டுபண்ணப்பட்டவர்களில்லாததினுல், அவர்கள் ஸம்பந்தமாய் ஈசுவரன் நிமித்த காரணமும் ஆகார்.

பி: வாஸ்தவம்.

ம: ஜீவர்கள் உண்டுபண்ணப்பட்டவர்களில்லை யென்று வைத்துக்கொள்வதினுல், அனுதியாக அவர் களும் இருந்தேவருகிறுர்களென்று ஏற்படும். அப்படி யானுல், ஈசுவரனுக்குத் துல்யமாய், ஸமகாலிகமாய், தனித்து இவர்களுக்கும் ஸத்தையுண்டென்று அவர் களுக்கும் சொல்லவேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

பி: அப்படித்தான். எல்லா ஜீவர்களுமே அனுதி யென்றுதான் சொல்கிறுர்கள்.

ம: நாமும் அப்படித்தான் சொல்கிறோம். ஜீவர் களுக்கு அனுதியாக ஸத்தையுண்டென்பதில் அவர்

களுக்கும் நமக்கும் வித்யாஸமில்லை. அனுதியாய், தனித்து, ஜீவஸ்வரூபமாகவே ஸத்தையுண்டென்று அவர்கள் சொல்கிறார்கள். நாமோ என்றால், ஜீவனும் பிரஹ்மஸ்வரூபியாயிருப்பதால் அனுதியென்றும், பிரஹ்மத்தை விட்டுத் தனித்து ஜீவனுக்கு ஸத்தை கிடையாதென்றும் சொல்கிறோம்.

பி: வாஸ்தவம்.

ம: அதாவது, சில ஸித்தாந்தங்களில் பரம் பொருளான ஈசுவரன் ஒருவர் உண்டென்றும், தனியான ஸத்தையுடன் அசேதன ஜகத்தும், தனியான ஸத்தையுடன் ஜீவர்களும் உண்டென்றும், சொல்கிறார்கள். வேறு சில மதங்களில், ஈசுவரனே பரம் பொருள் என்றும், அசேதன ஜகத்திற்கு அவரே உபாதான காரணம் என்றும், அதனால் ஜகத்திற்குத் தனித்து ஸத்தை கிடையாதென்றும். ஆனால் அவ்விதத் தனித்த ஸத்தை ஜீவர்களுக்கு மாத்திரம் உண்டென்றும் சொல்கிறார்கள்.

பி: ஆம்

ம: நம் அத்வைத ஸித்தாந்தம் ஒன்றில்தான், ஈசுவரனை விட்டு அசேதனத்திற்குத் தனி ஸத்தை கிடையாதென்பதுடன், ஈசுவரனை விட்டு ஜீவர்களுக்கும் தனி ஸத்தை கிடையாது என்கிறோம்.

பி: அப்படியே.

ம: பிரஹ்மம் என்று நம்மால் சொல்லப்படுகிற

பாதத்வத்திற்கு வேறாக அசேதன ஜகத்திற்கு ஸத்தை கிடையாதென்பதுடன், ஜீவர்களுக்கும் தனியாக ஸத்தை கிடையாது என்று சொல்லும் அம்சம் அத்வைத ஸித்தாந்தத்தில் மாத்திரம் உள்ளதால், இதுவே அந்த ஸித்தாந்தத்திற்கு அஸாதாரணமான விஷயமாகும்

பி: வாஸ்தவம்.

ம. ஆகையால், இந்த அஸாதாரணமான அம்சம்தான் 'அத்வைதம்' என்ற பெயருக்குக் காரணமாயிருக்கவேண்டும். அதினுல்தான் அந்தப் பெயரை வஹித்துக்கொண்டு இதரர்களாலும் அப்படியே வியவஹரிக்கப்படுகிறது.

பி: ஸரி. அந்த அஸாதாரணமான அம்சத்தை "அத்வைதம்" என்ற பெயர் எப்படிக் குறிக்கிறது?

ம: நீங்களேதான் அத்வைதம் என்பது இரண்டற்ற தன்மையுடையதைக் குறிக்குமென்றீர்களே?

பி: ஆனுல், அநேக ஈசுவரர்களை உலகத்தில் எந்த மதவாதியும் ஒப்புக்கொள்ளவில்லையென்று தாங்கள் எடுத்துக்காட்டினீர்களே?

ம: வாஸ்தவம். "ஈசுவரனில் இரண்டாயிருக்கும் தன்மை கிடையாது" என்பதை "ஈசுவரனில் இரண்டு கிடையாது" என்று நீங்கள் தவறுதலாய் அர்த்தம் செய்து கொண்டபடியால் எனக்குமேல் கேள்விகள் கேட்க அவகாசம் கிடைத்தது. "இரண்டு

ஈசுவரர்கள் கிடையாது" என்பது மாத்திரம் அத்வைத சப்தத்திற்கு அர்த்தமானால், அப்பெயர் நம் மதத்தை மாத்திரம் சேர்ந்ததென்று சொல்ல எவ்வித நியாயமும் கிடையாது. "ஈசுவரனைத் தவிர, இரண்டாவது தத்வம் கிடையாது" என்று அர்த்தம் வைத்துக்கொண்டால், அப்பொழுது அந்தப்பெயரை வஹிக்க நம் மதத்திற்கு மாத்திரம்தான் பாத்தியதையுண்டு; வேறு யாருக்கும் கிடையாது. இந்த அர்த்தத்தில்தான் நம் மதத்தை "அத்வைதம்" என்கிறோம்.

பி: இப்பொழுதுதான் அப்பெயரின் வாஸ்தவ அர்த்தத்தைத் தெரிந்துகொண்டேன். ஆனால், ஜகத்தில் அசேதனங்களிலோ, ஜீவர்களிடத்திலோ, பேதத்திற்குக் காரணமாயிருக்கிற மாயா தத்வம் ஒன்றிருக்கிறதே. அது இரண்டாவது தத்வமில்லையா?

ம: இல்லை. அது இரண்டாவது தத்வமாகாது. பிரஹ்மத்தினுடைய சக்தியென்று அதைப் பாவித்தாலும்கூட, சக்தனாகிற பரமபுருஷனை பிரஹ்மத்தை விட்டு அதற்குத் தனியாக ஸத்தையிருக்க முடியாது. இன்னம் பாரமார்த்திக திருஷ்டியில் கவனித்தால், அதற்கு ஸத்தையே கிடையாது. 'या मा सा माया' (யா மா ஸா மாயா), "எது இல்லையோ அதுவே மாயை" என்ற நிர்வசனத்தினால், அதற்கு இப்பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. நித்ய வஸ்துவான பிரஹ்மத்திலிருந்து, தாத்காலிகமாக ஸத்தையை இரவல்

வாங்கிக்கொண்டு, தானும் இருப்பதுபோலத் தோன்று கிறது. அவ்வளவுதான்.

பி: இந்த மாயா விஷயமானது நவீன வித்வான் களில் அநேகர்களுக்கு வெறும் பீதியை உண்டுபண்ணு கிறது. அத்வைத ஸித்தாந்தம் எவ்வளவோ ஒழுங்கா யிருந்தபோதிலும், இது மாத்திரம் ஒரு துர்பலமான அம்சம் என்றுகூடச் சொல்கிறார்கள்.

ம: அவர்களுடைய பீதி, அத்வைத ஸித்தாந்தத் திற்குக் கிட்டவே வராமல், தூர விலகிக்கொள்ளும் படி செய்துவிட்டால் மிகவும் நல்லதாயிருக்கும். ஸாமான்ய ஜனங்களால், இன்னம் அநேக ஜன்மங் களுக்கு எட்டிக்கூடப் பார்க்கமுடியாத நிலையிலிருந்து அத்வைத ஸித்தாந்தம் பிரவிருத்தித்திருக்கிறது. அதை இப்பொழுது தொடக்கூட அதி காரமில்லை. அப்படியிருக்கும்பொழுது அது சரியா தப்பா என்று தீர்மானிக்க ஆரம்பித்துவிடுகிறார்கள். நாம் தத்காலமிருக்கும் நிலையில், நம்மில் அநேகர்கள் எவ்வளவோ கீழ்ப்படியிலிருக்கிறார்கள். தாக்ஷிண யத்தைவிட்டுக் கவனிப்போமேயானால், ஜீவதத்வத் தைப்பற்றியே நினைக்காத நம்மில் சிலர், நம் ஸ்தூல சரீரமே ஆத்மாவென்று நினைக்கிற சார்வாகனுடைய நிலைக்கு வந்து சேரவே, இன்னம் அநேக ஜன்மங்கள் எடுக்கவேண்டியிருக்கும்.

பி: அவ்வளவு மோசமாகவா இருக்கிறோம்? அந்த நாஸ்திக நாட்களெல்லாம் அநேகமாய் போய்

விட்டன. ஆஸ்திகர்களென்று சொல்லிக்கொள்ளக் கூட எங்களுக்கு யோக்கியதை கிடையாதா?

### 3. ஆஸ்திக்யம்

ம: அவ்வளவு உறுதியாய்ச் சொல்வதற்கில்லை. "ஆஸ்திகர்" என்ற சப்தத்திற்கு என்ன அர்த்தம் என்று நீங்கள் கொஞ்சம் கவனித்துப் பார்த்தீர்களேயானால், உங்களுக்கே, 'நாம் ஆஸ்திகர்' என்று தங்களை சொல்லிக்கொள்ளலாமாவென்று ஸந்தேஹம் வந்துவிடும். ஒரு பதார்த்தம் அஸ்தி—"இருக்கிறது" என்று சொல்கிறவன் "ஆஸ்திகன்". ஒரு பதார்த்தம் நாஸ்தி—'இல்லை' என்று சொல்கிறவன் 'நாஸ்திகன்' என்று ஸாமான்ய நிர்வசனம். நமக்கு முன்னால் ஒரு குடம் வைத்திருக்கிறதாக நினைத்துக்கொள்வோம். அந்தக்குடம் "இருக்கிறது" என்று ஒருவனும், அதே ஸமயத்தில் மற்றொருவன் "இல்லை" என்றும் சொல்ல முடியுமா?

பி: முடியாது. குடம் "இருக்கிறது" என்றால் இரண்டு பேர்களுக்கும்தான் "இருக்கிறது".

ம: அப்படியே, ஹிமய பர்வதம் 'இருக்கிறது' என்று ஒருவன் சொல்ல, அதையொரு நாளும் பார்க்காதவன் "இல்லை" என்று சொல்லலாமா?

பி: அதெப்படிச்சொல்கிறது? தான் பார்த்ததில்லையென்று மாத்திரம் சொல்லலாமே தவிர, இல்லவேயில்லையென்று சொல்லமுடியாது.

ம: அதாவது, ஒரு பதார்த்தம் இருக்கிறது என்று ஒருவன் சொல்லும்போது, அப்பதார்த்தத்தின் இருப்பு மற்றவர்களுக்கெல்லாம் தெளிவாய்ப் புலப்பட்டாலும், அல்லது ஸரிபார்த்துக்கொள்ள ஸாத்தியமாயிருந்தாலும், அப்பதார்த்தம் இல்லையென்று யாரும் சொல்ல முடியாதல்லவா ?

பி: ஆம்

ம: ஆகையால், ஒரு பதார்த்தம் இருக்கிறதா, இல்லையா என்று மனப்பூர்வமாக அபிப்பிராயபேதம் ஏற்பட இடமிருக்கவேண்டுமானால், அந்தப்பதார்த்தம் தெளிவாய்ப் புலப்படாமலிருக்கவேண்டும், அல்லது உடனே ஸரிபார்த்துக்கொள்ள ஸாத்தியமில்லாமல் இருக்கவேண்டும்.

பி: வாஸ்தவம்.

ம: மறுபிறப்பு உண்டு என்ற விஷயம் தெளிவாக எல்லாருக்கும் புலப்படவில்லை, உடனே ஸரிபார்த்துக் கொள்ளவும் முடியாது. இந்தப் பூலோகத்தைத்தவிர அனுபவ யோக்கியமாய் லோகாந்தரங்கள் உண்டென்பதும் தெளிவாய்த் தெரியவில்லை, உடனே ஸரிபார்க்கவும் முடியவில்லை. அதேமாதிரி ஈச்வரன் இருக்கிருரென்ற விஷயமும் எல்லாருக்கும் ஸ்பஷ்டமாகத் தெரியவில்லை, நம்முடைய பரிச்சின்னமான அறிவின் சக்தியைக்கொண்டு ஸரி பார்ப்பதும் ஸாத்தியமில்லாமலிருக்கிறது.

பி: அப்படியே.

ம: ஏதோ ஒரு பதார்த்தம் இருக்கிறது என்று சொல்வதினால் மாத்திரம் ஆஸ்திகன் என்றும், அப் பதார்த்தம் இல்லை என்று சொல்வதினால் மாத்திரம் நாஸ்திகன் என்றும், நாம் வியவஹரிக்கிறதில்லை. மேலே சொல்லிய மூன்று விஷயங்கள், அதாவது ஜன்மாந்தரம், லோகாந்தரம், ஈசுவரன் இவைகள் உண்டென்று சொல்பவனை மாத்திரம் ஆஸ்திகன் என்கிறோம். இம் மூன்றும் கிடையாதென்று சொல் கிறவனை நாஸ்திகன் என்கிறோம். எவ்வளவு படித்த வனாகவேண்டுமானாலும் இருக்கட்டும், இப்பொழு துள்ள மனுஷியர்களின் மனோநிலையைக்கவனிப்போம். அவர்களுடைய நித்திய நடவடிக்கைகளைப்பார்த்தால் ஜன்மாந்தரத்திலாவது, லோகாந்தரத்திலாவது, ஈசுவர னிடத்திலாவது நம்பிக்கை வைத்திருக்கிறார்களென்று நினைக்க இடமிருக்கிறதா? ஸுகமெல்லாம் இப் பொழுது கிடைத்தால் உண்டு, தவறினால் எப் பொழுதும் கிடையாது, என்று நினைப்பதுபோலவே நாளுக்கு நாள் ஸுகத்தைத் தேடுவது ஜாஸ்தியாகிக் கொண்டு வருகிறதே, அதற்குக் காரணம் என்ன? ஜன்மாந்தரம், லோகாந்தரம் இவைகளில் நம்பிக்கை யிருந்துகொண்டிருந்தால், தர்மத்தை வரவர உதா ஸீனம் செய்ய நியாயமுண்டா? ஸகல ஸம்பவங்களுக் கும் ஸாக்ஷியாய், சாசுவதமாய்க் கடவுள் ஒருவர் இருக்கிறாரென்று ஜனங்களுக்கு நம்பிக்கையிருக்குமே யானால், இத்தனை வியவஹார ஸ்தலங்களும், பத்திரப் பதிவுக் கச்சேரிகளும் ஜாஸ்தியாகிக்கொண்டே

வருவதற்கு என்ன காரணம்? வெளிப்படையாக ஜனங்கள் என்ன சொல்லிக்கொண்டபோதிலும், தங்களுக்குள்ளேயே தங்களைப்பற்றி எப்படி நினைத்துக்கொண்டபோதிலும், ஆஸ்திக்யம் நாளுக்கு நாள் அதிவேகமாய்க் குறைந்துகொண்டேதான் வருகிறது என்பதுதான் என் தீர்மானம். மறுபடியும், அந்த ஆஸ்திக்யத்தை உஜ்ஜீவனம் செய்து காப்பாற்றி வருவதற்காகவே நாம் இப்பொழுது பிரயத்தனம் செய்யவேண்டும். நம்மில் பெரும்பாலோருக்கு, பர தத்வம் ஒன்றா, இரண்டா, ஒன்றரையா, என்ற கேள்விகளெல்லாம் கொஞ்சமேனும் பிரயோஜனமில்லை. ஆகையால், இப்பொழுது இவைபோன்ற விசாரங்களைத் தூரவைத்துவிட்டு, தர்மானுஷ்டானத்திலேயே அக்கரையெடுத்துக்கொள்ள வேண்டும். பொய் சொன்னால் தவறு என்று யாரும் அறிவார்கள். இதில் யாருக்கும் கொஞ்சமேனும் ஸந்தேஹம் கிடையாது. அப்படியிருந்தும், பொய் பேசுவது ஜாஸ்தியாகிக் கொண்டே வருகிறது. இன்னொருவனை ஏமாற்றுவது தவறு என்று யாரும் அறிவார்கள். அப்படியிருந்தும், இக்காலத்தில் ஏமாற்றுதலேதான் ஸாதாரணமாக ஜீவனோபாயமாக இருக்கிறது. ஸாமான்ய தர்மத்தின் அடிப்படையான விஷயங்களைக்கூட அனுஷ்டானத்தில் வைத்துக்கொள்ளத் தயாராக இராத ஜனங்களுக்கு, சுத்த பிரஹ்மத்தின் உள் தத்வத்தைப்பற்றி எடுத்துச் சொல்வதில் கொஞ்சமேனும் பிரயோஜனமுண்டா? ஸாமான்ய தர்மங்களை நிரந்தரமாக

அனுஷ்டித்து வந்து, அவரவர்களுக்கு ஏற்பட்ட விசேஷ தர்மங்களை அக்கரையுடன் அனுஷ்டித்து சித்த சுத்தியையும் யோக்கியதையையும் ஏற்படுத்திக் கொண்டபிறகல்லவா அத்வைத ஸித்தாந்தத்தைத் தெரிந்துகொள்ள ஆரம்பிக்க வேண்டியதற்குள்ள அதிகாரம் ஏற்படும்? ஸரியானபடி அதிகார ஸம்பத்துப் பெற்றவர்கள்தான் வாசிக்கலாமென்ற நியாயமான விதியை மீறுவதனுல்தான், இக்காலத்திலுள்ள வியாமோஹங்களெல்லாம் ஏற்படுகின்றன. கொத்து வேலை, தச்சுவேலை முதலிய சிறு காரியங்களுக்குக்கூட, அவரவர்கள் கருவிகளைக் கையாளும் முன்னர், அப்யாஸம் செய்தாக வேண்டியிருக்கிறது. எல்லா வித்யைகளிலும் மேலானதும், மிகவும் சிரமமானதுமான ஆத்ம விஷயமான பிரஹ்ம வித்யையில் மாத்திரம், எல்லாருமே தன்னை அதிகாரியென்று நினைத்து, அத்வைத ஸித்தாந்தம் வாசிக்கப் பாத்தியதையுள்ளவராக தீர்மானித்துக்கொள்கிருர்கள்; தவிர இவர்கள் அதைப்பற்றி அபிப்பிராயம் சொல்லவும் ஆரம்பிக்கிருர்கள். இந்த மனோபாவம் போகவேண்டும். யோக்கியதையை ஸம்பாதித்துக்கொள்ளவே தீவிரமாகப் பாடுபடவேண்டும். சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறபடியும், குரு சொல்லும் பிரகாரமாயும் தவருமல் நடந்துவந்து, அந்த யோக்கியதையை ஸம்பாதிக்க மனப்பூர்வமாக பிரயத்தனம் செய்து வருவோமேயானுல், ஈசுவரனே நமக்கு வழிகாட்டியாயிருந்து மேல் மேல் ஸுலபமாக நம்மை அழைத்துச்சென்று, நம்·

சிரமங்களை நிவர்த்தித்து, நம் ஸந்தேஹங்களைத் தெளியவைத்துக் கொடுப்பார். ஸகலவிதமான சிரமத்திலிருந்தும் தொந்தரவிலிருந்தும் நம்மை விடுவித்து, எல்லாம் ஒருமைப்பட்டு பேதமற்றிருக்கும் பிரஹ்மத்தின் தத்வத்தையும் ஆனந்தத்தையும் நமக்குக் கொடுத்து, அத்வைதமாய் பரமார்த்தமாயிருக்கும் நிலையை ஸாக்ஷாத்கரிக்கும்படி அனுக்ரஹிப்பார்.

தேன் மொழிகள் முற்றிற்று.

